Regd. No. 2975.

ஸ்ரீ:

# SRI RAMANUJAN,

Editor P. B. ANNANGARACHARYA, L. KANCHI.

# ஸ்ரீ ரா மா நு ஜ ன்

ஆசிரியர்ஸ்ரீ காஞ்சீ P. B. அண்ணங்கராசாரியர்.

## விசுவாவசு பங்குனி விசாக விசேஷ மலர்



பொலிக பொலிக பொலிக போயிற்று வல்லுயிர்ச் சாபம்
நலியும் நரகமும் நைந்த நமனுக்கிங்கியாதொன்றுமில்லை
கலியுங்கெடுங்கண்டு கொண்மின் கடல் வண்ணன் பூதங்கள் மண்மேல்
மலியப்புகுந்திசை பாடியாடி யுழிதரக் கண்டோம்.

5—4—1966 ல் வெளியிடப்பட்டது.

விசுவாவஸு பங்குனி விசாக விசேஷ மலரிலுள்ள எழுபத்தைந்து விஷயங்களின் அட்டவணை.



ஸ்ரீ:

ஸ்ரீ காஞ்சி P. B. அண்ணங்கராசாரியரின்

எழுபத்தைந்து விண்ணப்பங்கள்கொண்ட

# ஸ்ரீ வைஷ்ணவ ஹஸ்தபூஷணம்.

ஸ்ரீ ராமாநுஜன் வெளியீடு

விசேஷ மலர்

விசுவாவஸு பங்குனி விசாகம்.

1966

ஸ்ரீவைஷ்ணவஹஸ்தபூஷணத்தில் ஒரு பகுதி.

# வ்ரதோத்ஸவாதி நிர்ணயம்

ஸ்ரீகாஞ்சீபுரம் தேவப்பெருமாள் ஸன்னிதி பஞ்சபர்வோத்ஸவங்களும் மற்றும் நைமித்திகோத்ஸவங்களும் ஆழ்வாராசாரியர்களின் திருநக்ஷத்ரோத்ஸவங்களும் இதில் விளக்கமாகத் தெரிவிக்கப்படும்.

இதை வேறுசிலர் வெளியிட்டாலும் சிலவற்றைத் தவறுதலாகவும் சிலவற்றை விபரீதமாகவுமே வெளியிட்டு வருகிறுர்களென்பதை 13-4-65ல் நாம் வெளியிட்டிருக்கிற உத்ஸவ விளக்கில் விசதமாக விளக்கியிருக்கின்றேம். உலகமெல்லாம் போற்றும், விசேஷித்து ஸ்ரீவைஷ்ணவவுலகம் போற்றும் ஸ்ரீரங்கம் பஞ்சாங்கத்தைத் தழுவி இந்த நிர்ணயம் வெளியிடப்படுகின்றது.

P. B. அண்ணங்கராசாரியார்.



**விசுவாவஸு௵ பங்குனிமீ**

| | |
|---|---|
| 14—3—66 | 1 தி மாதப்பிறப்பு [பல்லவோத்ஸவம்3 |
| 15—3—66 | 2 செ. திருமூலம் |
| 17—3—66 | 4 வி. ஏகாதசி |
| 18—3—66 | 5 வெ. திருவோணம் [பல்ல வோத்ஸவஸமாப்தி |
| 21—3—66 | 8 தி. அமாவாஸ்யை |
| 22—3—66 | 9 செ. உடையார்பாளையம் |
| 23—3—66 | 10 பு. ஸம்வத்ஸராதி |
| 27—3—66 | 14 ஞா. கிருத்திகை |
| 29—3—66 | 16 செ. பங்குனியுத்தரத் திருநாள் தொடக்கம். திருவாதிரை |
| 2—4—66 | 20 ச. ஏகாதசி |
| 4—4—66 | 22 தி. பங்குனி யுத்தரம் நஞ்சீயர் |
| 5—4—66 | 23 செ. மலையாள நாச்சியாளூர் [கோலம் |
| 8—4—66 | 26 வெ. திருவிசாகம். |
| 11—4—66 | 29 தி. திருமூலம் |
| 13—4—66 | 31 பு. மேஷரவி 35-12 |

## பராபவஸ்ரீ சித்திரை மீ

| | |
|---|---|
| April | பங்குனி 31உ பு. வருஷப் [பிறப்பு |
| —4—66 | 1 வி. திருவோணம் |
| —4—66 | 2 வெள்ளிக்கிழமை |
| 4 66 | 3 ச. ஏகாதசி |
| —4—66 | 4 ஞா. எம்பெருமானருத் [ஸவாரம்பம் |
| —4—66 | 7 பு. அமா. விளக்கொளி |
| —4—66 | 9 வெள்ளிக்கிழமை |
| —4—66 | 10 ச. கிருத்திகை |
| —4—66 | 11 ஞா, மதுரகவிகளுத்ஸ [வாரம்பம் |
| —4—66 | 13 செ. எம்பெருமானர் |
| —4—66 | 14 பு. யதோக்தகாரி திருவ வதாரம் முதலியாண்டான் |
| —4—66 | 16 வெ. ஸ்ரீராமநவமி |
| May —5—66 | 18 ஞா. ஏகாதசி |
| —5—66 | 19 தி. திருவவதாரம் |
| —5—66 | 20 செ. மதுரகவிகள் அனந்தாழ்வான் |
| —5—66 | 21 பு. சித்ராபௌர்ணமி |
| —5—66 | 22 வி. திருவிசாகம் |
| —5—66 | 23 வெ. தோட்டவுத்ஸவம் |
| —5—66 | 25 ஞா. திருமூலம் |
| —5—66 | 29 வி. திருவோணம் |
| —5—66 | 30 வெள்ளிக்கிழமை |

## வைகாசி மீ

| | |
|---|---|
| 14—5—66 | 1 ச. மாதப்பிறப்பு |
| 16—5—66 | 3 தி. ஏகாதசி |
| 18—5—66 | 5 பு. வஸந்தோத்ஸவாரம் [பம் |
| 20—5—66 | 7 வெ. அமா. கிருத்திகை |
| 23—5—66 | 10 தி. நம்மாழ்வாருத்ஸ [வாரம்பம். திருவாதிரை |
| 24—5—66 | 11 செ. வஸந்தோத்ஸவ [ஸமாப்தி |
| 27—5—66 | 14 கடைவெள்ளி |
| 28—5—66 | 15 ச. செல்வருத்ஸவம் |
| 29—5—66 | 16 ஞா. அங்குரார்ப்பணம் |
| 30—5—66 | 17 தி. ஆழ்வார்திருநாள் |
| 31—5—66 | 18 செ. த்வஜாரோஹணம் |
| June 1—6—66 | 19 பு. நம்மாழ்வார் |
| 2—6—66 | 20 வி. பெரிய திருவடி. [நரஸிம்ஹ ஜயந்தி |
| 5—6—66 | 23 ஞா. திருமூலம் |
| 6—6—66 | 24 தி. திருத்தேர் |
| 8—6—66 | 26 பு. திருவோணம் [தீர்த்தம் |
| 9—6—66 | 27 வி. திருவாய்மொழித் [திருநாள் |
| 12—6—66 | 30 ஞா. விடாயாற்றி சாத்து |

ஸ்ரீ வைஷ்ணவஹஸ்தபூஷணம்—வ்ரதோத்ஸவாதி நிர்ணயம்

## பராபவஸ்ரீ ஆனி மீ

| | |
|---|---|
| 15—6—66 | 1 பு. மாதப் பிறப்பு |
| 17—6—66 | 3 வெ. க்ருத்திகை |
| 18—6—66 | 4 ச. அமாவாஸ்யை |
| 19—6—66 | 5 ஞா. வடக்குத்திருவீதிப் பிள்ளையுத்ஸவாரம்பம் |
| 20—6—66 | 6 தி. திருவாதிரை |
| 21—6—66 | 7 செ. கோடை யுத்ஸவா ரம்பம்; நாதமுனிகளுத் ஸவாரம்பம் |
| 27—6—66 | 13 தி. கோடையுத்ஸவ [ஸமாப்தி |
| 28—6—66 | 14 செ. பெரியாழ்வார், ஆனிகருடன். வடக் குத் திருவீதிப் பிள்ளை |
| 29—6—66 | 15 பு ஏகாதசி திருவிசாகம் |
| 30—6—66 | 16 வி. ஸ்ரீமந்நாதமுனிகள் |
| July 1—7—66 | 17 வெள்ளிக்கிழமை |
| 2—7—66 | 18 ச. பௌர்ணமி திருமூலம் |
| 5—7—66 | 21 செ. திருவோணம், ஜ்யேஷ்டாபிஷேகம் |
| 12—7—66 | 28 செ. திருவாடிப்பூரம் [தொடக்கம் |
| 16—7—66 | 32 ச. கர்க்கடரவி 31-34 |

## ஆடி மீ

| | |
|---|---|
| 21—7—66 | 5 வி. திருவாடிப்பூரம் |
| 22—7—66 | 6 வெ. ஆண்டாள் [ஊர்கோலம் |
| 26—7—66 | 10 செ. திருவிசாகம் |
| 29—7—66 | 13 வெ. திருமூலம் |
| 31—7—66 | 15 ஞா. ஆளவந்தார் |
| August 1—8—66 | 16 தி. ஆடிகருடன் [கஜேந்திர மோக்ஷம் |
| 2—8—66 | 17 செ. திருவோணம் |
| 6—8—66 | 21 ச. அண்ணுவுத்ஸவம் [தொடக்கம் |
| 15—8—66 | 30 தி. அண்ணுசாத்து [முறை |
| 16—8—66 | 31 செ. அமாவாஸ்யை |

குறிப்பு:— தேவப்பெருமாளுக்கு வருஷத்தில் மூன்று கருடோத்ஸவங்களுண்டு; வைகாசிமீ கருடோத்ஸவம் மட்டும் காலை நடைபெறுவது. ஆனிமாதத்தில் பெரியாழ்வார் சாத்துமுறைக்கான கருடோத்ஸவமும், ஆடிமாதத்தில் கஜேந்திரமோக்ஷத்திற்கான கருடோத்ஸவமும் இரவில் நடைபெறுவது.

## பராபவஹு ஆவணி மீ

| | |
|---|---|
| 17—8—66 | 1 பு. மாதப்பிறப்பு |
| 19—8—66 | 3 வெள்ளிக்கிழமை |
| 20—8—66 | 4 ச. ஹஸ்தம் |
| 23—8—66 | 7 செ. திருவிசாகம் |
| 26—8—66 | 10 வெ. ஏகாதசி திருமூலம் |
| 29—8—66 | 13 தி. திருவோணம் |
| 30—8—66 | 14 செ. *பவித்ரோத்ஸ வாரம்பம் பெரியவாச்சான் பிள்ளை யுத்ஸவாரம்பம். யஜுருபாகர்மம். |
| September | |
| 5—9—66 | 20 தி. பூர்ணாஹுதி |
| 7—9—66 | 22 பு. பெரியவாச்சான் [பிள்ளை |
| 8—9—66 | 23 வி. ஸ்ரீஜயந்தி |
| 9—9—66 | 24 வெ. உறியடி திருவாதிரை |
| 11—9—66 | 26 ஞா. ஏகாதசி |
| 14—9—66 | 29 பு. அமாவாஸ்யை |
| 16—9—66 | 31 வெ. ஹஸ்தம் |

* இந்த தேவஸ்தானத்தில் பருவங்களுக்குப் புச்சம் கணக்காதலால் 15௨ பௌர்ணமி 0-13 விநாடி புச்சமிருப்பதால் அப்போது பவித்ரோத்ஸவானுஷ்டான மெப்படியாகுமோ? நடத்தையில் பார்த்துக் கொள்வது.

## புரட்டாசி மீ

| | |
|---|---|
| 17—9—66 | 1 ச. மாதப்பிறப்பு |
| 19—9—66 | 3 தி. திருவிசாகம் |
| 22—9—66 | 6 வி. திருமூலம் |
| 23—9—66 | 7 வெள்ளிக்கிழமை |
| 25—9—66 | 9 ஞா. ஏகாதசி, திருவோ [ணம், தேசிகர். |
| 29—9—66 | 13 வி. பௌர்ணமி |
| 30—9—66 | 14 வெள்ளிக்கிழமை |
| October | |
| 4—10—66 | 18 செ. க்ருத்திகை |
| 7—10—66 | 21 வெ. திருவாதிரை |
| 10—10—66 | 24 தி. ஏகாதசி |
| 13—10—66 | 27 வி. பொய்கையாழ்வார், பிள்ளை லோகாசாரியர் உத்ஸவாரம்பம் |
| 14—10—66 | 28 வெ. நவராத்ரி தொடக் [கம் |

குறிப்பு:- அடுத்த ஐப்பசிமாதத்தில் இரண்டு திருமூலம் வருகிறது. முடிவில் வருகிறதிருமூலந்தான் மணவாளமா முனிகளின் திருவவதாரமான ஜகதப்புதயைக மூலம். ஆனாலும் முதலில் வருகிற திருமூலமும் ஐப்பசித் திருமூலமேயாதலால் அதுவும் கொண்டாடத்தக்கது.



## பராபவஹு ஐப்பசி மீ

| | |
|---|---|
| 17—10—66 | 1 தி. துலாஸங்க்ரமணம் |
| 19—10—66 | 3 பு. முதல்திருமூலம் |
| 20—10—66 | 4 வி. ஸேனை முதலியார் |
| 22—10—66 | 6 ச. மஹாநவமி பொய்கையாழ்வார் பிள்ளை [லோகாசாரியர் |
| 23—10—66 | 7 ஞா. விஜயதசமி [பூதத்தாழ்வார் |
| 24—10—66 | 8 தி. பேயாழ்வார் |
| 25—10—66 | 9 செ. ஏகாதசி |
| 28—10—66 | 12 வெள்ளிக்கிழமை |
| 29—10—66 | 13 ச. பௌர்ணமி |
| 31—10—66 | 15 தி. கிருத்திகை |
| November | |
| 3—11—66 | 18 வி. திருவாதிரை |
| 4—11—66 | 19 வெள்ளிக்கிழமை |
| 6—11—66 | 21 ஞா, மணவாளமாமுனி [கள் உத்ஸவாரம்பம் |
| 9—11—66 | 24 பு. ஏகாதசி |
| 10—11—66 | 25 வி. ஹஸ்தம் |
| 11—11—66 | 26 வெ. தீபாவளி |
| 12—11—66 | 27 ச. அமாவாஸ்யை |
| 13—11—66 | 28 ஞா. திருவிசாகம் |
| 15—11—66 | 30 செ. மணவாள [மாமுனிகள் |

## கார்த்திகை மீ

| | |
|---|---|
| 16—11—66 | 1 பு மாதப்பிறப்பு மணவாள மாமுனிகள் [இயல் சாத்து. |
| 18—11—66 | 3 வெள்ளிக்கிழமை நம்பிள்ளை யுத்ஸவாரம்பம் |
| 19—11—66 | 4 ச. திருவோணம் |
| 23—11—66 | 8 பு. ஏகாதசி |
| 24—11—66 | 9 வி. கைசிகம் |
| 25—11—66 | 10 வெள்ளிக்கிழமை |
| 26—11—66 | 11 ச. அருளாளப் பெருமா [ளெம்பெருமானார் |
| 27—11—66 | 12 ஞா. திருமங்கை [மன்னன் நம்பிள்ளை |
| 28—11—66 | 13 தி. திருப்பாணாழ்வார், [திருக்கார்த்திகை |
| 30—11—66 | 15 பு. திருவாதிரை |
| December | |
| 10—12—66 | 25 ச. திருவிசாகம் |
| 11—12—66 | 26 ஞா அமா. விசேஷோத் [ஸவம் |
| 12—12—66 | 27 தி கோயில் திருநெடுந் [தாண்டகம் |
| 13—12—66 | 28 செ. பகற்பத்து [தொடக்கம் திருமூலம் |

## பராபவஹூ மார்கழி மீ

| | |
|---|---|
| 6—12—66 | 1 வெ. மார்கழித்திங்கள் பகற்பத்து 4 திருவோணம் |
| 2—12—66 | 7 வி. பகற்பத்து சாத்து [மறை |
| 3—12—66 | 8 வெ. வைகுண்ட [ஏகாதசி |
| 5—12—66 | 10 ஞா. கிருத்திகை |
| 8—12—66 | 13 பு திருவாதிரை |
| January | |
| 1—1—67 | 17 ஞா. திருவாய்மொழி [சாத்துமுறை |
| 2—1—67 | 18 தி. இயல்சாத்து |
| 3—1—67 | 19 செ. திருப்பல்லாண்டு |
| 4—1—67 | 20 பு. மார்கழி நீராட்டத் [தொடக்கம் |
| 6—1—67 | 22 வெ. திருவிசாகம் |
| 8—1—67 | 24 ஞா. தொண்டரடிப் [பொடியாழ்வார் |
| 9—1—67 | 25 தி. திருமூலம் |
| 10—1—67 | 26 செ. அமாவாஸ்யை |
| 12—1—67 | 28 வி. திருவோணம் |
| 13—1—67 | 29 வெ. போகி திருக் [கலியாணம் |

## தை மீ

| | |
|---|---|
| 14—1—67 | 1 ச. ஸங்க்ரமணம். திருப்பாவை சாத்துமுறை [ஆண்டாளுூர்கோலம் |
| 15—1—67 | 2 ஞா. ஜீயர்புரோத்ஸவம் |
| 21—1—67 | 8 ச. க்ருத்திகை |
| 22—1—67 | 9 ஞா ஏகாதசி |
| 24—1—67 | 11 செ திருவாதிரை. குரு [புஷ்யாரம்பம் |
| 25—1—67 | 12 பு. எம்பார் |
| 26—1—67 | 13 வி தெப்பவுத்ஸவம் (3 நாள்) குருபுஷ்யம் |
| 28—1—67 | 15 ச. திருமழிசையாழ்வார் தெப்பவுத்ஸவம் 3-ம் [நாள் |
| 31—1—67 | 18 செ. கூரத்தாழ்வான் |
| February | |
| 3—2—67 | 21 வெ. திருவிசாகம் |
| 5—2—67 | 23 ஞா. ஏகாதசி |
| 6—2—67 | 24 தி. திருமூலம் |
| 9—2—67 | 27 வி. அமா. திருவோணம் [வனபோஜனம் |
| 10—2—67 | 28 வெள்ளிக்கிழமை |
| 12—2—67 | 30 ஞா. மாசி மாதப்பிறப்பு |

## பராபவஹூ மாசி மீ

| | |
|---|---|
| 16 2 67 | 4 வி. ரதஸப்தமி |
| 17 2 67 | 5 வெ. க்ருத்திகை |
| 19 2 67 | 7 ஞா. திருக்கச்சிநம்பிகள் |
| 20 2 67 | 8 தி தென்னேரித் [தெப்பம் |
| 21 2 67 | 9 செ ஏகாதசி குலசேக [ராழ்வார் |
| 24 2 67 | 12 வெ. ராய்ஜீகுளத் [தெப்பம் |
| 25 2 67 | 13 ச. தவன வுத்ஸவம் [3 நாள் |
| March | |
| 2 3 67 | 18 வி. திருவிசாகம் |
| 3 3 67 | 19 வெள்ளிக்கிழமை |
| 5 3 67 | 21 ஞா. திருமூலம் |
| 7 3 67 | 23 செ ஏகாதசி |
| 8 3 67 | 24 பு திருவோணம் |
| 10 3 67 | 26 வெ. அமா. விரதம் |
| 11 3 67 | 27 ச. அமா. உத்ஸவம் |
| 14 3 67 | 30 செ. பங்குனிமாதப் [பிறப்பு |

## பங்குனி மீ

| | |
|---|---|
| 17 3 67 | 3 வெ. கிருத்திகை |
| 19 3 67 | 5 ஞா. பங்குனி யுத்தரம் [தொடக்கம் |
| 20 3 67 | 6 தி. திருவாதிரை |
| 22 3 67 | 8 பு. ஏகாதசி |
| 25 3 67 | 11 ச. பங்குனி யுத்தரம், [நஞ்சீயர் |
| 26 3 67 | 12 ஞா. மலையாளநாச்சி [யாரூர்கோலம் |
| 29 3 67 | 15 பு. திருவிசாகம், பல்லவோத்ஸவத் [தொடக்கம் |
| April | |
| 1 4 67 | 18 ச. திருமூலம் |
| 4 4 67 | 21 செ. பல்லவோத்ஸவ [ஸமாப்தி |
| 9 4 67 | 26 ஞா. அமா. உடையார் [பாளையம் |
| 10 4 67 | 27 ச. ஸம்வத்ஸராதி |
| 13 4 67 | 30 வி. க்ருத்திகை |
| 14 4 67 | ப்லவங்கஹூ சித்திரைமீ 1. வருஷப் பிறப்பு |

# ஸ்ரீ காஞ்சி P. B. அண்ணங்கராசாரியர் பதிப்பு நூல்கள்

1. நாலாயிர திவ்யப் பிரபந்தங்களெல்லாவற்றுக்கும் திவ்யார்த்த தீபிகை யென்கிற விரிவான உரை ரூ. 70-00 நாலாயிர திவ்வியப் பிரபந்தம் மூலம் ரூ. 8-00

2. ஆளவந்தார், உடையவர், கூரத்தாழ்வான், பட்டர், தேசிகர், மணவாள மாமுனிகள், அஷ்டதிக்கஜாசாரியர்கள் மற்றும் பல ஆசாரியர்களும் அருளிய ஸகல ஸ்தோத்ரங்களுக்கும் பதவுரை, பொழிப்புரை விசேஷவுரைகள் ரூ. 25-00.

3. முமுக்ஷுப்படி, தத்வத்ரய, ஸ்ரீவசனபூஷண, ஆசார்யஹ்ருதய ரஹஸ்யங்களுக்கு ஸாரார்த்த விளக்கவுரை ரூ. 10-00. இந்த நான்கு ரஹஸ்யங்களும் மூலம் ரூ. 2-50.

4. ஈடு முப்பத்தாறுயிரப்படி (அதாவது பகவத் விஷயம் பூர்த்தியாக) இரண்டு வால்யம் ரூ. 25-00 (தெலுங்கு லிபியிலுமுண்டு)

5. வான்மீகி ராமாயணம் உத்தரகாண்டமுட்பட பூர்த்தியாக வசனநூல். ரூ. 8-00. ஆழ்வாராசாரியர்களின் வைபவ நூல்கள் ரூ. 3-00. தேவப்பெருமாள் வைபவமும் தேவப்பெருமாள் ஸன்னிதி வரலாறுகளும் ரூ. 2-50. தென்னாசார்ய ஸம்பிரதாய ஸாரார்த்தங்களடங்கிய 10 நூல்கள் ரூ. 10-00. பலகைப்பட்ட விவாதங்களைப் பரிசீலனைசெய்த நூல்கள் இருபது ரூ. 15-00. கம்பரின்பக் கவித்திரட்டு (பால—அயோத்யா காண்டங்கள்.) ரூ. 2-00. க்ருஷ்ண யஜுர் வேதத்தில் பலவகையாராய்ச்சிகள் வடமொழியிலும் தென்மொழியிலும் ரூ. 5-00. அறுபத்திரண்டு உபந்யாஸமாலை, உபந்யாஸ சதத்வயம், அஷ்டாத சாஷ்டாதச மஹார்த்த நிதியென்கிற 324 மஹார்த்தங்கள்............ இவையெல்லாம் உபந்யாஸகர்களுக்கு மஹோபகாரமளிப்பவை ரூ. 10-00. விரிவான கியாடலாக் தருவித்துப் பார்க்கவேண்டியது.

6. தமிழ், ஸம்ஸ்கிருதம், ஹிந்தி, தெலுங்கு ஆகிய நான்கு பாஷைகளிலும் பல நூல்களும் மாதப் பத்ரிகைகளும் உண்டு. கிடைக்குமிடங்கள் (1) க்ரந்தமாலா ஆபீஸ், சின்ன காஞ்சீபுரம். (2) ஸத்க்ரந்தப்ரகாசன ஸபை. 213, கோவிந்தப்ப நாய்க்கன் தெரு, ஜி. டி. மதராஸ்.

6—3—66

இப்படிக்கு,
P. B. அண்ணங்கராசாரியர்,
சின்ன காஞ்சீபுரம்.

ஸ்ரீ
பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்



ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்

**ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியார் 8—4—66ல் தமது எழுபத்தைந்தாவது பிராயப்பூர்த்தியை முன்னிட்டு அளிக்கும்**

# ஸ்ரீவைஷ்ணவ ஹஸ்தபூஷணம்

**எழுபத்தைந்து ஸம்வத்ஸர பூர்த்தியையுத்தேசித்து வெளியிடுவதால் இதில் எழுபத்தைந்து விண்ணப்பங்கள் வெளிவரும்.**

1. இந்த விண்ணப்பமாலையை நாம் மாசித் திருவோணத்தன்று எழுதத் தொடங்குவதால் அன்று திருவவதரித்த பொய்கையாழ்வாரைப்பற்றி முதல் விண்ணப்பம் செய்கிறேன். இவ்வாழ்வார் அயோநிஜர். கர்ப்பவாஸம் பண்ணாமல் பொய்கைத் தாமரை மலரில் திருவவதரித்தவர். அப்படியிருக்க இவர் தமது திருவந்தாதியில் (பா-6) *அன்று கருவரங்கத்துள் கிடந்து கைதொழுதேன் கண்டேன், திருவரங்கமேயான் திசை* என்றருளிச் செய்கிறார். கர்ப்ப ஸ்தானத்திலிருக்கும்போதே திருவரங்கம் பெரியகோயிலைத் தொழப்பெற்றவன் நான் என்றபடி. கர்ப்பவாஸம் செய்யாதவிவர் இங்ஙனமருளிச்செய்வது பொருந்துமோ? என்று சங்கிக்க நேரும் (ஸமாதானம்.) எவ்விடத்தில் நின்று அவதாரமோ அவ்விடமே கர்ப்பஸ்தானமெனப்படும். இவ்வாழ்வாருடைய வாழித் திருநாமத்தில் *வனசமலர்க் கருவதனில் வந்தமைந்தான் வாழியே* என்றிருப்பதுங்காண்க. தாமரை மலர்தான் இவர்க்கு கர்ப்பஸ்தானமெனப்படுவது. அதிலிருக்கும்போதே பகவத் விஷயத்திலீடுபட்டவரென்கை. இவரைப்போலவே அயோநிஜரான

பூதத்தாழ்வாரும் தமது திருவந்தாதியில் (பா-87.) *அன்று கருக்கோட்டியுள் கிடந்து கைதொழுதேன் கண்டேன், திருக்கோட்டியெந்தை திறம்* என்றார். கர்ப்பஸ்தானத்திலிருக்கும்போதே திருக்கோட்டியூரைத் தொழப்பெற்றேனென்கை. அங்கும் சங்காஸமாதானங்கள் துல்யமே. இவர் தாம் அவதரித்தவிடமான குருக்கத்தி மலரே கர்ப்பஸ்தானமாகக் கருதப்பட்டது. பேயாழ்வாரோவென்னில் *இன்றேகழல் கண்டேனென்கிறார்.

2. பிள்ளைலோகாசாரியரும் திருவோணத்தில் திருவவதரித்தவராதலால் அவ்வாசிரியரைப்பற்றியும் சிறிது பேசுகிறேன். இவரருளிச்செய்த அஷ்டாதச ரஹஸ்யங்களுள் ஸ்ரீவசனபூஷணம் ஒப்புயர்வற்றதென்று உபதேசரத்தினமாலையில் மணவாளமாமுனிகளால் புகழப்படுகிறது. ஸ்ரீவசனபூஷணத்தின் திவ்யார்த்தங்களை அறியப்பெறுவதும் அரிது; அனுட்டான முகத்தால் காட்டுவதும் அரிது என்றுமருளிச் செய்கிறார் மாமுனிகள்தாமே. *ஆர் வசனபூடணத்தின் ஆழ்பொருளெல்லாமறிவார்? ஆர்அது சொல் நேரிலனுட்டிப்பார்* என்பது அவருடைய பாசுரம். அனுட்டிக்கவரிதான விஷயங்களில் ஒன்று கேண்மின்; (365.) "குற்றஞ்செய்தவர்கள் பக்கல் பொறையும் க்ருபையும் சிரிப்பும் உகப்பும் உபகார ஸ்மிருதியும் நடக்கவேணும்" என்பது சூர்ணை. இருள்தருமா ஞாலத்தில் பிறந்தவர்களுக்குக் குற்றம் செய்கை ஸஹஜம். அப்படி குற்றம் செய்தவர்களுக்கு ஆந்தனையும் ப்ரதிக்ரியை பண்ணுவதும் ஸஹஜம் ஒரு குற்றம் செய்தவர்களுக்கு பிரதியாகப் பல குற்றங்கள் செய்யத் துணிந்திருப்பார் மலிந்த இந்நிலத்திலே க்ஷமை காட்டுவது, க்ருபை காட்டுவது, உகப்பு காட்டுவது, உபகாரஸ்மிருதி காட்டுவது என்னுமிவை ஸம்பாவிதமோ? இதனை ஆரேயனுட்டிக்கவல்லார்?

3. ஸ்ரீமந்நிகமாந்த மஹாகுரு திருவவதரித்ததும் திருவோணத்திலாதலால் அவ்வாசிரியருடைய ஸ்ரீ ஸூக்திக் கடலில் ஒரு திவலையையநுபவிக்கிறேன். ஸ்வாமியின் க்ருதிகளில் ஸங்கல்பஸூர்யோதயமென்பது ஒரு நாடகம். இதில் அநேகபாத்ரப்ரவேசமாகி அநேக தத்துவங்கள் வெளியிடப்படுகின்றன. அந்த பாத்ரப்ரவேசக்ரமத்தில் **அஸூயாதேவி** ஒரு பாத்திரமாகவந்து நின்று (5-30) *மயி தத்தாவதாநாயாம் விச்வதோஷாபஹாரிணா, ந சக்யமீச்வரேணாபி நிரவத்யேந வர்த்திதும்* என்கிறாள். அஸூயையின் வார்த்தையானவிதன்பொருளென்னவென்றால், நான் உறங்கிப்போனால் எல்லாரும் நல்லபேர் எடுத்துவிடமுடியும்; நான் ஜாக்ரத்தையுடனிருந்தேனாகில் ஒன்றான ஸர்வேச்வரன்கூட நல்லபேர் எடுக்க முடியாதென்பதாம். இதனால் தேறுவதென்ன? அஸூயையுள்ளவர்கள் யாரை



யும் நிந்திக்காமல் குறைகூறாமல் விடமாட்டார்கள்; கிம்பஹுநா? *குணாநாமாகரோ மஹாந் *உயர்வறவுயர் நலமுடையவன்* என்னப்பட்ட ஸர்வேச்வரனையும் விடமாட்டார்களென்கை. இந்த ச்லோகத்தோடுகூடவே (31) *நிரவதி குணக்ராமே ராமே நிராகஸி* என்ற சுலோகத்தையுஞ்சேர்த்துச் சிந்தனை செய்க. இராமபிரான் *அன்று சராசரங்களை வைகுந்தத்தேற்றித் தன்தாமமேவி எத்தனையோயுகமானாலும் இன்னமும் அப்பெருமான்மீதுமன்றோ வசை பாடுகின்றார்கள். "**வரதநுஹதிம் வாலித்ரோஹம மநாகபஸர்ப்பணம்**" என்று வசைபாடும் விஷயங்கள் மூன்றெடுத்துக் காட்டியுள்ளார் ஸ்வாமி. ... ❋

4. **[சித்திரையில் செய்ய திருவாதிரை.]** ஸ்வாமியெம்பெருமானார் மஹோத்ஸவம் 17—4—66ல் தொடக்கமாகி 26—4—66 திருவாதிரையில் சாத்துமுறையாகிறது. ப்ரஸித்தஸூர்யன் ஒருவன் (ஆகாசஸ்தன்); இதிஹாஸபுராண ஸூர்யர் இருவர்; ஸ்ரீராமாயணத்தில் *சரஜாலாம்சுமாந் சூர: கபே! ராமதிவாகர:* என்று பிராட்டி திருவடிக்குச்சொன்ன ராமதிவாகரனும், *ததோகிலஜகத்பத்மபோதாய **அச்யுதபாநுநா**, தேவகீபூர்வஸந்த்யாயாம் ஆவிர்ப்பூதம் மஹாத்மநா* என்று புராணரத்னமான ஸ்ரீ விஷ்ணுபுராணத்தில் ஸ்ரீபராசரபகவான் தெரிவித்த அச்யுதபாநுவும். இனி ஸம்ப்ரதாய ஸூரியர்கள் மூவர். 1. *தஸ்மை நமோ வகுலபூஷணபாஸ்கராய* என்கிற (நம்மாழ்வாராகிற) வகுளபூஷண பாஸ்கரன். 2. *கலயாமி கலித்வம்ஸம் கவிம் லோகதிவாகரம்* என்கிற (திருமங்கையாழ்வாராகிற) லோகதிவாகரன். 3. *புண்யாம்போஜவிகாஸாய பாபத்வாந்தக்ஷயாய ச, ஸ்ரீமாநாவிரபூத் பூமௌ ராமாநுஜதிவாகர:* என்கிற (எம்பெருமானாராகிற) ராமாநுஜதிவாகரன். *புண்யாம்போஜவிகாஸாய* என்றதில் ஒரு விசேஷமுண்டு. ஆளவந்தாருடைய சரமதிருமேனியிலே மூடியிருந்த கராம்போஜம் விகஸிக்கவன்றோ இந்த திவாகரோதயமாயிற்று. இந்த திவாகரனுடைய இவ்வாண்டு மஹோத்ஸவம் திவாகரதினத்தில் [ஞாயிற்றுக்கிழமையன்று] தொடக்கமாகிறதென்பது விசேஷம். ... ... ... ... ❋

5. **மணவாளமாமுனிகள் மஹோத்ஸவம்.** ப்ரஸங்காத் தத்புநரவதாரபூதரான மணவாளமாமுனிகளின் மஹோத்ஸவப்ரஸ்தாவமும் ப்ராப்தமாகிறது. இவ்விரு மஹோத்ஸவங்களுக்கும் தைவிகமானவொரு பொருத்தம் தெரிவிக்கிறேன். சென்றவாண்டில் ஐப்பசி மாதத்தில் எந்த தேதியில் மணவாள மாமுனிகளின் மஹோத்ஸவத்தொடக்கமோ, அடுத்த ஸம்வத்ஸரத்தில் சித்திரை மாதத்தில் அந்த தேதியிலேயே எம்பெருமானார் மஹோத்ஸவம் தொடக்கமாகும். விச்வாவசுவில்

பராபவஹு என்கிற இரண்டு வருஷங்களின் பஞ்சாங்கத்தை வைத்துக்கொண்டு பார்ப்பது. விச்வாவஸுஹு ஐப்பசிமீ நாலாந்தேதியன்று மணவாளமாமுனிகளின் மஹோத்ஸவம் தொடக்கம். அதற்குப் பிறகு வருகிற சித்திரைமீ அவ்வருஷத்தைச் சேர்ந்ததாக இருக்கமுடியாதே; பராபவ வருஷத்தைச் சேர்ந்ததன்றோ. அதில் நாலாந்தேதியன்றுதான் எம்பெருமானார் மஹோத்ஸவம் தொடக்கமாகும். இத்தகைய பொருத்தம் நாம் காட்டுவது ஒன்றிரண்டு வருஷங்களிலன்று. அறுபதாண்டு பஞ்சாங்கங்களையும் காப்பாற்றி வைத்துக்கொண்டிருப்பவர்கள் பலருண்டே. பிரபவ வருஷத்துப் பஞ்சாங்கத்தையும் விபவ வருஷத்துப் பஞ்சாங்கத்தையுமெடுத்துப்பார்ப்பது; சித்ரபாநு வருஷத்துப் பஞ்சாங்கத்தையும் ஸ்வபாநு வருஷத்துப் பஞ்சாங்கத்தையுமெடுத்துப் பார்ப்பது. சேர்ந்தாப்போல் இரண்டு வருஷத்துப் பஞ்சாங்கங்களை யதேஷ்டமாக எடுத்துப்பார்ப்பது. முந்தின வருஷத்து ஐப்பசி மாதத்தில் மணவாளமாமுனிகளுத்ஸவம் தொடக்கமாகிற தேதியும், பிந்தின வருஷத்துச் சித்திரை மாதத்தில் எம்பெருமானாருத்ஸவம் தொடக்கமாகிற தேதியும் நியமேந ஒன்றாகவேயிருக்கும். மாமுனிகளினுத்ஸவாரம்பத்தேதியையடியொற்றி அடுத்த வருஷத்தில் எம்பெருமானாருத்ஸவாரம்பத் தேதி அமையுமேயொழிய எம்பெருமானாருத்ஸவாரம்பத் தேதி அதற்கிணங்காது. இதுதான் தெய்விகமான பொருத்தமென்பது.

6. **மணவாளமாமுனிகளின் கோஷ்டியனுபவம்.** (பக்கம் 5ல்) ஸேவை ஸாதிக்கின்ற மாமுனிகளின் கோஷ்டி-விச்வாவஸுஸம்வத்ஸர மஹோத்ஸவத்தில் ஒன்பதாந்திருநாளிரவு திருவாய்மொழி கோஷ்டியாஸ்தானம். பெரும்பாலும் ஸகல திவ்ய தேசங்களிலும் மணவாளமாமுனிகளின் மஹோத்ஸவம் சிறப்பாகவே நடைபெற்றுவந்தாலும் (ஸ்ரீ காஞ்சீ) பேரருளாளன் ஸந்நிதி மணவாளமாமுனிகளின் மஹோத்ஸவத்தின்வைகரி வேறெங்கும் வாய்ப்பதன்று. இம்மஹோத்ஸவத்தை இடைவிடாது அநுபவிக்கவிரும்புமவர்களுக்கு அந்நாட்களில் காலையில் 10 மணி வரைக்கும், இரவில் 11, 12 மணிக்கு மேலுந்தான் விச்ராந்திக்கு அவகாசம் கிடைக்கும். சாத்துமுறை நன்னாளன்று பேரருளாளன், [வெள்ளிக்கிழமை கூடினால் பெருந்தேவித் தாயாரும்] மாமுனிகளின் ஸந்நிதிக்கெழுந்தருளிச் சேர்த்தி கண்டருளுமழகுக்கு த்ரிபாத் விபூதியில் நடைபெறும் பரிபூர்ண போகமும் ஒவ்வாது.

7. **அருளிச்செயல் கைங்கர்யபரர்களின் அநுபவம்.** திருக்கோட்டியூரிலே அபரிமிதப்ராவண்யங்கொண்ட பெரியாழ்வார் *நாவகாரியப்பதிகத்தில் (7) *திருக்



கோட்டியூர்க் கருந்தடமுகில் வண்ணனைக் கடைக்கொண்டு கைதொழும் பத்தர்கள், இருந்தவூரிலிருக்கும் மானிடர் எத்தவங்கள் செய்தார்கொலோ!* என்கிறார். அதேபோல் மாமுனிகளின் மஹோத்ஸவம் நடைபெறும் நாட்களில் திருக்கச்சி மாநகரில் வாழும் வைணவர்கள் எத்தவங்கள் செய்தார் கொலோ! என்றால் மிகையாகாது. அத்தகைய மஹாதபஸ்விகள் ஆஸ்தையோடும் ஆதரத்



தோடும் [இயற்பா சாத்துமுறையுட்பட] பதினொரு நாட்களிலும் அருளிச்செயல் ஸேவிக்கு மழகு வடமொழியில் அதிசயோக்தியலங்கார மென்றும், தென்மொழியில் உயர்வு நவிற்சியணி யென்றும் வழங்கப்படுகிறவோர் அலங்காரத்திற்கு ஈஷத்தும் இலக்கியமன்று. *கேட்டு ஆரார்வானவர்கள் செவிக்கினிய செஞ்சொல்லே* என்று ஒரு பதிகத்திற்கு நம்மாழ்வாரருளிச்செய்த பலச்ருதி இங்கேதான் ஸமந்வயம் பெறும். ... ... ❀

8. [கோஷ்டீ நிர்வாஹகர்களின் ப்ரத்யேகாநுபவம்.] (பக்கம் 5-ல்) கண்கொள்ளாக்காட்சியான திருவுருவப்படத்தில் அருளிச்செயல் ஸேவிக்கும் ஸ்வாமிகளெல்லாரும் காட்சிதர ப்ராப்தமாகவில்லை. ப்ராப்தமானவரையில் ஸ்வல்பமநுபவிக்கிறேன். கோஷ்டியில் உத்தமாச்ரமியாக ஸேவை ஸாதிப்பவர் ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி. ஸ்ரீகாஞ்சீ வாதிகேஸரி. அழகியமணவாள யதீந்த்ர ப்ரவண ராமாநுஜஜீயர் ஸ்வாமி. ஸ்வாமி திருநாராயணபுர ப்ராந்தத்திலிருந்து இவ்விடம் மடாதிபதியாக எழுந்தருளி ஐந்தாறு ஸம்வத்ஸரமாகிறது. ஸம்ப்ரதாய க்ரந்த காலக்ஷேபம் நிர்வஹித்தருளவல்ல உத்தமாதிகாரி. பரமஸாத்விக ஸார்வ பௌமர். அருளிச்செயல் கோஷ்டியை அபிநிவேசத்தோடு அலங்கரித்தருளும் அத்தாணிச் சேவகர். சிஷ்யாநுக்ரஹார்த்தமாகச் சிலகாலங்களில் மேல்நாடு ப்ராந்தம் எழுந்தருள நேர்ந்தால், ஆளவந்தார் எம்பெருமானை நோக்கி "க்ஷணேபி தே யத்விரஹோதிதுஸ்ஸஹ:" என்றருளிச்செய்த நிலைமையே காணும். (1) ஜீயர் ஸ்வாமிக்கெதிரே முதலில் எழுந்தருளியிருப்பவர் ஸ்ரீமதுபயவே. திருமலை ஈச்சம்பாடி வரதாசாரியர் ஸ்வாமியென்பவர். இப்பெரியார் இளமை கழிந்தபிறகு அருளிச்செயலை அடைவுடனே அதிகரித்து "ஒழிவில் காலமெல்லாமுடனாய்மன்னி வழுவிலாவடிமை செய்யவேண்டுநாம்" என்கிற பாரிப்பளவிலே நில்லாமல் நிச்சலும் தொண்டு பூண்டமுதமுண்பவர். அசீதிக்கருகான பிராயத்திலே வாழ்பவர். (2) அவருடைய பக்கத்திலிருப்பவர் உவே. திரு. வரதாசாரியரென்பவர். தேவப்பெருமாள் ஸன்னிதியில் பரம்பரையான சாத்துப்படி கைங்கரிய மிராசுபெற்றவர். ஸ்ரீ பாஞ்சராத்ர ப்ரக்ரியைகளில் வல்லவர். அருளிச்செயல் கைங்கரியத்தில் அபிநிவேசத்தோடு அந்வயிப்பவர். (3) அவருக்கெதிரே முதல் ஸ்தானத்திலிருப்பவர் ஸ்ரீ உவே. திருமலை விஞ்சிமூர். சிங்கராசாரியரென்பவர். உபயவேதகண்டீரவ பிருதுபெற்றவர். தேவப்பெருமாளுடைய அருளிச்செயல் நித்யகைங்கரியத்திலும், திருவெஃகாமுதலான திவ்யதேசங்களில் ஸமயநியத வேதபாராயண கைங்கரியத்திலும் நிஷ்ணாதர். (4) மாமுனிகளின் வலதுபுறத்திலே உபநேத்ரமணிந்து நிற்பவர் ஸ்ரீஉவே வானமாமலை. திருவேங்கடாசாரியர் ஸ்வாமி; மணவாளமாமுனிகள் ஸன்னிதி பரம்பரை ஆதீன மிராசுதாரரும் அத்யாபக கைங்கர்ய மிராசுதாரரும். இவருடைய மூத்த திருக்குமாரரும் இளைய திருக்குமாரரும் இடதுபுறத்திலே நிற்பவர்கள். அவ்விருவர்க்குமடுத்து நிற்பவர் (உபநேத்ரமணிந்திருப்பவர்) விச்சந்தாரங்கல். பிரதிவாதிபயங்கரம். ஸ்ரீநிவாஸாசாரியர். ஸம்ப்ரதாயாபிமானி. ❀



9. ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி [வர்த்தமாந] ஸ்ரீமத். திருக்குறுங்குடி ஜீயர் ஸ்வாமி.



அடியேனுக்கு வடநாடு திவ்ய தேச ஸேவை இருபது பர்யாயங்களுக்கு மேல் ப்ராப்தமானது போல் தென்னாடு திவ்யதேசஸேவையும் அதற்கு மேலாகவும் கிடைத்திருக்கிறது. இருபது பர்யாயங்களுக்கு மேலாகவே திருக்குறுங்குடியை ஸேவிக்க பாக்கியம் பெற்றவனடியேன். இப்போது ஆஸ்தானத்தை அலங்கரித்தருளா நின்ற ஸ்வாமிக்கு முன்னே பல வாண்டுகள் ஆஸ்தானத்தை அலங்கரித்தருளியிருந்த மஹாஸ்வாமியை க்ருஹஸ்தாச்ரமத்திலும் பலகால் ஸேவித்திருக்கிறேன். எனவே அந்த மஹாஸ்வாமிக்கு முன்னே ஆஸ்தானத்திலெழுந்தருளியிருந்த மஹா மஹாஸ்வாமிகளின்

கடாக்ஷத்தையும் பெற்றிருக்கிறேனென்கை. வர்த்தமாநஸ்வாமி க்ருஹஸ்தாச்ரமத்திலெழுந்தருளியிருந்தகாலத்தில் ஸ்வாமியின் வைதுஷ்யம் ஸௌசீல்யம் ஸ்மிதபூர்வாபிபாஷித்வம் முதலான திருக்குணங்களை அடியேன்போல் அநுபவித்தவர் மற்றெவருமில்லையென்று திண்ணமாகச் சொல்லுவேன். அக்காலத்துப் பெருமைகளை இப்போது விரித்துரைப்பது அபசாரமாகுமென்று விரமிக்கிறேன். ஆனால் ஒன்றுமட்டும் விஜ்ஞாபிக்காமலிருக்க இயலாது. அக்காலத்தில் ஸ்வாமி ஸ்வஹஸ்தலிகிதமாக அநுக்ரஹிக்கும் ஸ்ரீ முகங்கள் “அநாக்ராதாவத்யம் பஹுகுணபரீணாஹி’ என்று பட்டரருளிச் செய்த ப்ரகாரமான ஸம்ஸ்க்ருத வாங்மயமாகவேயிருக்கும். இப்போதைய திருக்கோலத்திலே ஸேவித்து ஸத்தைபெற இதுகாறும் பாக்கியமிழந்தவனாயிராநின்றேன். எனது உலகமறிந்த ஆரோக்ய வைகல்யமே இந்த பாக்ய ஹாநிக்குஹேது. *பங்கோருபரி கங்காநிபதனம்போலே ஸ்ரீ ஸ்வாமியின் திருவருள் வெள்ளம் இங்கேறப் பெருகாநின்று பாவியேனையும் புனிதமாக்குகின்றது. கலியன் திருக்குறுங்குடியை யநுபவிக்கும்போது *தேவபிரான் திருமாமகளைப் பெற்றும் என்னெஞ்சகங்கோயில்கொண்ட பேரருளாளன்* என்று அத்தலத்தெம்பெருமானையும் தேவபிரானென்றும் பேரருளாளனென்றுமே பாடியருளினர். ஸ்ரீ ஸ்ரீ ஸ்வாமி தேவபிரான் பேரருளாளன் திருவடிவாரத்திலெழுந்தருளியிருப்பது போலவே அடியேனும் தேவபிரான் பேரருளாளன் திருவடி வாரத்தை விடாமல் கிடக்கிறேன். இந்த ஸாதர்மியத்தாலே அடியேனுக்கு ஒரு தரிப்பு உண்டு. ப்ரக்ருதம் ஒரு லோக க்ஷேமகரமான ஸந்தோஷ விஜ்ஞாபனம். விசத வாக்சிகாமணிகளான மணவாளமாமுனிகள் தேனும் பாலுங்கன்னலுமமுதுமாக வருளிச்செய்துள்ள ரஹஸ்ய வியாக்கியானங்கள் நான்கும் அநுபோக்தாக்களுக்கு ஒரே ஸம்புடமாக அமைந்திருக்கவேணுமென்கிற ஆசையினால் அடியேன் இருபத்தைந்து ஆண்டுகட்கு முன் ஸ்ரீமத் வரவரமுநீந்த்ரக்ரந்தமாலை [ஸு 1940ல்] தெலுங்கு லிபியில் அச்சிட்டு ஸ்ரீ வைஷ்ணவவுலகில் பரவச் செய்திருந்தேன். ஐந்தாறுண்டுகளாகவே அந்த ப்ரதி துர்லபமாய்விட்டது. அதை மணிப்ரவாள லிபியில் ஸ்ரீ ஸ்ரீ ஸ்வாமி ஸன்னிதியிலிருந்தே முத்ரித ப்ரகாசிதமாக வேணுமென்று ப்ரார்த்தித்து விண்ணப்பம் விடுத்திருந்தேன். அங்ஙனமே திருவுள்ளமுகந்தருளியாயிற்று. முத்ரணமும் தொடங்கி நடைபெற்று வருவதாகக் கேட்டு அம்ருதஸாகராந்தர் நிமக்ந ஸர்வாவயவனாயிராநின்றேன். ஸ்ரீ ஸ்ரீ ஸ்வாமி போன்ற ப்ரமாதாக்கள் ப்ரமேயரக்ஷணம் செய்தருளி வருவது போலவே ப்ரமாண ரக்ஷணமும் செய்தருள்வது ப்ராப்தமேயன்றோ. ... ...





**10. [லகுதரா ராமஸ்ய கோஷ்டீ க்ருதா.]** பட்டர் ஸ்ரீ குணரத்னகோசத்தில் *மாதர் மைதிலி !* என்னும் சுலோகத்தில் பெருமாளைக் காட்டிலும் பிராட்டிக்கு ஏற்றம் சொல்லுகிறார். எந்த விஷயத்திலென்றால், காருண்யம் அல்லது க்ஷாந்தி விஷயத்தில். அதை யருளிச்செய்யுமிடத்து “**லகுதரா ராமஸ்ய கோஷ்டீ க்ருதா**” என்று இங்ஙனே சப்த விந்யாஸ முள்ளது. “லகுதரா ராமஸ்ய ரக்ஷா க்ருதா” என்றோ “லகுதரம் ராமஸ்ய க்ருத்யம் க்ருதம்” என்றோ சப்த விந்யாஸம் செய்தருளாமல் “ராமஸ்ய கோஷ்டீ லகுதரா க்ருதா” என்று செய்தருளியிருப்பதை நோக்கி காஞ்சீபுர வாஸியான அடியேனுக்குத் தோன்றின ஓர் அர்த்தம் விஜ்ஞாபிக்கக் கேளீர். தேவப்பெருமாள் ஸன்னிதியனுபவத்தையொட்டி ரஸோக்தியாக விஜ்ஞாபிக்கிறபடி. ஏகாதசி, அமாவாஸ்யை, பௌர்ணமி, மாதப்பிறப்பு, ஹஸ்தம், திருவோணம் ஆகிய இந்நாட்களில் பஞ்சபர்வோத்ஸவமென்று தேவப்பெருமாள் திருவீதியுத்ஸவம் கண்டருள்வர். ஸன்னிதிவீதிக்கோடியில் திருவடி ஸன்னிதியுள்ளே இறங்கி தோசைப்படியும் அமுதுசெய்வர். ஆனால் தீர்த்தப்ரஸாத கோஷ்டியென்று ஒன்றும் நடைபெறாது. தாம் அமுது செய்வதும், உடனே திருச்சின்னவொலி பரிமாறிப் புறப்பட்டருள்வதுமே காணலாகும். இதற்கெதிராகப் பெருந்தேவித்தாயாருடைய வைகரியைக் கேண்மின். வெள்ளிக்கிழமைகளில் தாயார் புறப்பாடு நடைபெறும். ஆழ்வார் திருவீதியிலே விளங்கும் விசாலமான தோட்டத்திலே திருமண்டபப்படி கண்டருள இறங்கி வடைதிருப்பணியாரமும் சர்க்கரைப்பொங்கலும் தவறாது அமுது செய்தருளி அடியார்களுக்கெல்லாம் தீர்த்த ஸ்ரீ சடகோப ப்ரஸாத விநியோகமளித்து, தன்னுடைய கோஷ்டியை மிகச் சிறப்பிக்குமதிசயத்தை அடிக்கடி அநுபவிக்க நேரும்போது அடியேனுக்கு “லகுதரா ராமஸ்ய கோஷ்டீ க்ருதா” என்கிற பட்டர் ஸ்ரீஸூக்தி நியமேந நினைவுக்குவருவதுண்டு. பெருமாளுடைய பஞ்சபர்வோத்ஸவங்களில் வெள்ளிக்கிழமை சேர்ந்துவருவது பலகாலுண்டே; அந்த ஸமயங்களில், கீழே விவரித்த தாயாருடைய கோஷ்டிச் சிறப்பு தனிப்பெருமை பெற்றே விளங்கும். பட்டர் தாமே “தவ ஸ்பர்சாதீசம் ஸ்ப்ருசதி கமலே! மங்களபதம்” என்றருளிச்செய்த கணக்கிலே பிராட்டியோடுண்டான சேர்த்தியாலேயாயிற்றுப் பெருமாளுக்கும் இச்சிறப்பிலே அந்வயம். ...



**11. [ஸ்ரீ உவே. திருக்கண்ணபுரம். கனபாடி. வேங்கடாசார்ய ஸ்வாமி· வைகுண்டவாஸி.]** “யஸ்ய வேதச் ச வேதீ ச விச்சித்யேதே த்ரிபூருஷம், ஸ வை துர்ப்ராஹ்மணோ ஜ்ஞேயஸ் ஸர்வகர்ம பஹிஷ்க்ருத:.” என்கிற வசனம் பெரும்பாலும் அனைவருமறிந்ததே. ப்ராஹ்மணஜாதியில் பிறந்தவர்கள்

விசேஷித்துக் குறிக்கொள்ளத்தக்கது. வேதாத்யயனமும் அக்னிகாரியமும் மூன்று தலைமுறை விச்சேதமடைந்துவிட்டால் .....மேலே சொல்லியிருப்பதை அடியேன் கையாலெழுதவேணுமோ? இக்காலத்திலும் இந்த வசனம் ஸர்வாத்மநா பழுதுபடவில்லை. தௌர்ப்ராஹ்மண்யத்தை ஸம்பாதித்துக்கொள்ளாத ஸத்ஸந்தானம் ஆங்காங்கு விரளமாகவாவது காணப்பட்டே வருகிறது. இங்கே ஸேவை ஸாதிக்கிற கனபாடி வேங்கடாசார்ய ஸ்வாமி திருக்கண்ணபுர ஸமீபத்தில் அவதரித்து ப்ராப்த காலத்தில் ஸாங்கோபாங்கமாக வேதாத்யயனத்தைச் செய்து திருக்கண்ணபுரத்தில் வெகுகாலம் நடந்துகொண்டிருந்த வேதபாடசாலையில் அனேக ஸம்வத்ஸரங்கள் உபாத்யாய பதவியை வஹித்திருந்து பலபேர்களுக்கு வேதமோதுவித்தார். அந்த காலத்திலேயே அடியேன் சில பர்யாயங்கள் திருக்கண்ணபுரம் விடைகொண்டிருக்கிறேன். *கலையிலங்கு மொழியாளர் கண்ணபுரமென்று திருமங்கையாழ்வாரும், *கலைவலவர்தாம் வாழுங் கணபுரமென்று குலசேகராழ்வாரும் மங்களாசாஸனம் செய்தருளியபடி விளங்கின காலமது. "திருக்கண்ணபுரம் பட்டப்பா ஸ்வாமி"யென்று ஸுப்ரஸித்தராக எழுந்தருளியிருந்த வித்வந்மணியும் வித்வான்களான ஜ்யேஷ்ட ப்ராதாக்களோடுங்கூட அங்கே யெழுந்தருளியிருந்தகாலமது. அப்போது இந்த கனபாடி ஸ்வாமி அவ்விடத்தில் வித்யார்த்தி மண்டலீபரிவ்ருதராய் விளங்கிவந்தார். ஸ்ரீ சௌரிராஜனுடைய திருவீதியுத்ஸவங்களிலும் ஆச்சரியமாக வேதபாராயண கோஷ்டி நடைபெற்றுவந்தது. இந்த ஸ்வாமியினுடைய திருக்குமாரர் தீபாதுத்பந்ந ப்ரதீபம்போலே திருத்தகப்பனாரைக்காட்டிலும் அதிசயிதமான வித்யாஸம்பத்தியுடையராய் ஸலக்ஷண கனபாடியென்று புஷ்கலார்த்தகமான பெயரையுடையராய், உபயவேதாந்தாதிகாரியாய் திருவரங்கம் பெரிய கோயிலில் கீர்த்திமூர்த்தியான சிங்கமையங்கார் ஸ்வாமியின் தென்னாசார்ய ஸம்ப்ரதாய பாடசாலையில் ப்ரவசநநிரதராய் விளங்கிவருகின்றார். இவருடைய





திருநாமம் திருக்கண்ணபுரத் தெம்பெருமானுடையதே. இவர் தம்முடைய திருக்குமாரனை லௌகிக வித்யாப்யாஸத்தில் விட்டிருந்தாலும் அவனுக்கு வேதாத்யாபனமும் செய்துவருகிறார். சில ஸமயங்களில் பரீக்ஷிதனை அந்த ஆயுஷ்மான் பரமத்ருப்திகரமாகச் சொல்லக்கேட்டு உவந்தேன். வேதாத்யயனத்திற்கு த்ரிபூருஷாநுவ்ருத்தியை இங்கே கண்டு உள்ளம் பூரித்து இதை விஜ்ஞாபிக்கலானேன். இத்தகைய விண்ணப்பங்களே இச்சிறு நூலுக்கு பூஷணம்.

12. **நமது தரிசனத்தின் சிறப்பு.** நம்மாழ்வார் தமது முதற்பிரபந்தமான திருவிருத்தத்தில் "வணங்குந்துறைகள் பலபலவாக்கி மதிவிகற்பாற் பிணங்குஞ் சமயம் பலபலவாக்கி" என்றருளிச் செய்தபடியே உலகில் பலபல மதங்கள் தோன்றியிருந்தாலும் அவை வைதிக மதமென்றும் அவைதிக மதமென்றும் பொதுவாக இருவகுப்பாகும். வேதத்தைப் பிரமாணமாகக் கொள்ளும் மதம் வைதிக மதம். வேதத்தைப் புறக்கணித்து ஸ்வதந்திரமாகத் தோன்றிய மதம் அவைதிக மதம். அவைதிக மதங்களைக் காட்டிலும் வைதிக மதம் சிறந்ததென்னுமிடத்தை அடியேன் விவரிக்க வேணுமோ? வைதிக மதங்களுள் பரம பவித்ரமான விசிஷ்டாத்வைத தரிசனம் மிகச்சிறந்து விளங்குகின்றது. நம்மாழ்வார் திருவாய்மொழி தொடங்கும்போது *உளன்சுடர்மிகுசுருதியுள் இவையுண்டசுரனே* என்கிற பாசுரத்தினால் தாம் போதிக்கும் பரம புருஷன் வேதவேதாந்தங்களில் விளங்குபவன் என்றருளிச் செய்கையாலே இக்கலியுகத்தில் அவ்வாழ்வார் தொடக்கமாகப் பரவியுள்ள விசிஷ்டாத்வைத ஸம்பிரதாயம் பரமவைதிகமென்னத் தட்டில்லை. பிரமாணம், ப்ரமாதா, ப்ரமேயம் என்ற மூன்று வகுப்புகளும் நம் தரிசனத்தில் சீர்மைபெற்று விளங்குவன. "ஆழ்வார்கள் வாழி, அருளிச்செயல் வாழி, தாழ்வாது மில்குரவர்தாம் வாழி—ஏழ்பாருமுய்ய அவர்களுரைத்தவைகள் தாம் வாழி, செய்யமறை தன்னுடனேசேர்ந்து" என்னுமுபதேச ரத்தினமாலைப் பாசுரத்தில் ப்ரமாணங்களும் ப்ரமாதாக்களும் ஸாரமாகத் தெரிவிக்கப்பட்டார்கள். ஸம்ஸ்க்ருத த்ராவிட வேதங்களாகிற உபயவேதங்களும் ஸ்ரீ பாஷ்ய பகவத்விஷயாதிகளும் நமக்கு ப்ரமாணம், யதார்த்தஜ்ஞான நிதிகளான ஸ்ரீமந்நாதமுனிகள் ஆளவந்தார் எம்பெருமானார் போல்வாரான மஹாசார்யர்களே ப்ரமாதாக்களில் தலைசிறந்து விளங்குபவர். ஸகல சேதநாசேதன சரீரகனாய் ஸமஸ்தகல்யாண குணாத்மகனான ஸ்ரீமந்நாராயணனே பரதத்துவமென்றும், அவனுடைய திருவடித் தாமரைகளில் பண்ணும் ப்ரபத்தியே பரமஹிதமென்றும், *நலமந்தமில்லதோர் நாட்டிலே நித்யாநந்தமயமான நித்யகைங்கர்யமே பரமபுருஷார்த்தமென்றும்

இங்ஙனே கூறப்படும் அர்த்த விசேஷங்களே ப்ரமேயச்ரேஷ்டங்களாக விளங்குகின்றன. ஆக இத்தகைய ப்ரமாண ப்ரமாத்ரு ப்ரமேய வைசிஷ்ட்யமே நம்முடைய தர்சனத்தின் சிறப்புக்கு ஹேதுவாகின்றது. — ❁

13. **திருக்கச்சிநம்பிகளின் பரத்வாதிபஞ்சகம்.** ஆளவந்தாருடைய ஸ்ரீபாதத்திலே நெடுநாள் பரிசர்யைபண்ணி ஸகலார்த்தங்களும் கேட்டருளி *ராமாநுஜமுநேர் மாந்யராக விளங்கின திருக்கச்சிநம்பிகள் ***வரதாங்க்ரிஸதா ஸங்கரஸாயநபராயணம்*** என்னும்படி தேவப்பெருமாள் திருவடிவாரத்திலே அல்லும்பகலும் அத்தாணிச் சேவகராய்த் தொண்டு பூண்டமுதமுண்பதுதானே போதுபோக்காக இருந்தவராதலால் க்ரந்த ரூபேண விசேஷத: ஸ்ரீஸூக்திகளருளிச் செய்ய அவகாசம் பெற்றிலர். தேவப்பெருமாள் விஷயமாக **தேவராஜாஷ்டக**மென்று அருளிச்செய்த ஒரு துதிநூல்தான் நம்பிகளின் க்ருதியாக ப்ரஸித்திபெற்றுள்ளது. இதில் முதல் ச்லோகத்திலுள்ள அர்த்தபுஷ்டியை மட்டும் இங்கு விண்ணப்பஞ்செய்கிறேன். முதல் சுலோகத்தில் பரத்வாதி பஞ்சகம்.



***நமஸ் தே ஹஸ்திசைலேச! ஸ்ரீமந் அம்புஜலோசந! சரணம் த்வாம் ப்ரபந்நோஸ்மி ப்ரணதார்த்திஹராச்யுத.*** இது தான் தேவராஜாஷ்டகத்தின் முதல் சுலோகம். இதில் ஐந்து [ஸம்போதனங்கள்]விளிச்சொற்கள் உள்ளன. எம்பெருமானுடைய பஞ்சப்ரகாரங்களும் இந்த ஐந்து விளிகளாலும் தெரிவிக்கப்படுகின்றன. திருவாய்மொழியில் *விண்மீதிருப்பாய்! மலைமேல் நிற்பாய்! கடல் சேர்ப்பாய்! மண்மீதுழல்வாய்! இவற்றுளெங்கும் மறைந்துறைவாய்!* [6-9-5.] என்கிற பாசுரத்தில் எம்பெருமானுடைய பர வ்யூஹ விபவாந்தர்யாமியர்ச்சாவதாரங்களாகிற ஐந்து ப்ரகாரங்களும் ஸுஸ்பஷ்டமாக வோதப்பட்டுள்ளன. **விண்மீதிருப்பாய்!**- பரத்வம். **கடல் சேர்ப்பாய்!**-வ்யூஹம். **மண்மீதுழல்வாய்!**- விபவம். **இவற்றுளெங்கும் மறைந்துறைவாய்!**- அந்தர்யாமி. **மலைமேல் நிற்பாய்!**- அர்ச்சை.



மேலெடுத்த திருக்கச்சிநம்பிகளின் சுலோகத்திலும் பஞ்சஸம்புத்திகளால் இங்ஙனே பரத்வாதி பஞ்சகம் சிறிது ஊன்றித் தெரிந்துகொள்ளவேண்டும் வகையில் அமைக்கப்பட்டுள்ளனவென்பதை விளக்கமாக விஜ்ஞாபிக்கிறேன். **ஹஸ்திசைலேச!** என்பதனால் அர்ச்சாவதாரநிர்தேசமென்பது ஸ்பஷ்டம். [**ஸ்ரீமந்!**] எம்பெருமானுடைய பரத்வநிலையைச் சொல்லுகிற பகவச் சாஸ்த்ரம் *வைகுண்டே து பரே லோகே ச்ரியா ஸார்த்தம் ஜகத்பதி:, ஆஸ்தே விஷ்ணுரசிந்த்யாத்மா பக்தைர் பாகவதைஸ் ஸஹ* என்று பிராட்டியோடுகூட வெழுந்தருளியிருப்பதாகச் சொல்லுகையாலும், நம்மாழ்வார் தாமும் *ஒண்டொடியாள் திருமகளும் நீயுமே நிலாநிற்பக்கண்ட சதிர்கண்டொழிந்தேன்* என்று திருமகளும் தானுமாக அங்கெழுந்தருளியிருக்கிறபடியை யருளிச் செய்கையாலும் ஸ்ரீமந்! என்றதனால் அந்த பரத்வநிலை தெரிவிக்கப்பட்டதாகும். [**அம்புஜலோசந!**] செந்தாமரைக்கண் முதலான அவயவஸௌந்தர்யத்தைக் காட்டி ஆவர்ஜனம் செய்தது ராமக்ருஷ்ணாதி விபவாவதாரங்களிலேயாயிற்று. *சக்ஷுஷா தவ ஸௌம்யேந பூதாஸ்மி ரகுநந்தந!* *திமர்த்தம் புண்டரீகாக்ஷ!* இத்யாதிகள் விபவாவதாரங்களிலன்றோ அவதரித்தன. அவயவஸௌந்தர்ய வர்ணனம் அர்ச்சையிலும் விசேஷமாகவுண்டே யென்னில்; "பெருக்காறு போலே விபவங்கள்; அதிலே தேங்கின மடுக்கள்போலே அர்ச்சாவதாரம்" என்ற ஸ்ரீவசனபூஷண திவ்ய ஸூக்தியின் வியாக்கியானத்திலே மணவாளமாமுனிகள்—

"அவதாரகுணங்களெல்லாம் அர்ச்சாஸ்தலங்களிலே பரிபூர்ணமாயிருக்கையாலும், அவதார விக்ரஹங்களை அர்ச்சாரூபேண பலவிடங்களிலும் பரிக்ரஹித்துக் கொண்டிருக்கையாலும் *அதிலே தேங்கின மடுக்கள்போலே யென்கிறது"

என்றருளிச் செய்திருக்கையாலே அர்ச்சாவதாரத்துக்கும் மூலம் விபவாவதாரமாகையாலே அதனுடைய முதன்மை உணரத்தக்கது. [**ப்ரணதார்த்திஹர.**] ஆர்த்தர்களினுடைய கூக்குரல் கேட்டு அவர்களின் ஆர்த்தியைப் போக்குகைக்காகச் சடக்கென வெழுந்து அவதாரம் செய்வதற்கென்றே க்ஷீராப்தியில் வ்யூஹவீபவித்து நிற்கையாலே 'ப்ரணதார்த்திஹர' என்றவிளி வ்யூஹத்தில் நோக்காகத் தோன்றியதென்னக் குறையில்லை. இனி **அச்யுத!** என்கிற ஸம்போதனம் சேஷித்து நிற்கிறது. எம்பெருமானுடைய அச்யுத நாமத்திற்குப் பலவகையான பொருள்கள் சொல்லுவதுண்டு; அவற்றுள் ஒரு பொருள் 'ஓரிடத்தையும் விட்டு நழுவாதவர்' என்பது. இத்தால் *எஞ்ஞான்றுமெங்குமொழிவற நிறைந்துநிற்கும் அந்தர்யாமித்வம் சொன்னபடியாகும். "ந வித்யதே (குத்ராபி) ச்யுதம் யஸ்ய ஸ:— அச்யுத:." என்று வ்யுத்பத்தி காண்க. ஆக, ஐந்து விளிகளாலும் எம்பெருமானுடைய பஞ்ச ப்ரகாரங்களும் பேசப்பட்டனவாயின. ... ... ❁



14. **திருவரங்கம் பெரிய கோயிலில் காலக்ஷேப கோஷ்டி.** அடியேன் (கீர்த்திமூர்த்தியான) ஸ்ரீகாதி ஜகத்குரு ஸ்வாமியின் நியமனத்தினால் மஞ்ஜுபாஷிணி யென்கிற ஸம்ஸ்க்ருத வாரப் பத்திரிகை நடத்திக் கொண்டிருந்தகாலத்தில், மலையாளத்தில் பட்டாம்பி யென்னுமிடத்திலிருந்து வாரந்தோறும் வெளிவந்துகொண்டிருந்த விஜ்ஞாந சிந்தாமணி யென்கிற ஸம்ஸ்க்ருத பத்ரிகையோடும் பலவருஷங்கள் தொடர்பு வைத்துக்கொண்டிருந்தேன். அக்காலத்தில் பல ப்ராசீந பண்டிதர்களின் ப்ரேமஸம்பத்துக்குப் பாத்திரமாயிருந்தேன். அன்னவர்களில் ஒருவர்கூட இப்போது ஸேவைஸாதிக்க ப்ராப்தமில்லை. பட்டாம்பிக்கு அருகிலுள்ள திருவித்துவக்கோடென்னும் திவ்யஸ்தலத்தில் K. வாஸுதேவ சர்மா என்கிற ஒரு பண்டிதர்மட்டும் ஜீவித்திருக்கிறார். ஸ்ரீரங்கத்தில் நெடுநாள் உபயவேதாந்த ப்ரவசனம்செய்து கொண்டெழுந்தருளியிருந்த ஸ்ரீமதுபயவே. மெய்யுவாசார்ய ஸ்வாமி அக்காலத்தில் காரைக்குடியிலெழுந்தருளியிருந்ததாக நினைவு. **ஸத்யேசாசார்ய:** என்று கையொப்பமிட்டு "**காரைக்குடீத:**" என்று தலைமேலெழுதி அந்த ஸ்வாமி மஞ்ஜுபாஷிணிக்கு அனுப்பியருளின ஸம்ஸ்க்ருத வியாஸங்கள் பலபல. திருமெய்யத்தெம்பெருமானுக்கு ஸத்யகிரிநாதனென்றும் ஸத்யேசனென்றும் திருநாமம் வழங்குவதுண்டாதலால் அந்தத் திருநாமமே மெய்யுவாசார்ய ஸ்வாமியினுடையதென்று பிறகு தெரிந்துகொண்டேன். அந்த ஸ்வாமி கோயிலில் ஸ்திரவாஸமாக எழுந்தருளியான பிறகு அடியேனுக்கு அதிகபரிசயமுண்டாயிற்று. அடியேனுடைய தன் சரிதையில் (பக்கம் 36ல்) அந்த ஸ்வாமியினுடைய ஸ்ரீ பாஷ்ய காலக்ஷேப



கோஷ்டியை வெளியிட்டு, மற்றுஞ் சில விஷயங்களைச் சுருக்கமாக விஜ்ஞாபித்திருக்கிறேன். கடாக்ஷித்தருளவேணும். அந்த மஹா ஸ்வாமியின் திருக்குமாரர் ஸ்ரீமதுபயவே. பண்டிதராஜ. ஸுந்தரராஜாசார்ய ஸ்வாமியின் ஸ்ரீபாஷ்ய ப்ரவசன கோஷ்டியை (பக்கம் 14ல்) ஸேவிக்கப்பெறுகிறீர்கள். இந்த கோஷ்டியிலே வைகுண்டவாஸியான மெய்யுவாசார்ய ஸ்வாமியும் ஸேவை ஸாதிக்கும்படியான ஸந்நிவேசம் அமைந்திருப்பது அதிசயிக்கத்தக்கது. ஸ்ரீவசனபூஷணத்தில் ஸதாசார்ய லக்ஷணமருளிச்செய்துவருமிடத்து (308) "தான் ஹிதோபதேசம் பண்ணும்போது தன்னையும் சிஷ்யனையும் பலத்தையும் மாறாடி நினைக்கை க்ரூரநிஷித்தம்" என்றருளிச்செய்து, உடனே "தன்னைமாறாடி நினைக்கையாவது தன்னை ஆசார்யனென்று நினைக்கை; சிஷ்யனைமாறாடி நினைக்கையாவது தனக்கு சிஷ்யனென்று நினைக்கை" என்றருளிச் செய்யப்பட்டுள்ளது. வியாக்கியானத்தில் மணவாளமாமுனிகள் "உபதேச ஸமயத்தில் தன்னுடைய ஆசார்யனையே இவனுக்கு உபதேஷ்டாவாகவும், தாம் அங்குத்தைக்குக் கரணபூதராகவும் ப்ரதிபத்தி பண்ணிக்கொண்டு உபதேசிக்க......" என்றும், "தன்னோபாதி இவனையும் தன்னுடைய ஆசார்யனுக்கு சிஷ்யனாக ப்ரதிபத்திபண்ணி உபதேசிக்க......" என்றும் அருளிச்செய்தது இங்கு ப்ரத்யக்ஷமாகக் காணலாம்படியுள்ளதன்றோ.

இந்த காலக்ஷேப கோஷ்டி இப்போது நடந்துவருகிறது. இதில் அந்வயித்துள்ளவர்கள் பெரும்பாலும் சிறந்த உத்யோக பதவிகளிலிருந்து விச்ராந்தர்களானாலும் பஹுச்ருதர்கள். ஆஸ்தையும் ஸ்வாஸ்த்யமும் மேதையும் அமைந்தவர்கள். பொலிக பொலிக பொலிக. ... ... ❀

15. **வால்மீகியின் கருத்தும் நம்பிள்ளையின் கருத்தும்.** ஆதிகாவ்யமான ஸ்ரீ ராமாயணமானது சப்த புஷ்டியாலும் அர்த்த புஷ்டியாலும் நிகரற்றதென்பதை ரஸிகர்கள் நன்கறிவர்கள். இதில் அர்த்தங்களை அநுபவிக்க அநுபவிக்க உள்ளம் குழையும். "வ்யாக்க்யாதா வேத்தி நோ கவி:" என்பது ப்ரஸித்தமான வார்த்தை. "அர்த்தம் புத்த்வா சப்தரசநா" என்றபடி மூலமியற்றும்போது ஒரு அர்த்தத்தை உட்கொண்டே கவியினால் இயற்றப்படுகின்றதென்பதில் ஸந்தேஹமில்லை. ஆனாலும், சதுரர்களான வ்யாக்க்யாதாக்கள் தங்களுடைய மேதாவிலாஸத்தினால் நுட்பமாகக் கண்டறிந்து விவரிக்கும் பொருள் மூலகாரருடைய புத்திக்கு எட்டாமலிருக்கவுங்கூடும். இதைத்தான் "**வ்யாக்க்யாதா வேத்தி நோ கவி:**" என்கிற வசனம் தெரிவிக்கின்றது. ஸ்ரீ ராமாயண ச்லோகங்களுக்கு நம்பிள்ளையருளிச்செய்யும் அர்த்த விசேஷங்களைக் காணும்போது 'இந்த அர்த்தத்தை வால்மீகி

விவக்ஷித்திருப்பரா?' என்று ஸந்தேஹிக்கவே நேர்கின்றது சிலபல விடங்களில். ஓரிடம் காட்டுகிறேனிங்கு. (கிஷ்கிந்தா காண்டம் 1-105.) *பத்மஸௌகந்திகவஹம் சிவம் சோகவிநாசநம், தந்யா லக்ஷ்மண! ஸேவந்தே பம்போபவநமாருதம்.* என்கிற சுலோகம் ஸீதாவியோக விஷண்ணரான பெருமாள் பம்பாஸரஸ்ஸின் கரையிலேயிருந்து இளைய பெருமாளை நோக்கிச் சொல்லுவது இங்கே இப்போது வீசுகின்ற காற்று பெருமாளுக்கு சோகத்தை வளரச்செய்யுமதேயொழிய நசிக்கச் செய்யுமதன்று. கீழே (இதே ஸர்க்கத்தில்) சில ச்லோகங்களில் பெருமாள் இதை ஸ்பஷ்டமாகவே கூறியுமிருக்கிறார். உண்மையில் விரஹிகளுக்கு மாருதம் சோகாவஹமேயாகும். *மல்லிகை கமழ் தென்றலீருமாலோ* என்றும் *வாடை தண்வாடை வெவ்வாடையாலோ* என்றும் விச்லேஷகாலத்திலாழ்வார்களின் பாசுரங்கள் காண்கின்றன. அப்படியிருக்க, விரஹாதுரரான பெருமாள் இங்கு **சோகவிநாசந**மென்று எப்படியருளிச்செய்தாரென்கிற சங்கை தோன்றியே தீரும். ஆங்காங்கு ஸ்ரீராமாயண ப்ரவசனம் செய்பவர்கள் இங்கு எவ்விதமாகப் பொருள் சொல்லிவருகிறார்களென்றால், அடுத்தபடியாக *தந்யா லக்ஷ்மண! ஸேவந்தே* என்றிருக்கையாலே விச்லேஷவ்யஸநமின்றிக்கே ஸம்ச்லேஷ ரஸாநுபவம் பண்ணுமவர்களை இங்கு ப்ரஸ்தாவித்திருக்கையாலே அன்னவர்களுக்கு தாபத்தைப் போக்கி ஸந்தோஷ ஸந்தாயகமாகக் காற்று வீசுவதனால் அவர்களுடைய புத்தியினால் **சோகவிநாசந** மென்றதாகச் சொல்லி வருகிறார்கள். இப்படி சொல்லுவதில் என்ன அநுபபத்தி சொல்லமுடியும்? கவிக்கும் இப்படித்தான் விவக்ஷை என்றும் தோன்ற நின்றது. ஆனால் நம்பிள்ளை யருளிச்செய்யும் பொருள் இங்ஙனேயன்று. மூலத்தில் **சோகநாசந** மென்னாதே சோகவிநாசந மென்றிருப்பதிலே திருக்கண் செலுத்தி சோகத்தை அடியோடே போக்குமதென்று திருவுள்ளம் பற்றுகிறார். அதாவதென்னென்னில்; உடலுமுயிரும் உள்ளவளவுந் தானே சோகமநுபவிக்க ப்ரஸக்தியுள்ளது. உயிர்போனால் பிறகு சோகமநுபவிக்க அவகாசமேது? ஆகவே **சோகவிநாசந** மென்றது உயிரை அறவே போக்கவல்லது என்றபடியாம். இப்பொருளைக் காட்டுகின்ற நம்பிள்ளை ஸ்ரீஸூக்தி காண்மின்; (திருவாய்மொழியீடு. 1-4-7) "[**சோகவிநாசநம்**] நம்மையினி ப்ராணனோடே வைத்து நலியாது போலே யிருந்தது" என்று. நாச்சியார்திருமொழிவியாக்கியானத்தில் (8-2) பெரியவாச்சான்பிள்ளை யருளிச்செய்வது—"[**சோகவிநாசநம்**] நம்மை சித்ரவதம் பண்ணாது. சோகம் மறுவலிடாதபடி பண்ணும்போலேயிராநின்றது" என்று. இந்தவியாக்கியானங்களைத் தழுவியே ஸம்ஸ்க்ருத வியாக்கியான மெழுதுபவரான கோவிந்தராஜர்—"**விரஹிணோ தக்ஷிணபவந: சோக**



**வர்த்தந:, ந து சோகவிநாசந:; ததா ச, ஜீவதோ ஹி சோகம் குர்யாத், ஜீவிதாபாயகரணேந சோகதர்ம்யபாவாத் சோகவிநாசந:**" என்றெழுதி வைத்தார். இந்த பங்க்திகள் மேலேயுதாஹரித்த பூர்வாசார்ய ஸ்ரீஸூக்திகளை நேரே மொழி பெயர்த்தவை. இவ்வாசார்ய பரம்பரையில் படியாதவர்களுக்கு இவ்வர்த்தம் ஸ்புரிக்கவழியில்லை. "**யே தந்யா: மாருதம ஸேவந்தே தேஷாம் சோகவிநாசந ஏவ ஸ:**" என்றே மூஷ்டி பிடிப்பர்கள். ... ... ✻

16. **திருப்பாவையில் ஓர் அபூர்வார்த்தம்.** சூடிக்கொடுத்த சுடர்க்கொடியருளிச்செய்த திருப்பாவையில் (24) *அன்றிவ்வுலகமளந்தாய் பாசுரத்தில் ஈற்றடி *இன்று யாம் வந்தோமிரங்கு* என்பது. இங்கு **இன்று** என்பதற்கு இன்றைக்கு என்பது பொருளென்பதை யாவருமறிவோம். ஆசாரியர்கள் அருளிச்செய்த பொருளுமிதுவேதான். இங்கு ஒரு நுண்பொருள் விஜ்ஞாபிக்கின்றேன். இலக்கணப்படி மூலபாடம் இருக்கும்படியெங்ஙனேயென்னில்; "இன்றியாம் வந்தோம்" என்றேயாம். இன்று–யாம் என்கிற பதங்களுக்குச் சந்தியாகும்போது 'இன்றுயாம்' என்றாகாது; (இன்றியாம்) என்றேயாகும். பதம் பிரிக்கும்போது (இன்று, யாம்) என்று பிரித்தாலும் சந்தியோடு உச்சரிக்கும்போது (இன்றியாம்) என்றுதான் உச்சரிக்கவேண்டும். "உயிர்வரின் உக்குறள் மெய்விட்டோடும், யவ்வரின் இய்யாம்" என்பது நன்னூற்சூத்திரவிதி. வருமொழி முதலில் யகரம் வந்தால் முன்னின்ற உகரம் இகரமாகும் என்றபடி. வரகு–யாது, வரகியாது. கதவு–யாது–கதவியாது. இந்த விதி அருளிச்செயல்களிலும் தழுவப்பட்டே வருகின்றது. காதல்மற்று யாதுமில்லை–மற்றியாதுமில்லை. யான்செய்வதிவ்விடத்திங்குயாது–இங்கியாது? இங்ஙனே பலவுங்காண்க. ஆக, முன்னெடுத்த திருப்பாவைப் பாசுரத்தில் 'இன்றியாம் வந்தோம்' என்றுதான் உச்சாரணம் என்று தேறிற்று. இங்குப் பதம் பிரிக்கும்போது இன்று என்று பிரிப்பது போலவே இன்றி என்றும் பிரிக்கலாம்; சந்தி இரண்டுக்குமொக்குமாதலால்,



இன்றி என்பதற்கு 'இல்லாமல்' என்று பொருள். எது இல்லாமல்? என்று கேள்விவரின் ஒன்றுமில்லாமல் [ஆகிஞ்சந்யங்கொண்டு] என்க. உபாயாந்தர மில்லாமல், உபேயாந்தரமில்லாமல், ப்ரயோஜநாந்தரமில்லாமல் என்று விரித்துக் கொள்க. திருமந்த்ரத்தில் நம: பதத்தாலே விரோதிநிரஸநம் செய்யப்படுவதாகவும், நிரஸிக்கப்படவேண்டிய விரோதிகள் ஸ்வரூப விரோதி, உபாய விரோதி, உபேய விரோதி என மூன்றென்றும் முமுக்ஷுப்படியிலே விவரிக்கப்படுகிறது. ஸ்வரூப விரோதி கழிந்தால் *யானே நீ என்னுடைமையும் நீயே* என்று அநுஸந்திக்க நேருமென்றும், உபாய விரோதி கழிந்தால் *களைவாய்துன்பம் களையாதொழிவாய் களைகண்மற்றிலேன்* என்று அநுஸந்திக்கநேருமென்றும், உபேயவிரோதி (அதாவது, புருஷார்த்தவிரோதி)யின் கழிவை *மற்றை நங்காமங்கள் மாற்று* என்று ப்ரார்த்திக்கவேண்டும்படி யிருக்குமென்றும் காட்டப்படுகிறது. ஆக, இம்மூன்று வகையான விரோதிகளிலே ஒன்றுமின்றிக்கே ஆகிஞ்சந்ய அநந்ய கதித்வபூர்த்தியையுடையோமாய் வந்தோம்; நீ இரங்குவதற்கு இடையூறாக எங்களிடமொன்றுமில்லை; ஆகையாலே இரங்கியருளவேணும்—என்றதாகத் தேறிநின்றது. ... ... ... ❋

17 **ஆசார்ய பக்திப்ரகாசனத்தில் ஓர் அற்புதம்.** ஸ்ரீமந்நாதமுனிகள் தொடங்கி நிகழும் நம்முடைய ஆசாரிய பரம்பரையில் திகழுமனைவரும் தம்தம் ஆசாரியர்களிடத்திலே அபரிமிதமான பக்திபூண்டவர்களென்பதில் ஸந்தேஹமோ விவாதமோ எவர்க்குமில்லை. "மந்த்ரே தத்தேவதா யாஞ்ச ததா மந்த்ரப்ரதே குரௌ: த்ரிஷு பக்திஸ் ஸதா கார்யா ஸா ஹி ப்ரதம ஸாதனம்* என்கிற ப்ரமாணத்தை யநுஸரித்துப் பிள்ளைலோகாசாரியர் முமுக்ஷுப்படியின் தொடக்கத்திலேயே "மந்த்ரத்திலும் மந்த்ரத்துக்கு உள்ளீடான வஸ்துவிலும் மந்த்ரப்ரதனான ஆசார்யன் பக்கலிலும் ப்ரேமம் கனக்கவுண்டானால் கார்யகரமாவது" என்றருளிச் செய்தார். ஆகவே ஆசார்யன் பக்கலிலே பக்தியைக் காட்டுவது சிஷ்யர்களுக்கு ச்ரேயஸ்கரமென்றதாயிற்று. சிஷ்யர்கள் ஆசார்ய பக்தியைக் காட்டும் விதம் பலவகைப் பட்டுள்ளது. ஆசாரியர்கள் இவ்விபூதியி லெழுந்தருளியிருக்கும் நாள்வரையில் கணப்பொழுதும் விட்டுப்பிரியாமே அநுவர்த்திருத்தல், அவர்கள் விஷயமாக ஸ்துதி நூல்களை யியற்றுதல், அவர்களின் ஸ்ரீ ஸூக்திகளை எங்கும் பரவச்செய்தல், அவர்களது திவ்யமங்கள விக்ரஹத்தை அர்ச்சையிலிட்டு ஆராதித்தல். என்றிப்படி பல ப்ரகாரங்களுண்டன்றே. கூரத்தாழ்வான் எம்பெருமானாரையே பரதெய்வமாகக் கொண்டவராதலால் அவரிடத்தி லுண்டான அப்ரதிமபக்தியைத் தம்முடைய ஸ்தவங்களில் *யோநித்யமச்யுத



பதாம்புஜேத்யாதியான தனியனையிட்டும், இடையிடையே *தேவ! த்வதீய சரணப்ரணயப்ரவீண ராமாநுஜார்ய விஷயீக்ருதமப்யஹோ மாம்* என்றும் *ஸ்ரீராமாவரஜமுநீந்த்ரலப்தபோத:* என்றுமருளிச்செய்தும் காட்டியுள்ளார். இதேபோல் மணவாளமாமுனிகளும் ஸ்வாசார்யரான திருவாய்மொழிப் பிள்ளை பக்கலிலேயுண்டான பக்தியைத் தம்முடைய ஸூக்திகளிலே "ஸ்ரீசைலநாத கருணாபரிணமதத்தாம்* என்றும், *எந்தை திருவாய்மொழிப் பிள்ளையின்னருளால்* என்றும் காட்டியருளுகிறார். இதையெல்லாம்விட அதிசயிதமானவொரு பத்தியை அஸ்மத்குலகூடஸ்தரான ப்ரதிவாதிபயங்கரம் அண்ணாவின் ஸ்ரீஸூக்திகளிலே காட்டுகிறேன் காண்மின். மணவாளமாமுனிகள் சிஷ்யமண்டலீபரிவ்ருதராய்த் திருமலை யாத்திரையாக எழுந்தருளியிருந்தபோது அங்கே ஸுப்ரபாத ப்ரபத்தி மங்களாசாஸனஸ்துதிகள் அநுஸந்தானத்தி லில்லாத குறையைத் தீர்க்கத் திருவுள்ளம்பற்றி அவை விண்ணப்பஞ் செய்யும்படி அண்ணாவுக்கு



நியமித்தருள, அப்படியே விண்ணப்பம் செய்தார். அவை அன்றுமுதலின்றளவாக விசேஷ வைபவங்களுடன் திருமலையில் நித்யாநுஸந்தானத்திலிருந்து வருவதை உலகமெல்லாமறியும். அண்ணா அதில் தமக்குள்ள ஆசார்யபக்திப் பெருமையைக் காட்டியிருக்கும் வகை ஏதென்றால், *ஸௌம்யோபயந்த்ருமுநிநா மம தர்சிதௌ தே* என்றும் *ஸ்ரீமத் ஸுந்தரஜாமாத்ரு முநிமாநஸவாஸிநே* என்று மருளிச்செய்துள்ளார். திருவேங்கடமுடையானை விளித்து 'ஸ்வாமிந்! தேவரீருடைய திருவடிகளை அடியேனுக்கு மணவாளமாமுனிகள் காட்டிக்கொடுத்தருளினார்' என்றும், 'மணவாளமாமுனிகளின் திருவுள்ளத்திலேயுறைகின்ற திருவேங்கடமுடையானுக்குப் பல்லாண்டு' என்றும் இங்ஙனேயருளிச் செய்திருப்பது மற்றை

யாசாரியர்களின் ஸ்ரீஸூக்திகளில் காணுத அபூர்வ பத்ததியாகும். "உன் திருவடிகளை நீயே காட்டிக்கொடுக்கக் கண்டேன்" என்றருளிச்செய்த ஆழ்வார்களைப் போலன்றியும், பொதுவாக ஆசாரியர்கள் காட்டிக்கொடுத்த திருவடிகளென்னுமலும், "அஸ்மதாசார்ய ர்யந்தாம்" என்றருளிச் செய்த கூரத்தாழ்வானைப் போலல்லாமலும் ஸூவ்யக்தமாக "ஸௌம்யோபயந்த்ருமுநிநா மம தர்சிதௌ" என்றருளிச்செய்தது விலக்ஷண குருபக்தியின் கனத்தாலேயன்றோ? ... ✽

18. ***தாழ்சடையும் நீண்முடியுமொண்மழுவும் சக்கரமும்.*** இதுமே திருவேங்கடமுடையானுடைய ப்ரஸ்தாவம் நிகழ்ந்தபடியால் திருவேங்கடமுடையானைப்பற்றி அவதரித்துள்ள ஆழ்வார் பாசுரங்களில் பேயாழ்வார் பாசுரமொன்றில் பலர்க்குமுண்டான விசிகித்ஸை தீர ஒரு சிறு விண்ணப்பம் செய்கிறேன். மூன்றுந்திருவந்தாதியில் அறுபத்து மூன்றும் பாசுரம் - *தாழ்சடையும் நீண்முடியும் ஒண்மழுவும் சக்கரமும், சூழரவும் பொன்னுணும் தோன்றுமால்— சூழுந்திரண்டருவிபாயுந்திருமலை மேலெந்தைக்கு, இரண்டுருவுமொன்றுயிசைந்து.* என்பதாம். இப்பாசுரத்தின் பொருள் சிரமப்பட்டுத் தெரிந்துகொள்ள வேண்டாமே எளிதாகவே தெரிந்துகொள்ளக் கிடக்கின்றது. திருவேங்கடமுடையானுக்குத் தாழ்ந்த ஜடையுமுண்டு, ஓங்கின திருவபிஷேகமுமுண்டு, மழுப்படையுமுண்டு, சக்கரப்படையுமுண்டு; நாகாபரணமுமுண்டு, பொன்னரைநாணுமுண்டு; ஒன்றுக்கொன்று சேராச்சேர்த்தியாயிருக்கிற இரண்டுவடிவும் திருமலையப்பனுக்கு ஒருவடிவமாய் அமைந்து விளங்காநின்றது – என்பதாகப் பொருள் அநாயாஸமாகக் கிடைக்கின்றது. ஆனுல் திருவேங்கடமுடையானுடைய திருமேனி இங்ஙனே ஸேவை ஸாதிக்கவில்லை. திருவேங்கடமுடையானையநுபவித்தவர்களில் ஒருவரும் இப்படி பணித்ததுமில்லை. இவ்வாழ்வாரொருவர் மட்டும் இங்ஙனே யருளிச் செய்ததற்குக் கருத்து என்ன? என்று விசாரம் விளைவதுண்டு. இதற்கு இரண்டு மூன்று வகையான ஸமாதானங்களுண்டு. ஒருவகையான ஸமாதானம் இங்கு விண்ணப்பிக்கலாகிறது. ஆழ்வார்களின் அநுபவம் பலவகைப்பட்டது. *கள்ளவேடத்தைக் கொண்டுபோய்ப் புறம்புக்கவாறும்* என்று திருவாய்மொழியில் கள்ளவேடமான புத்தாவதாரமும் அநுபவிக்கப்பட்டிருப்பது காணுநின்றோம். அதிமாநுஷ ஸ்தவத்தில் *ப்ரஹ்மேச மத்யகணநா* என்றருளிச் செய்தபடி ப்ரஹ்மருத்ரர்களின் இடையிலே வந்து பிறந்தபடியையும் திருமங்கையாழ்வார் *நல்லரன் நாரணன் நான்முகனுக்கு* என்ற பாசுரத்திலுல் அநுபவிக்கக் காண்கிறோம். இப்போதெடுத்த பேயாழ்வார் பாசுரத்திலுள்ள அநுபவம் சங்கரநாராயணுவதாரத்தை நோக்கியது.



இவ்வவதாரத்தை ஹரிஹராவதாரமென்றும் சொல்லுவதுண்டு. பாதி வடிவம் ஸ்ரீமந்நாராயண மூர்த்தியாகவும், பாதி வடிவம் பரமசிவ மூர்த்தியாகவும் கொண்டு அவதரித்தபடியாமிது. *எம்மாவுருவும் வேண்டுமாற்றலாவாய் எழிலேறே* என்கிற திருவாய்மொழியின் படி எம்பெருமான் கொண்ட கோலங்களெல்லாம் பகவத் பக்தர்கட்கு உபாஸ்யமன்றுகிலும் பரசுராமாவதாரத்தை யநுஸந்திப்பது போலவே அநுஸந்திக்கத் தட்டில்லாமையாலே அந்த சங்கரநாராயணுவதாரத்தை இப்பாட்டிலுல் பேயாழ்வார் அநுஸந்திக்கிறுர். "திருமலைமேலெந்தைக்கு இரண்டுருவும் ஒன்றுயிசைந்து தோன்றும்" என்று மூல ஸ்ரீ ஸூக்தி காண்கிற படிக்கேற்ப இப்போது இரண்டுருவுமொன்றுயிசைந்து தோன்றுகிறபடியன்று. திருமலையப்பன் தானே ஒரு ஸமயத்திலே இரண்டுருவையும் ஒன்றுயிசைத்துக் கொண்டு தோன்றினவன் - என்றே பொருள்படும். "ஒருகால் ஆனையனுனைக் கண்டது தென்னரங்கத்தே" என்றுப்போலவே இதனையுங்கொள்க. நம்முடைய திவ்யார்த்த தீபிகையிலே இன்னமும் விரிவுகாண்க. ... ... ✽

19. **ஸ்ரீமான். R. ஸ்ரீநிவாஸய்யங்காரைப்பற்றி ஒரு சிறு வார்த்தை.** இங்கே காட்சிதருகின்ற ஸ்ரீ R. ஸ்ரீநிவாஸய்யங்காரென்பவரைத் திருவல்லிக்கேணியிலும் சென்னையிலும் பலர் ஸாதாரணமாகப் பார்த்துக்கொண்டிருப்பவர்களே. இவரிடத்தில் ஒரு விசேஷமிருப்பதாக யாரும் நினைக்கும்படியிராது. ஸிம்ப்ஸன் கம்பெனியில் ஒரு பெரிய உத்யோகத்திலிருப்பவரிவர் என்பதை சென்னைவாஸிகள் அறிந்திருப்பர்கள், இவரை நான் தெரிந்துகொள்ளவேண்டிய ப்ரமேயமில்லாமையால் பலவாண்டுகள் வரையில் இவரை நான் தெரிந்துகொள்ளவேயில்லை. பலவருஷங்களாக என்னுடைய உபந்யாஸ கோஷ்டிகளுக்கு வந்துகொண்டிருப்பவர் என்றுமட்டும் வெகுகாலங்கழித்துத் தெரியவந்தது. நாலைந்து வருஷங்களுக்கு முன்பு ஒருநாள் இவர் ஆங்கிலத்தில் டைப்செய்து ஏழெட்டு பக்கங்கள் அனுப்பினுர். அதை நான் ஸ்வபுத்தியால் பூர்த்தியாகத் தெரிந்துகொள்ள முடியாதவனுகையால் தகுந்தவர்களின் உதவியைக்கொண்டு தெரிந்துகொள்வோமென்றெண்ணி உள்ளே வைத்திருந்தேன். அடுத்தவாரத்தில் மறுபடியும் முன்னிலும் அதிகமாகப் பத்துபன்னிரண்டு பக்கங்கள்கொண்டதாய் டைப்செய்து அனுப்பிவிட்டார்.



அப்போது, முன்பு வந்திருந்ததையும் இதையும் கவனிக்கவேண்டியது அவசியமாயிற்று. ஆங்கில நிபுணர்களின் உதவியைக்கொண்டு ஆராய்ந்துபார்த்ததில் இவர் ஒரு பெரிய வேதாந்தியாயிருப்பர் போலுமென்றெண்ணி நேரில் ஸம்பாஷிக்க விருப்பங்கொண்டு அதை அவர்க்குத் தெரிவித்தேன். அவர் உபந்யாஸங்களுக்கு வந்துகொண்டிருந்தாலும் என்னைச் சந்திக்காமல் உபந்யாஸம் முடிவதற்கு சற்று முன்னாடியே யெழுந்துபோவதும், யாராவது அழைத்தாலும் பராமுகமாகவே போய்விடுவதுமாயிருந்தார். பிறகு இவரைப்பற்றிச் சிலரிடம் விசாரிக்கையில், "இவர் ஒருவரோடும் பேசுவதில்லை, கலந்துகொள்வதுமில்லை; இவரைப்பற்றி யார்க்கும் ஒன்றுமே தெரியாது" என்று இவ்விதமாகவே பலரும் சொன்னார்கள். நானும் வாளா இருந்துவிட்டேன்.

பிறகு அதிகமாக நெருங்கத் தொடங்கினார். ஆனாலும் வாய்விட்டு ஒன்றும் பேசுவதில்லை. பழங்கள் வாங்கிவந்துவைப்பதும் பேனா பென்ஸில் பேபர்கள் வாங்கியனுப்புவதுமாயிருந்தார். எனக்கு ஆங்கிலத்தில் அதிக பரிசயமில்லையென்று தெரிந்துகொண்டு தமிழிலேயே 20பக்கம் 30பக்கம்போல் எழுதியனுப்பிக்கொண்டேயிருப்பர். இடையிடையில் அச்சிட்டுமனுப்புவர். பிறகு அடிக்கடி சந்திக்க நேர்ந்தாலுங்கூட மௌனச் சாமிபோல் நின்றுகொண்டிருப்பரேயொழிய நாலு வார்த்தைகளைச் சேர்த்துச் சொல்லமாட்டார். இவரெழுதுகிற விஷயங்களைப் பார்த்தாலோ வேதாந்த ஸம்பிரதாய நூல்களில் அளவிறந்த கேள்வியறிவுள்ளவரென்றே அறியக்கிடக்கிறது. ஸ்ரீ வைஷ்ணவ ஸித்தாந்தத்திலும் விசேஷித்துத் தென்னாசார்ய ஸித்தாந்தத்திலும் உண்மையான அபிநிவேச முள்ளவரிவர் என்று என்மனம் நம்பிக்கை கொண்டது. இவர் ஞானமுத்திரையோடு தன்னுருவப் படத்தைப் பல வெளியீடுகளில் பிரசுரித்து வருகிறார். அந்தப் படமேதான் [அவர் கொடுக்கக் கிடைத்தது] இங்குங் காட்சி தருகின்றது. இதனால் இவர் டாம்பிகராயிருப்பரோவென்றும் நான் சங்கித்ததுண்டு. திருவல்லிக்கேணியிலெழுந்தருளியிருக்கும் ஸ்ரீ உவே. ஆசால். சேஷாசாரியர் (அட்வொகேட்) ஸ்வாமியும் இதைப் பற்றி வார்த்தையாடநேர்ந்தது. இவருடைய செவியிலும் இது எட்டியிருப்பதாகவே தெரிந்துகொண்டேன். இவர் எதையும் லக்ஷியம் செய்கிற ப்ரக்ருதியாகத் தோன்றவில்லை. இவரிடத்திலுள்ள திடமான சில அத்யவஸாயங்களே இங்கு இவ்வளவு தூரம் என்னை எழுதச்செய்தன. ... ... *



## 20. மேலேகுறித்த ஸ்ரீநிவாஸய்யங்காருக்கு ஒருநாள் நான் தெரிவித்த கதையொன்று

லௌகிகத்தில் D. S. P எனப்படுகிற போலீஸ் ஜில்லா ஸூபெரின்டெண்டு அதிகாரியொருவர் ஒருநாள் ஒரு கிராமத்திற்குச் செல்லநேர்ந்தது. அங்கே ஒரு மாட்டுவண்டியில் உட்கார்ந்துகொண்டு மிகக் குறுகிய தெருவில் செல்லுகின்றார். அந்தக் குறுந்தெருவில் ஒரு வண்டிதான் போவதற்குப் பாதையுள்ளது. எதிரே வேறொரு வண்டிவந்தால் ஏதாவதொரு வண்டியைப் பின்னுக்குத் திருப்பியேயாக வேண்டும். வேறு கதி கிடையாது. D. S. P. போகிற வண்டி அந்தத் தெருவில் இருபது கஜம் தூரம் சென்ற பிறகு எதிரே ஒரு வண்டி தென்பட்டது. அதில் சாமானிய மனிதர் சிலர் இருக்கிறார்கள். ஏதேனுமொரு வண்டியைப் பின்னுக்குத் திருப்பியேயாக வேண்டுமே. எதிரே வந்த வண்டியைத் திருப்புவதானால் அதிக தூரம் திருப்பியடிக்க வேண்டியதாகிறது. இந்த வண்டியைத் திருப்புவதானால் ஸ்வல்ப தூரமே திருப்பவேண்டியதாகிறது. நியாயப்படி இதைப் பின்னுக்கடிக்க வேண்டியதே யுக்தமாயிருந்தும் இந்த வண்டிக்காரன் எதிர் வண்டிக்காரனைப் பின்னுக்குத் தள்ளும்படி அதட்டுகிறான். அவனோ இவனை அதட்டுகிறான். இவன் வண்டியில் D. S. P. உட்கார்ந்திருப்பதால் தன் வண்டிக்கு ஏற்றம் நினைத்து 'ஐயா இருக்கிறார்; ஜாக்கிரதை! பின்னுக்குத் தள்ளு; வீணாக கெட்டுப்போய் விடாதே' என்று அதிகமாக அதட்டுகிறான். ஆனால் D. S. P. அதிகாரியானவர் தன் அதிகாரத்திற்குரிய உடுப்பு (ட்ரஸ்) களை அணிந்து கொள்ளாமல் பெட்டிக்குள்ளே வைத்துவிட்டு ஒரு பக்கிரி போலவே யிருப்பதால் எதிர் வண்டிக்காரனுக்கு ஐயாவின் பெருமை தெரியவில்லை. ஆதலால் 'ஐயா என்ன பண்ணிவிடுவர்? உன் வீண் மிரட்டலுக்கு இங்கு யாரும் பயப்படுவாரில்லை' என்று ஏதேதோ சொல்லி யதட்டுகிறான். பிறகு D. S. P. அதிகாரியும் அந்த எதிர் வண்டிக்காரனை வெருட்டத் தொடங்கினார். இவரை அதிகாரியாக அறிந்து கொள்ளாமையாலும் அறிந்துகொள்ள ப்ரமேய மில்லாமையாலும் இவரையும் அவன் எதிர்த்துப் பேசுகிறான். அப்போது அதிகாரியானவர் தமது கடமையையுணர்ந்து பெட்டியைத் திறந்து உடுப்புகளை யெடுத்து அணிந்துகொண்டு கையில் பிரம்பை யுங்கொண்டு நின்றார்; உடனே அந்த எதிர் வண்டிக்காரன் விஷயமறிந்து அஞ்சி நடுங்கி நமஸ்காரஞ்செய்து மன்னிப்புக் கேட்டுக்கொண்டு தன் வண்டியைப் பின்னுக்குத் தள்ளிக்கொண்டு சென்றான்.

இதுவொரு ஸாதாரண கதையானாலும் இதிலிருந்து உயர்ந்த தத்துவம் நாமறியக் கிடக்கிறது. D. S. P. முதலானவர்கள் உண்மையில் அதிகாரிகளே யானாலும் அவரவர்களுக்குரிய லக்ஷணங்கள் [பாஹ்ய வேஷங்கள்] இல்லாத வரையில் அவர்களுக்கு மதிப்பு ஏற்படுகிறதில்லை. அதுபோலவே நாமும் ஆந்தரமாக எவ்வளவு அதிகார ஸம்பத்தியை உடையோமாயிருந்தாலும் சாஸ்த்ரங்களில் நமக்கென்று ஏற்பட்டிருக்கிற பாஹ்ய சின்னங்களையும் அவசியம் ஆதரிக்கவே கடமைப் பட்டிருக்கிறோம். "த்ரவந்தி தைத்யா: ப்ரணமந்தி தேவதா: நச்யந்தி ரக்ஷாம்ஸி அபயந்தி ச அரய:" என்று ஸ்ரீ விஷ்ணு தர்மத்தில் அற்புதமாகச் சொல்லப்பட்டிருக்கின்ற பெருமை நமக்கு நிலைநிற்க வேண்டில் நமது பெரியோர்கள் ஆதரித்த பாஹ்ய சின்னங்களை நாம் மிகுந்த பிரதிபத்தியுடன் ஆதரிக்கவே வேண்டும். அதுதான் நமக்கு உண்மையில் கௌரவாவஹம். ... ❁

## 21. நம்பியென்னும் திருநாமத்தைப்பற்றி ஸந்தேஹ விண்ணப்பம்

பெரியாழ்வார் திருமொழியில் நான்காம் பத்தில் ஆறுவது பதிகம் "காசுங் கறையுடைக் கூறைக்கும்" என்று தொடங்குவது. இப்பதிகத்தின் ப்ரமேயம் என்னவென்றால், உலகில் அவரவர்கள் தந்தம் மக்களுக்குப் பெயரிடும்போது க்ஷுத்ரபலன்களை நச்சி க்ஷுத்ர தெய்வங்களின் பெயர்களையும் மற்றும் பொருளற்ற பல பெயர்களையும் இடாமல் ஸ்ரீமந் நாராயணனுடைய திருநாமங்களை இடவேணுமென்று பரோபதேசஞ்செய்வதே இப்பதிகத்தில் ஆழ்வார் எடுத்துக் கொண்ட விஷயம். நிகமனப் பாசுரத்தில் 'சீரணிமால் திருநாமமேயிடத் தேற்றிய வீரணி தொல்புகழ் விட்டுசித்தன் விரித்த" என்றிருப்பதுகொண்டும் இதனையறியலாம். பாசுரந்தோறும் "கேசவன் பேரிட்டு நீங்கள் தேனித்திருமினோ" என்றும், "செங்கணெடுமால் சிரீதரா வென்றழைத்தக்கால்" என்றும் "எம்பிரான் திருநாமமே நச்சுமின்" என்றும்.... இப்படி பகவந்நாமங்களையெடுத்துரைத்து இவற்றையே மக்களுக்கு இடவேணுமென்றும், இப்படியிட்டால் இடுகிற மாதாபிதாக்களுக்கு நரக ப்ராப்தியே நேராதென்றும் அருளிச் செய்யப்படுகிறது. இங்ஙனே உபதேசிக்குமிப்பதிகத்தில் எட்டாவது பாசுரம் "நம்பி பிம்பி யென்று நாட்டு மானிடப் பேரிட்டால், நம்பும் பிம்பு மெல்லாம் நாலு நாளிலழுங்கிப்போம். செம்பெருந்தாமரைக் கண்ணன் பேரிட்டழைத்தக்கால், நம்பிகாள் நாரணன் தம்மன்னை நரகம்புகாள்" என்றுள்ளது. இதனால், மக்களுக்கு நம்பி யென்று பெயரிடுவதும் கூடாதென்று ஆழ்வாருடைய திருவுள்ளம் வெளியாகின்றது. நம்பியென்கிற பெயரோடு பிம்பியென்கிற ஒரு (அர்த்தமற்ற) பெயரையும் கூட்டி, நம்பி யென்று பெயரிடுவதோடு பிம்பி யென்று பெயரிடுவதோடு ஒரு வாசியில்லையென்று எளிதாகத் தெரிந்துகொள்ளும்படி பாசுரமருளிச் செய்திருக்கையாலே இங்கே வலிதான சங்கை தோன்றுகின்றது. நம்பி யென்பது எம்பெருமானுடைய திருநாமமாகத் திவ்வியப் பிரபந்தங்களிற் பல விடங்களில் தெரிய வருகிறது. இப்பெரியாழ்வாரது திருமொழியிலேயே இப்பதிகத்திற்குக் கீழும் மேலும் பலவிடங்களிலும் "சாளக்கிராமமுடைய நம்பி" 'வாமன நம்பி' 'காகுத்த நம்பி' 'நாரண நம்பி' 'உலகு தன்னை வாழ நின்ற நம்பி' என்று அருளிச் செய்யப்பட்டிருக்கின்றது. திருவாய்மொழி முதலானவற்றிலும் "நம்பியைத் தென்குறுங்குடிநின்ற" "நல்கியென்னை விடான் நம்பி நம்பியே" "தன்னம்பி நம்பியுமிங்கு வளர்ந்தது" என்றிவை போலும் பல பாசுரங்கள் எம்பெருமானுக்கு நம்பியென்கிற திருநாமமுண்டென்பதைக் காட்டுகின்றன. பெரியநம்பி, திருக்கச்சி நம்பி இத்யாதிகளுமுண்டே. இப்படியிருக்க, நம்பியென்பதை நாட்டுமானிடப் பேராகப் பெரியாழ்வார் இங்கு அருளிச்செய்தது எங்ஙனே பொருந்தும்? என்கிற சங்கை பலருடைய மனத்திலும் தோன்றக்கூடியதே. இதற்குச் சொல்லக்கூடிய ஸமாதானம் கேளீர். வடமொழியில் ஸித்தாந்த கௌமுதியென்பது மிகச்சிறந்த வியாகரண நூல். அதில் முகப்பிலேயே "முநித்ரயம் நமஸ்க்ருத்ய ததுக்தீ: பரிபாவ்ய ச" என்றார். வரருசி, பதஞ்ஜலி, பாணிநி யென்னும் மஹர்ஷிகள் மூவரையும் வணங்கி அவர்களின் உக்திகளைச் சிந்தனைசெய்து என்பது வக்தாவின் விவக்ஷை. ஆனால் பரிபாவ்ய என்கிற ல்யபந்தத்திற்குப் பரிபவமடையச் செய்து என்கிற பொருள்தான் ஒவ்வொருவர்க்கும் ஸ்வரஸமாகத் தோன்றக் கூடியது. ப்ரயோகித்தவர் ஸாமாந்யரல்லாமையாலே அவருடைய ஹ்ருதயத்தையே பரம ப்ரமாணமாகக் கொண்டு பரிபவப் பொருளை விட்டு சிந்தனைப் பொருளைக் கொள்ளுகிறோம். அவ்விதமாகவே இங்கும் காணவேணும். ஸர்வஜ்ஞரான பெரியாழ்வார் அவத்தமாக அருளிச் செய்யமாட்டார். நாராயணனுக்கும் நம்பி யென்கிற திருநாமமுண்டென்பதில் அவ்வாழ்வார்க்கு விப்ரதிபத்தி யிருக்க நியாயமில்லை. நம்பியென்று பெயரிடுமவர்கள் இது நாராயண நாமமென்கிற ப்ரதிபத்தியோடல்லாமல் செல்வம் மிகுந்தவன் என்கிற பொருளைமாத்திரங்கொண்டு இந்திரன் குபேரன் என்றிப்படிப்பட்ட பெயர்களை யிடுவது போலவே இதையும் இடுகிறவர்களாயிருப்பதால் அன்னவர்களை க்ஷேபிக்கிறார் என்று இவ்வளவே இங்கு நாம் கூறலாம். வேறு வகையான ஸமாதானங்களைக் கூறவல்ல மஹான்களுளரேல் அன்புகூர்ந்து கூறுக. ... ... ... ... ❁

## 22. பெரும்பூதூர் மாமுனிக்குப் பின்னானாள்.

ஆண்டாளுடைய வாழி திருநாமத்தில் எம்பெருமானார்க்குத் தங்கையாக ஆண்டாள் அநுஸந்திக்கப்பட்டு வருவது உலகமறிந்தது. ஆண்டாளுக்குப் பின் பல வருஷங்கள் கடந்த பிறகு அவதரித்தவரான எம்பெருமானார் அவ்வாண்டா ளுக்குத் திருத்தமையனாராக எப்படியிருக்க முடியும்? என்னில்; ஸம்ப்ரதாய இதிஹாஸ விசேஷம் கேண்மின். எம்பெருமானார் கோயிலில் நாச்சியார் திருமொழி காலக்ஷேபம் நடத்தியருளுகையில் அதில் *நாறு நறும் பொழில் மாலிருஞ்சோலை நம்பிக்கு நான், நூறுதடாவில் வெண்ணெய் வாய்நேர்ந்து பராவிவைத்தேன், நூறுதடா நிறைந்த அக்கார வடிசில் சொன்னேன், ஏறுதிருவுடையான் இன்று வந்திவை கொள்ளுங்கொலோ* [9—6] என்கிற பாசுரத்தின் பொருளை விவரித் தருளுகையில் "திருமாலிருஞ்சோலையழகர்க்கு நூறுதடா நிறைந்த வெண்ணெயும் அக்காரவடிசிலும் ஸமர்ப்பிக்க ஆண்டாள் மனோரதித்துப் பாசுரம் பாடினாள்; அதை நாம் நிறைவேற்றி வைப்போம்" என்று கோஷ்டியிலே யருளிச்செய்து ஸகல சிஷ்யர்களையும் கூட்டிக்கொண்டு ஸம்பாரங்களைச் சேகரித்துக் கொண்டு திருமாலிருஞ்சோலைக் கெழுந்தருளிப் பாசுரப்படியே நிறைவேற்றிவைத்து அழக ருடைய பேரருளைப் பெற்று மகிழ்ந்து, அங்கு நின்றும் ஸ்ரீ வில்லிபுத்தூரிலே ஆண்டாளையும் மங்களாசாஸனஞ் செய்துவருவதாகத் திருவுள்ளம் பற்றி அங்கேற வெழுந்தருளி ஸன்னிதிக்குள் செல்லுகையில் ஆண்டாள் ஆனந்தம் பூரித்து அர்ச்சாவதார ஸமாதியைக் கடந்து எதிர்கொண்டு வந்து "எம் அண்ணரோ நீர்" என்று சோதிவாய் திறந்தருளிச் செய்து ஆரத்தழுவி யருளினாள். தான் மனோரதித்து வாசிகமாகச் சொல்லிவைத்ததை ஸ்வாமி ஸாக்ஷாத்தாக நிறைவேற்றிவைத்த படியினால், தங்கை மனோரதித்ததைத் தமையனார் நிறைவேற்றிவைக்கிற கணக்கிலே யானதாகக் கொண்டு ஆண்டாள் இங்ஙனம் கூறியது மிகவும் பொருத்தமானது. அன்று முதலாக எம்பெருமானார்க்கு அண்ணரென்கிற ப்ரஸித்தியும் ஆண்டாளுக்கு *பெரும்பூதூர் மாமுனிக்குப் பின்னானாளென்கிற ப்ரஸித்தியுமுண்டாயிற்று. ... ... ...



## ஸஹஸ்ரநாம பாஷ்யப் பெருமையைப் பற்றின விண்ணப்பங்கள் - எட்டு

23. ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமத்திற்கு த்ரிமதஸ்தர்களாலும் பாஷ்ய மியற்றப்பட்டுள்ளது. அவற்றுள் நமது விசிஷ்டாத்வைத ஸம்பிரதாயத்திற் கான பாஷ்யம் பட்டருடையதேயாம். அதற்கு **பகவத்குணதர்ப்பண** மென்று திருநாமம் சாத்தினது சாலப்பொருத்தம். குணாநுபவஞ் செய்யக் குதூஹல முள்ளவர்கள் ஈடு முப்பத்தாறாயிரப்படி யென்கிற பகவத் விஷய திவ்ய க்ரந்தத்தில் போது போக்க வேணுமென்பது ப்ரஸித்தம். அதில் அவகாஹிக்க ப்ராப்தியற்ற சுத்தஸம்ஸ்கிருத பண்டிதர்கள் சாஸ்த்ரஜ்ஞானமுள்ளவர்கள் அற்புதமாகக் குணாநுபவஞ்செய்ய விரும்பினால் அவர்களுக்கு பட்டருடைய ஸஹஸ்ரநாம பாஷ்யமே தஞ்சமென்னத்தகும். ஏற்கெனவே ஸஹஸ்ரநாமத் திற்கு சங்கரபாஷ்யம் தோன்றியுள்ளது. நிர்க்குண ப்ரஹ்மவாதிகள் எம் பெருமானுடைய திருநாமங்களுக்கு அர்த்தஞ்சொல்லப்புறப்படுவது ஸாஹஸ மென்றெண்ணினார் பட்டர். பகவத்குணங்களை அற்புதமாக அநுபவிப்பதற் கென்றே அமைந்த இந்த ஸஹஸ்ரநாமத்திற்கு ஆழ்வார்களின் ஈரச்சொற்களில் ஆழ்ந்தவர்களன்றோ பொருள் சொல்ல முன்வரவேண்டும்; அவ்வருளிச் செயல்களுக்கு அதிமாத்ரம் வைதேசிகர்களான புறச்சமயிகள் இதற்குப் பொருளுரைப்பதாக விழிந்து மனம்போனபடியெல்லாம் வியாக்கியானம் செய்திருப்பது என்னே! என்று மிக வருந்திய பட்டர் தாம் வியாக்யானிக்க எம்பெருமானாருடைய நியமனம் பெற்றிருந்தார். குணாநுபவத்திற்கென்று இட்டுப்பிறந்தவர்களில் தலைவரன்றோ பட்டர். அருளிச்செயலமுதக் கடலில் அல்லும் பகலும் குடைந்தாடி அரும் பெரும் பொருள்களை அற்புதமாக அனுபவித்தும் அநுபவிப்பித்தும் போந்த பரமரஸிக ஸார்வபௌமரான பட்டர் அருளிச்செய்த பாஷ்யத்தை நம்மவர்களிலும்பரிபூர்த்தியாக ஸேவிப்ப வர்கள் மிகச் சிலரே. உண்மையில் இந்த பாஷ்யத்தை யநுபவிக்க அதிகாரிகள் தூர்லபர்கள்; ஏனென்றால் "**பரிசிதமிவ அதாபி கஹநம் பஹுமுகய வாணீவில ஸிதம்**" என்று ஸ்ரீரங்கநாச்சியாரை நோக்கித் தாம் வேண்டினபடியே அதி கம்பீரமான வாக்விலாஸங்களைக்கொண்டே பெரும்பாலும் இந்த பாஷ்யத்தை அமைத்தருளியுள்ளார். ஆகவே இதற்கு அதிகாரிகள் மிகச் சிலரேயாவர். ஒருவாறு அதிகாரம் பெற்றவர்களும் இதைக் கொண்டு போது போக்கு வதைக் காணோம். 'அவச்யமானபோது எடுத்துப்பார்ப்பது' என்கிற முறையில் இதை யெடுத்துப் பார்ப்பவர்கள் சிலருளரேயன்றி ஸ்ரீபாஷ்ய

கீதாபாஷ்யாதிகளைப் போலவே இதையும் நியமேந ஸேவிக்கப் பெறுவாரில்லையே யென்கிற நிர்வேதம் நமக்குப் பெரிதுமுளது. திவ்யப்ரபந்தங்களில் அவகாஹனமில்லாமையோடுகூட அவற்றில் த்வேஷமுமுள்ளவர்கள் இந்த பாஷ்யாம்ருத ஸாகரத்தில் இறங்காதிருப்பதே மிக நன்று. ... *

## 24. ஸத்க்ருதிः என்ற திருநாமத்தின் பொருளினிமை.

இங்ஙனே நாம் பேசத்தக்க பெருமை இந்த பாஷ்யத்துக்கு உள்ளதென்பதை இங்குச் சிறிது நிரூபிக்க விரும்பி ஸஹஸ்ரநாமத்திலிருந்து சில திருநாமங்களை யெடுத்துக்கொண்டு, பிறருடைய பாஷ்யத்திற்காட்டிலும் பட்டருடைய பாஷ்யத்திலுள்ள ஸ்வாரஸ்யாதிசயத்தை ரஸிகர்களுக்குக் காட்டுகின்றோம். "**ஸத்கதிஸ் ஸத்க்ருதிஸ் ஸத்தா**" என்ற விடத்தில் **ஸத்க்ருதிः** என்ற திருநாமத்திற்குப் பிறர் செய்தபொருள் யாதெனில்; ஜகத்ஸ்ருஷ்டி முதலான சிறந்த காரியங்களைச் செய்பவர் என்பது. இப்பொருளை பட்டர் ஒன்றாக மதித்திலர். கீழே * **வஸுப்ரதோ வாஸுதேவோ வஸுர் வஸுமநா ஹவிः** * என்று வாஸுதேவ நாம ச்ரவண மிருப்பதால் இந்த ப்ரகரணத்திலுள்ள பல திருநாமங்கள் வஸுதேவாத்மஜனான கண்ணபிரானுடைய குணசேஷ்டிதங்களைத் தெரிவிப்பனவாகக்கொண்டு * **வஸுரேதாः** * என்கிற திருநாமம் முதலாகப் பல திருநாமங்களை க்ருஷ்ணாவதார கதா ப்ரதிபாதகங்களாகவே பட்டர் வியாக்கியானித்தருளினர். ஸ்பஷ்டமாக இப்படியே அவதாரிகையும் இட்டருளினர். **ஸத்க்ருதிः** என்னுமிந்தத் திருநாமம் அந்த ப்ரகரணத்திலிருப்பதால் இதற்குப் பிறர் செய்த பொருள் விரஸமென்று கருதி, தயிர் வெண்ணெய் களவு செய்தது, உரலோடாப்புண்டிருந்தது, குரவையாச்சியரோடு கோத்தது முதலான சிறந்த சேஷ்டிதங்களைச் செய்பவர்-என்கிற அழகிய பொருளைச் செய்தருளினர் பட்டர். ஆண்டாள் திருப்பாவையில் "உன்றன்னைச் சிறு பேரழைத்தனவும் சீறியருளாதே" என்கிறாள். 'கண்ணா! உனக்குப் பெரிய பெரிய பெயர்களிருக்க அவற்றை வீட்டுச் சிறிய பெயரையிட்டு உன்னை யழைத்ததற்காக நீ சீற்றம் கொள்ளலாகாது' என்று இங்கு க்ஷமை வேண்டப்படுகிறது. இங்குச் சிறிய பெயராகக் கருதப்படுவது எது? என்று ஆராயுமளவில் பட்டர் திருவடிகளிலே கேட்ட மஹாசார்யர்கள் **நாராயணன் தேவாதிதேவன்** இத்யாதி நாமங்கள் சிறிய பெயரென்றும், **கோவிந்தன் கோபாலன்** இத்யாதி நாமங்கள் பெரிய பெயரென்றும் அருளிச்செய்கிறார்கள். அவன் உகக்கும் திருநாமம் எதுவோ அதுவே பெருமை பெற்றதென்றும், அவன் வெறுக்கும் பெயரே சிறுமை பெற்றதென்றும் கொள்ள வேண்டியிருக்கிறது. திருவாய்ப்பாடியில் இடையர்க்குத் தலைவனாய் வந்து பிறந்து



கன்றுகளையும் காலிகளையும் மேய்த்துப் பெருமை பெற நினைத்திருக்கையில் 'கன்றுமேய்த்தினிதுகந்த காளாய்!' என்று கூப்பிட்டால் அவன் திருவுள்ளமுகக்குமேயல்லது 'நாராயணா! வைகுண்டவாஸா!' என்றால் உகக்குமோ? மிக மிக வெறுப்பன்றோ உண்டாகும். கோவர்த்தனமலையைக் குடையாகத் தூக்கி நின்றபோது அவ்வதிமாநுஷ சேஷ்டிதத்தைக் கண்டு அதிசங்கித்தவர்கள் "**தேவோ வா தாநவோ வா த்வம்?**" (தேவனா நீ?) என்ன; அதற்கு மிகச் சீறினானன்றோ, உங்களில் ஒருத்தனாய் இடையனான வென்னைத் தேவனென்று பழிக்கிறீர்களே பாவிகாள்! என்றாயிற்று அண்டர்கோன் சீறியது. இவற்றுக்கெல்லாம் நன்கு பொருந்தவன்றோ பேசவேணும். * நாராயணனே நமக்கே பறைதருவான் * என்றும் * நாற்றத்துழாய் முடி நாராயணன் * என்றும் அறியாயமாய் உன்னைச் சிறு பேரையிட்டுப் பேசினோமே. கோவிந்தன் கோபாலன் என்கிற பெரும் பெயர்களையிட்டே பேசாத பிழையைப் பொறுத்தருள வேணும். என்று சொல்லுவதாகப் பொருள் கொள்வதே பொருத்தமானதென்று கொண்டு ஆசாரியர்கள் இப்படி வியாக்கியானித்தருளினார்கள். இச் சுவையை யறிய பாக்கியமற்றவர்கள் இற்றைக்கும் இதற்கு விபரீதமான பொருளை யெழுதியும் பேசியும் வரக் காணாநின்றோம். நிற்க. ரஸிகர்கள் **ஸத்க்ருதிः** என்ற ப்ரக்ருத திருநாமத்தின் பாஷ்யம் அமைந்திருக்குமழகை நோக்கவேணும். ஜகத்ஸ்ருஷ்டி முதலிய வியாபாரங்களே பகவானுக்குச் சிறந்தவை யென்கிறார் சங்கராசார்யர்; அவையல்ல சிறந்தவை; * நெஞ்சால் நினைப்பரிதால் வெண்ணெயூணென்னுமீனச்சொல்லே! * என்றும், * காணாயன் கடிமனையில் தயிருண்டு நெய்பருக நந்தன் பெற்ற ஆனாயன் * என்றும் நம் ஆழ்வார்கள் ஈடுபடும்படியான ஈனச்செயல்களே சிறந்தவை யென்கிறார் பட்டர். * மத்துறு கடைவெண்ணெய் களவினில் உரவிடையாப்புண்டு எத்திறம் முரலினோடிணைந்திருந்தேங்கிய எளிவே! * என்று நம்மாழ்வாரை ஆறு மாஸம் மோஹிக்கச்செய்த செயலைவிட்டு மற்றொன்றையா **ஸத்க்ருதி** யென்பது! என்றாயிற்று பட்டர் திருவுள்ளம் பற்றியது. ... *

## 25. * விஜிதாத்மா விதேயாத்மா * திருநாமங்களின் அர்த்த காம்பீர்யம்.

இத்திருநாமங்களிற் செல்வோம். "**விஜிதாத்மா விதேயாத்மா ஸத்கீர்த்திச்சிந்நஸம்சயः, உதீர்ணஸ் ஸர்வதச்சக்ஷுர் அநீசச் சாச்வதः ஸ்திரः** * என்றவிடத்துள்ள பல திருநாமங்களுக்குப் பிறருடைய பாஷ்யத்தின் சுவையின்மையும் பட்டருடைய பாஷ்யத்தின் சுவைமிகுதியும் நிரூபிக்கப் படுகின்றன. **விஜிதாத்மா** என்பதற்கு மனத்தை யடக்கினவர் — ஜிதேந்திரியர் என்ற கருத்திற் சென்றார்கள் பிறர். இதில் என்ன சுவையுள்ளது? 'தம்அடிபணிந்தவர்கள்

விஷயத்தில் தாம் தாழ்ந்து வெற்றியை அவர்களுக்குக் கொடுத்துத் தோல்வியைத் தாம் ஏற்றுக்கொள்பவர்' என்கிற கருத்தை விவரித்தருளினார் பட்டர். இதுவன்றோ எம்பெருமான் திருவுள்ளமுகந்த பொருள். * அடிச்சியோம் தலைமிசை நீயணியாய் ஆழியங் கண்ணாவுன் கோலப் பாதம் * என்று பக்தர்கள் விரும்பா நிற்க "**மம சிரஸி மண்டநம் கோபிகாதண்டநம்**" என்று பேசின பெருமானது திருவுள்ளமுகக்கும் வியாக்கியானமிதுவன்றோ. * கூடாரை வெல்லுஞ்சீர்க் கோவிந்தா ! * என்ற ஆண்டாள் பாசுரத்திற்கு உட்புகுந்து வியாக்கியானம் செய்தருள்கின்ற ஆசாரியர்கள் "கூடாதவர்களைத் தோற்கடிப்பதும் கூடுமவர்களுக்கு நீ தோற்றிருப்பது மன்றோ உன் இயல்பு" என்று கருத்தை விவரித்தருளுகிறார்கள். அதற்கு வழிகாட்டியாகவுள்ளது இவ்விடத்து பாஷ்யம். '**விஜிதாத்மா விதேயாத்மா**' என்ற இவ்விடத்தில் அகார ப்ரச்லேஷமிருப்பதாகக் கொண்டு 'அவிதே யாத்மா' என்று பதம் பிரித்து அதற்குத்தகுந்த பொருளையுரைத்தனர் பிறர்; [யாருக்கும் விதேயப்படாத ஸ்வரூபமுள்ளவரென்பதாம்,] பட்டர் * விதேயாத்மா * என்றே திருநாமமாகக்கொண்டு, நிற்பதோ இருப்பதோ கிடப்பதோ போவதோ வருவதோ உண்பதோ எல்லாவற்றிலும் பக்தர்களினுடைய கட்டளைக்கு விதேயப்பட்டிருக்கும் ஸ்வரூபமுள்ளவர் என்று இவ்வழகிய கருத்தைக்காட்டியருளினார். * கணிகண்ணன் போகின்றான் காமருபூங்கச்சி மணிவண்ணா ! நீ கிடக்க வேண்டா * என்றவாறே பைந்நாகப்பாய் சுருட்டிக்கொண்டு கிளம்புவதும், * பைந்நாகப்பாய் விரித்துக்கொள் * என்றால் அப்படியேமீண்டுவந்து விரித்துக் கொள்வதுஞ் செய்து திருமழிசைப் பிரான்போல்வார் திறத்தில் சொன்ன வண்ணஞ் செய்த பெருமாளென்றும் யதோக்தகாரி யென்றும் திருநாமம் படைத்து பக்த விதேயதையை விகிதபடி தமாக்கியிருக்கின்ற எம்பெருமானது திருவுள்ள முகக்கவேணுமானால் '**விதேயாத்மா**' என்னாது வேறுவகையாகச் சொல்லலாகுமோ ? * **ஜ்ஞாநீது ஆத்மைவ மே மதம்** * என்று கீதையிற் கூறியிருக்கின்ற எம்பெருமானுடைய திருவுள்ளந்தான் என்ன ? ஞானிகளுக்கு நான் சரீரபூதனென்று ஸர்வசரீரியான பகவான் தானே வாய்விட்டுச் சொல்லுகின்றான். ஆத்மாவைக் குறித்து ஸர்வாத்மநா விதேயமாயிருக்கையன்றோ சரீர லக்ஷணம். ஞானிகளுக்கு விதேயனல்லனாகில், * ஜ்ஞாநீது ஆத்மைவ மே மதமென்று அவன்தான் கூறினதும் அதற்கு மஹாசார்யர்கள் அழுத்தம் திருத்தமாக வியாக்கியானமிட்டருளினதும் என்னாகும் ? தனது விதேயத்வத்தை வாயாற் சொன்னவளவன்றிக்கே அநுஷ்டானத்திலுமன்றோ காட்டியருளா நின்றான். "**ஸேநயோருபயோர் மத்யே ரதம் ஸ்தாபய மே அச்யுத !**" என்று அர்ஜுனன் கட்டளையிடவும் அப்படியே தான் செய்யவும் பாங்காக



வன்றோ தன்னை யமைத்து வைப்பது. **பார்த்தஸாரதி** யென்று பெயர் சுமந்து நிற்கின்றானே. நாம் பார்த்த (கண்ட) சாரதியன்றோ. ... *

## 26. * **ச்சிந்ந ஸம்சய:** * என்ற திருநாமத்தின் பெருஞ்சுவை.

மேலே செல்வோம். **ச்சிந்நஸம்சய:** என்றொரு திருநாமம், 'எல்லாவற்றையும் கையிலங்கு நெல்லிக்கனிபோல் எப்போதும் பார்ப்பவராதலால் 'ஸந்தேஹமற்றவர்' என்ற கருத்தில் பாஷ்யம் செய்தனர் பிறர். ஐயம் திரிபு மறப்பு முதலானவையில்லாமை ஞானத்திற்கு அதிசயம். ஆகவே பகவான் அதிசயித்த ஞானம் படைத்தவர் என்றதாயிற்று. இப்பொருள் ஸஹஸ்ரநாமத்தில் மற்றும் பல திருநாமங்களாலும் வெளிவந்ததே. இதில் சுவையொன்று மில்லையென்று கருதிய பட்டர் விலக்ஷணமாக வியாக்கியானித்தருளியுள்ளார் ! இதற்கு முன்னேயுள்ள **ஸத்கீர்த்தி:** என்ற திருநாமத்திற்குப் பிறர்போல் ஸாமான்யமான பொருளைப் பணியாமல் 'ஸௌலப்ய மிருப்பதினாலேயே யதார்த்தமான புகழைப்பெற்றவர்' என்று ப்ரக்ருதாநுகுணமாகப் பொருளருளிச் செய்தவராதலால் **ச்சிந்நஸம்சய:** என்றவித் திருநாமத்திற்கும் அதையொட்டியே அழகிய பொருள் பணிக்கின்றார் ! அதாவது எம்பெருமான் விஷயத்தில் தெளிவு பெறாதவர்களுக்குப் பலவகையான ஸந்தேஹங்களுண்டாகுமாம்; அவர் அறியக்கூடியவரோ அறியக்கூடாதவரோ; எளியவரோ அரியவரோ ? நமக்கு வசப்படுவரோ மாட்டாரோ ? என்றிப்படி பல ஸந்தேஹங்கள் தோன்றுமாம்; அவற்றைத் தமது நடத்தையினால் உடனே அறுத்திடுபவராம். தாரித்ரிய மின்றியிருப்பவர் என்பதைக் காட்டிலும் பிறரை தாம் தாரித்ரியமற்றவர்களாகச் செய்பவர் என்பது எப்படி சிறந்ததோ, அப்படியே தாம் ஸந்தேஹமற்றிருப்பவர் என்பதைக் காட்டிலும் பிறரை ஸந்தேஹமற்றவர்களாகச் செய்பவர் என்பது சிறந்ததென்று நாம் விவரிக்கவேணுமோ ? அதிலும். தம்முடைய பரத்வத்தைக்காட்டி ஸந்தேஹ மறுப்பவரென்னாமல் தம்முடைய எளிமையைக்காட்டி ஸந்தேஹமறுப்பவரென்றது மிகவினிது. *

## 27. * **அநீச:** * என்ற திருநாமத்தின் அற்புதமான பொருள்.

மேல் **அநீச:** என்றதிருநாமத்தின் பாஷ்யத்தையும் நோக்குவது. 'தமக்கு மேல் ஈச்வரனில்லாதவர் அநீசர்' என்றார் பிறர். 'தமக்குத்தாம் கடவரல்லாதவர் - பக்த பராதீநத்வத்தாலே ஸ்வாதந்த்ரியமிழந்தவர் அநீசர் என்றருளிச் செய்கிறார் பட்டர். * வில்லிபுதுவைவிட்டு சித்தர் தங்கள் தேவரை வல்ல பரிசு வருவிப்பர் * என்று ஆண்டாளருளிச் செய்தபடி பக்தர்கள் வெந்

நீரைக் காய்ச்சி, * நாரணா நீராட வாராய் * இன்று நீ நீராட்டவேண்டுமெம்பிரானோடாதேவாராய் * என்றழைத்தால் நீராட வோடிவருவதும், சில பூக்களைப் பறித்துக் கையிலே வைத்துக்கொண்டு * செண்பகப் பூச்சூட்ட வாராய் * என்றும் * இருவாட்சிப் பூச்சூட் டவாராய் * என்றுமழைத்தால் பூச்சூடவோடி வருவதுமான எம்பெருமானை எந்த பாஷ்ய முகப்பிக்கும்?

## 28. * ஸமாத்மா ஸம்மித: * என்றவிடத்துப் பொருந்தமானபொருள்.

மற்றோரிடத்திற்குச் செல்வோம், * **வஸுர் வஸுமநாஸ் ஸத்யஸ் ஸமாத்மா ஸம்மிதஸ் ஸம:** * என்ற விடத்தில் * அஸம்மித: * என்று திருநாமமாக்கி அபரிச்சிந்நர் என்கிற பொருளைக் காட்டினர் பிறர். விலை கொடுத்து வினை வாங்குமாப்போலே இல்லாததொரு அகாரத்தைக்கொண்டு கூட்டி ஏதுக்கு இந்தச் சுவைக்கேடான பொருளைப் பணிக்க வேண்டு மென்று நிர்வேதங் கொண்ட பட்டர் **ஸம்மித:** என்றே கொண்டு * ஸர்வப்ரகாரத்தாலும் அடியார்களுக்குப் பரிச்சிந்நரேயாவர் என்கிறார். * அழுகையு மஞ்சி நோக்குமந் நோக்கும் அணிகொள் செஞ்சிறுவாய் நெளிப்பதுவும், தொழுகையுமிவை கண்டவசோதை தொல்லை யின்பத்திறுதி கண்டாளே * என்ற பெருமாள் திருமொழிப் பாசுரத்தில் 'தொல்லை யின்பத்து இறுதி கண்டாள்' - என்பதற்கு தொல்லையின்பமாகிய பகவானை [அபரிச்சிந்நனென்று ஓதிக்கிடப்பதற்குப் பிரதியாகப்] பரிச்சிந்நனாகக் கண்டாள் யசோதை - என்று சொல்லிப் போருவதொரு இன்சுவைப் பொருளுக்கு ஆகரம் பட்டரேயாவர்.

* **நியந்தா நியமோ யம:** * என்கிற விடத்திலும் * ஆதார நிலயோதாதா * என்கிற விடத்திலும் "அநியம:-நியம:," அயம:- யம: "அதாதா - தாதா" என்று இரண்டுபடியாகவும் பதச்சேதம் செய்து வியாக்கியானமிட்ட பிறர் * விஜிதாத்மா விதேயாத்மா * என்ற விடத்திலும் * **ஸமாத்மா ஸம்மித:** * என்ற விடத்திலுங்கூட அப்படியே இரண்டுவிதமாகவும் பதச்சேதம் பண்ணி இரண்டுவகைப் பொருள்களையும் காட்டலாமாயிருந்தும் ஏன் காட்டவில்லை? என்று ஆராயுமளவில், பகவத் குணங்களிலே ஆழங்காற்படுவதற்கீடான திவ்ய ப்ரபந்தரூப அம்ருதஸாகர அவகாஹனம் பட்டர்க்குப்போல் பிறர்க்கு இல்லாமையினால் தான் என்று ஸ்ரீ வைஷ்ணவர்கள் அறுதி யிடலாம். பரத்வம் ஸௌலப்யம் என்கிற இரண்டு வகுப்புகளுக்குரிய பெருமைகளும் எம்பெருமானிடத்து உள்ளன. இரண்டையும் அநுபவிக்க நாம் இட்டுப் பிறந்திருக்கிறோம். ஆனாலும் அநுபவத்தில் நெஞ்சை நீர்ப்பண்டமாக்குமவை எளிமைக் குணங்களேயன்றிப் பரத்வகுணங்களல்ல. நம்மாழ்வார் * உயர்வற வுயர்



நலமுடையவன் * என்று தொடங்கிப் பரத்வத்தை யநுபவித்தவர் சிறிதும் விகாரமடையாமல் பேசிப் போந்தார்; அவர்தாமே * எத்திறமுரலினோடிணைந்திருந் தேங்கிய வெளிவே * என்றும் * பிறந்தவாறும் வளர்ந்தவாறும் * என்றும் பேசி அவ்வாறுமாஸம் மோஹித்து உணர்த்தியற்றுக் கிடந்தார். இதனையே ஆழ்வான் அதிமாநுஷஸ்தவத்தில், * **தாத்ருக் ந தே சரிதம் ஆர்யஜநாஸ் ஸஹந்தே** * என்றும் * **ஆர்த்ரீகரோதி விதுஷாம் ஹ்ருதயம் ததேதத்** * என்றுமருளிச் செய்தார். ஆகவே எளிமைக் குணங்களையே பெரும்பாலும் விவரிக்க நம் ஆசார்யர்கள் குதுகலிக்கின்றார்கள் — இதுவே ஆழ்வாருகந்ததென்று. இதனால் பரத்வத்திற்கு உள்ளீடான குணங்களில் இவர்கள் பகையும் பொறாமையுமுடையவர்களென்று அர்த்தமல்ல. அக் குணங்களையும் அபரிமிதமாக அருளிச்செய்தே போருகிறார்கள். எளிமைக்குணங்களை யநுபவிக்க இடம் வாய்ப்பாகக் கிடைக்குமானால் அவ்விடத்தையுபேக்ஷியார்கள்.

## 29. பட்டரைப்பற்றி ஸாரமான விண்ணப்பம்.

உருக்கமான அர்த்த விசேஷங்களை யருளிச் செய்வதில் பட்டர் மிக வல்லவரென்பது பகவத்விஷய திவ்யக்ரந்த ரஸிகர்களுக்கு அறியவெளிது. மஹாமேதாவியான இவருடைய புத்திக்கு அநாயாஸமாக கோசரிக்கும் பொருள் மற்றையோருடைய புத்திக்கு ச்ரமப்பட்டும் க்ரஹிக்க முடியாதென்றால் இது அதிசயோக்தியன்று; சிலவிடங்களைக் கொண்டு இதையும் ரஸிகர்களுக்க மூதலிப்போம். இந்த ஸஹஸ்ரநாமத்திலேயே * **அர்த்தோ நர்த்தோ மஹாகோச:** * என்ற விடத்தில் **அநர்த்த:** என்கிற திருநாமத்தை வியாக்கியானிக்கிற பிறர் 'தாம் விரும்பவேண்டிய பொருளில்லாதவர்' என்று உரைத்தனர். இது நம்போல்வார்க்கும் தோற்றக்கூடிய பொருளே. பட்டர் அருளிய பொருளோவென்னில்; அற்ப பலன்களை விரும்பக்கூடிய பாக்கியஹீனர்களால் தாம் விரும்பப்படாதவர் என்பதாக. இதற்கடுத்தபடியாகவுள்ள **மஹாகோச:** என்கிற திருநாமத்திற்கு 'அந்நமய ப்ராணமயாதிகளான ஐந்து மஹாகோசங்களில் இருப்பவர்' என்கிற பொருள் பிறரால் உரைக்கப்பட்டது. அர்த்திகளான பக்தர்களுக்கு அளவிறந்து கொடுத்தாலுங்கூட ஒருநாளுங் குறைபடாத நவநிதிகளையும் ரத்நாகரங்களையும் தம்முடைய பொக்கிசமாக வுடையவர்' என்பது பட்டரருளிச் செய்த பொருள். இப்படியாக நாம் எடுத்தனுபவிக்கக்கூடிய அற்புதமான பொருள்கள் அளவு கடந்து விளங்குகின்றன இவ்வாசிரியருடையபாஷ்யத்தில். இப்படிப்பட்ட பெருமை வாய்ந்த பாஷ்யத்தைத் தழுவி அடியேனால் ஓர் உரை எழுதப்பட்டுள்ளது அதனைக் காணீர். ... ... ... ... *

## 30. ஸஹஸ்ரநாமத்திற்கு அருளிச்செயல் மதிப்பு.

ஸஹஸ்ரநாம மென்பது மஹாபாரதத்தில் ஓர் அத்யாயமாக அவதரித்துள்ளது. பீஷ்மயுதிஷ்டிரஸம்வாதரூபமாக அமைந்தது ஸஹஸ்ரநாமாத்யாயம். இதைத் தனியாக வெடுத்து ஓதுவதென்பது எவருடைய புத்திக்கும் எட்டாத காலந் தொடங்கி நிகழ்ந்து வருகின்றது. இதற்கு ஆழ்வார்களின் திவ்வியப் பிரபந்தங்களில் ஆதரவு உண்டா? என்று பலர் விசாரிப்பதுண்டு. நன்றாக வுண்டென்பதை நிரூபிக்கிறேனிங்கு. நம்மாழ்வார், பெரியாழ்வார், ஆண்டாள், திருமங்கையாழ்வார் ஆகிய நால்வரும் விசேஷித்துத் தம்முடைய திவ்யப் பிரபந்தங்களில் ஆதரித்துள்ளார்கள். **(நம்மாழ்வார்)*** ஓராயிரம் பேருமுடைய பிரானையல்லால் * ஓராயிரமாயுலகேழளிக்கும் பேராயிரங் கொண்டதோர் பீடுடையன் * இத்யாதிகள் காண்க. திருவாய் மொழியில் திருமோகூர்ப்பதிகத்தில் (10-1-8). * பெயர்களாயிரமுடைய வல்லரக்கர் புக்கழுந்தத் தயரதன் பெற்ற மரதகமணித்தடத்தினையே * என்ற விடத்தில் **'பெயர்களாயிரமுடைய'** என்ற விசேஷணம் தயரதன் பெற்ற மரதகமணித்தடமாகக் கொள்ளப்பட்ட எம்பெருமானிடத்திலே அந்வயிக்குமென்று சிலர் கொள்ளுவர்கள்; அவ்வளவு தூராந்வயம் வேண்டா. பக்கத்திலுள்ள வல்லரக்கரிலேயே அந்வயிக்கக் குறையில்லை யென்று நம்பிள்ளை திருவுள்ளம் பற்றுகிறார்; "ஈச்வரன் ரக்ஷித்துப் படைத்த பெயர்களோபாதி போருமாய்த்து இவர்கள் பரஹிம்ஸை பண்ணிப் படைத்த பெயர்கள் **யஜ்ஞசத்ரு, ப்ரஹ்மசத்ரு** என்றாப்போலேயிறே இவர்கள் பெயர்கள்" என்று ஈட்டு ஸ்ரீஸூக்தி. [**பெரியாழ்வார்**] திருப்பல்லாண்டில் * தொண்டக்குலத்திலுள்ளீர் வந்தடிதொழுது ஆயிரநாமஞ் சொல்லி * என்கிறார். தமது திருமொழியில்.(4-2-8) * அறுகால் வரிவண்டுகள் ஆயிரநாமஞ் சொல்லிச் சிறுகாலைப்பாடும் தென்திருமாலிருஞ் சோலையே * என்று வண்டுகளும் காலை யெழுந்து திருமாலிருஞ் சோலையில் ஸஹஸ்ரநாமம் பாடுவதாகப் பணித்துள்ளார், [**ஆண்டாள்**] (2-1). * நாமமாயிரமேத்த நின்ற நாராயணா நரனே! * என்கிறாள். [**திருமங்கையாழ்வார்**] சாளக்கிராமப் பதிகத்திற்குப் பயன் கூறும் பாசுரத்தில் "பேராயிரமுமோதுமின்கள் அன்றி யிவையே பிதற்றுமினே * என்றருளிச் செய்கிறார். 'ஸஹஸ்ரநாமஞ் சொல்லுங்கள்; அது முடியாவிட்டால் இப்பதிகத்தை ஓதுங்கள்' என்று சொன்னவிதனால் என்ன பலன் சொல்லிற்றாகுமென்று சிலர் கேட்பதுண்டு; ஸஹஸ்ரநாமம் சொல்லுவதனால் என்ன பலனுண்டோ அந்த பலன் இப்பதிகம் சொல்வதனாலுண்டாகுமென்று சொன்னதாகவில்லையோ? சிறிய திருமடலில் கட்டுவிச்சியைக் குறிகேட்டபோது "நும்மகளை நோய் செய்தான் பேராயிரமுடையானென்றாள்."

---



## 31. இதிஹாஸபுராண விசேஷார்த்த சர்ச்சை.

எம்பெருமான் இராமனாகவும், கண்ணனாகவும் திருவவதாரம் செய்தபோது பரமபக்தர்களிடத்திலே தன்னுடைய விசேஷாபிமானத்தை விசேஷமுறையில் காட்டியிருக்கிறான். பக்தர்களுக்குத் தன் திருமேனியைக் கொடுத்தருள்வதுதான் சிறந்த வெகுமதி. அதாவது பரிஷ்வங்கமென்று சொல்லப்படுகிற ஆலிங்கனம். இது ஸ்ரீ ராமக்ருஷ்ணாவதாரங்களில் மூன்று பக்தர்களுக்கு அருளப்பட்டதாகத் தெரியவருகிறது. ஸ்ரீ ராமாவதாரத்தில் திருவடிக்கும் பரதாழ்வானுக்கும்; ஸ்ரீ க்ருஷ்ணாவதாரத்தில் அக்ரூரனுக்கு. இவ்விஷயத்திற்கு முறையே பிரமாணங்களாவன (1) ஸ்ரீ ராமாயணம் யுத்தகாண்டத்தில் (1-14) ***ஏஷ ஸர்வஸ்வ பூதஸ்து பரிஷ்வங்கோ ஹநூமத:, மயா காலமிமம் ப்ராப்ய தத்தஸ் தஸ்ய மஹாத்மந:*** என்கிற ச்லோகம் திருவடிக்குக் கிடைத்த ஆலிங்கனத்தைச் சொல்லுவது. (2) யுத்தகாண்டத்திலேயே (130-38.) ***தம் ஸமுத்தாப்ய காகுத்ஸ்தச் சிரஸ்யாக்ஷிபதம் கதம், அங்கே பரதமாரோப்ய முதித: பரிஷஸ்வஜே.*** என்கிற ச்லோகம் பரதாழ்வானுக்குக் கிடைத்த ஆலிங்கனத்தைச் சொல்லுவது. (3) ஸ்ரீ விஷ்ணு புராணத்தில் (5-18-2) ***ஸோப்யேநம் த்வஜவஜ்ராப்ஜக்ருத சிஹ்நேந பாணிநா, ஸம்ஸ்ப்ருச்ய ஆக்ருஷ்ய ச ப்ரீத்யா ஸுகாடம் பரிஷஸ்வஜே*** என்கிற ச்லோகம் அக்ரூரனுக்குக் கிடைத்த ஆலிங்கனத்தைச் சொல்லுவது. ஆக இம்மூன்று பரிஷ்வங்கங்களிலும் பரஸ்பரமுள்ள வாசியை நம் ஆசாரியர்கள் அழகாகக் கண்டறிந்துள்ளார்களென்று தோன்றுகிறது. ஆசார்ய ஹ்ருதயத்தில் (2-35.) *வித்யை தாயாகப் பெற்று* இத்யாதியான பெரிய சூர்ணையில் "**பரதாக்ரூரமாருதிகளைப் பரிஷ்வங்கித்த** மணிமிகுமார்விலே" என்றுள்ளது. மேலே விளங்கக் காட்டிய மூன்று ப்ரமாணங்களிற் கண்ட மூவரும் இங்கு எடுக்கப்பட்டிருக்கிறார்கள். ஆனால் முறை தவறியிருக்கின்றது. "மாருதி பரதாக்ரூரர்களை" என்றிருக்க வேண்டியதன்றோ முறைமை. முதல் பரிஷ்வங்கம் திருவடிக்கு; பரதாழ்வானுக்கு இடையான பரிஷ்வங்கம்; கடையான பரிஷ்வங்கம் அக்ரூரனுக்கு–என்றிப்படி ப்ரமாண ப்ரதிபந்நமான முறைமையிருக்க, ராமாவதார பக்தர்களான இருவரின் இடையே க்ருஷ்ணாவதார பக்தனான அக்ரூரனைக் கொண்டு தள்ளியும், முதல் பரிஷ்வங்கம் பெற்ற மாருதியைப் பின்னே தள்ளியும் "பரதாக்ரூரமாருதிகளை" என்று விலக்ஷணக்ரமமாக அருளிச் செய்திருப்பது என்கொண்டு? என்று விமர்சகர்கள் ஆராய வேண்டுவதுண்டு. ...

# 32. திருக்கோட்டியூராராய்ச்சி யொன்று.

உடையவர்க்குத் திருக்கோட்டியூர் நம்பி உபதேசித்தது திருவஷ்டாக்ஷர மஹாமந்த்ரத்தின் பொருளென்று ஆருயிரப்படி குரு பரம்பராப்ரபாவத்தில் காண்கிறது. மணவாள மாமுனிகள் முமுக்ஷுப்படி வியாக்கியானத்தில் சரமச்லோக ப்ரகரணத்தின் அவதாரிகையில்—"இதினர்த்தம் கேட்கைக்காகவிறே எம்பெருமானுர் பதினெட்டு பர்யாயம் திருக்கோட்டியூர் நம்பி பக்கல் எழுந்தருளிற்று. நம்பி தாமும் இதில் அர்த்தத்தினுடைய கௌரவத்தையும் இதுக்கு அதிகாரிகளில்லாமையையும் பார்த்திறே இவருடைய ஆஸ்திக்யாதர பரீக்ஷார்த்தமாகவும் பலகால் நடந்து துவளப்பண்ணிச் சூளுறவு கொண்டு மாஸோபவாஸங்கொண்டு அருமைப்படுத்தி அருளிச் செய்தருளிற்று... ...அதிகாரி துர்லபத்வத்தாலும் அர்த்த கௌரவத்தாலும் இத்தை வெளியிடாதே மறைத்துக்கொண்டு போந்தார்கள் எம்பெருமானுர்க்கு முன்புள்ளார். ஸம்ஸாரிகளின் துர்க்கதி கண்டு பொறுக்கமாட்டாதபடி க்ருபை கரை புரண்டிருக்கையாலே அர்த்தத்தின் சீர்மை பாராதே அநர்த்தத்தையே பார்த்து வெளியிட்டருளினர் எம்பெருமானுர்" என்றருளிச் செய்துள்ள ஸ்ரீ ஸூக்திகள் ப்ரஸித்தம். ஆகவே சரமச்லோகார்த்தம் கேட்டருளினுரென்பதே யுக்தமாயிருக்க வடுப்பது. முதலில் திருமந்த்ரார்த்தத்தை யருளிச்செய்து பிறகு மற்றொருகால் சரமச்லோகார்த்தத்தையுமருளிச் செய்ததாக குருபரம்பரா ப்ரபாவத்தில் காண்கையாலே அப்படியே கொள்ளலாகாதோ வென்னில், மேலே எடுத்துக்காட்டியுள்ள மணவாளமாமுனிகளின் ஸ்ரீ ஸூக்திகளின் ஸ்வாரஸ்யத்தை நோக்குமளவில் சரமச்லோகார்த்தம் கேட்கைக்காகவே ஸ்வாமி பதினெட்டு பர்யாயம் திருக்கோட்டியூர்க்கு நடந்ததாகவும்; கேட்ட அதனையே அங்கு ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு வெளியிட்டதாகவும் ஸ்பஷ்டமாக விளங்குகையாலே மற்றைப்படி சொல்லுகை மாண்புடைத்தாகத் தோன்றவில்லை. ஸம்பிரதாயம்வல்ல பெரியார்வாய்க் கேட்டுத் தெளிவது. திருக்கோட்டியூர் நம்பி பக்கலிலே ரஹஸ்யார்த்த விசேஷங்கள் கேட்டருளி ஸ்வாமி க்ருதார்த்தராய் அப்போதே மறுநாளில் அவ்வூர்ப் பெருமாள் ஸன்னிதியில் ச்ரத்தாளுக்களான பல ஸ்ரீ வைஷ்ணவர்களை ஓலக்கமாக விருத்தி அப்பரமரஹஸ்யார்த்தத்தை உபதேசித்தருளித் திருக்கோட்டியூர் நம்பியால் எம்பெருமானுரென்று விருது சாத்தப்பெற்ருர் என்பதும் இங்கு அறியத்தக்கது. ... ...



# 33. பரமவைதிகர்களைப் பற்றின விண்ணப்பம்.

பரமவைதிகர்களென்கிற ஏற்றம் ஸ்ரீ வைஷ்ணவர்களாய் பகவத்ராமாநுஜ ஸந்நிதிகளான நமக்கே உரியதாகும். ப்ரத்யக்ஷத்தாலோ அனுமானத்தாலோ அறிந்து கொள்ள முடியாத அர்த்த விசேஷங்களையறிவிக்கும் வாங்மயமே வேதமெனப்படுகிறது. *ப்ரத்யக்ஷேண அநுமித்யா வா யஸ் தூபாயோ ந புத்த்யதே, ஏநம் விதந்தி வேதேந தஸ்மாத் வேதஸ்ய வேததா* என்பது இதற்குப் பிரமாணம். வேதத்தை ப்ரமாணமாக இசையாத சார்வாக ஜைந பௌத்தாதிகள் வேதபாஹ்யர்களெனப்படுவர். வேதத்தைப் பரமப்ரமாணமாக இசைந்துவைத்தும் பரப்ரஹ்மம் சூந்யமென்றும் அலக்ஷ்மீக மென்றும் அசரீரமென்றும் விபூதி விரஹித மென்றும் இங்ஙனே பேசுபவர்கள் குத்ருஷ்டிகளெனப்படுவர். குத்ருஷ்டிகளானுலும் வேதத்தை ப்ரமாணமாக இசைகின்ற இவர்கள் வேதபாஹ்யர்களிற் காட்டிலும், மேம்பட்டவர்களன்றோ வென்று சிலர் நினைக்கக்கூடும். பாஹ்யர்களோடு குத்ருஷ்டிகளோடு ஒரு வாசியில்லையென்றே அருளிச் செய்கிருர் கூரத்தாழ்வான்; ஸ்ரீ வைகுண்டஸ்தவே.

* பாஹ்யா: குத்ருஷ்டய இதி த்விதயேப்யபாரம்
கோரம் தமஸ் ஸமுபயாந்தி ந ஹீக்ஷஸே தாந்,
ஜக்தஸ்ய காநநம்ருகை: ம்ருகத்ருஷ்ணிகேப்ஸோ:
காஸாரஸத்வநிஹதஸ்ய ச கோ விசேஷ:*

என்கிற ச்லோகம் இங்குக் காணத் தக்கது. வேதபாஹ்யர்களும் வேதகுத்ருஷ்டிகளும் துல்யயோக க்ஷேமர்களென்பதற்கு ஒரு அற்புதமான கதையை த்ருஷ்டாந்தம் காட்டுகிறதில். விடாய்மிகுத்துத் தண்ணீரைத் தேடியோட இரண்டு மிருகங்கள் புறப்பட்டன; அவற்றில் ஒரு மிருகமானது தடாகத்திற்புகாதே கானலைக்கண்டு பாநீய ப்ரவாஹமாய் பயந்தி யோடிக்கொண்டேயிருக்கையில் வழியில் ஒரு புலியின் வாயிலே விழுந்து மாண்டொழிந்தது. இது இப்படியாக, மற்றொரு மிருகமானது விடாய் தீரப்பெறுவதற்கு உண்மையாகத் தண்ணீருள்ளதடாகத்திலேயே சென்று சேர்ந்தும் துறைதப்பியிழியவே அங்குக்கிடந்த ஒரு முதலையினுலே கதுவப்பட்டு மாண்டொழிந்தது. ஆக இரண்டு மிருகங்களும் தடாகப்ரவேச அப்ரவேசங்களாலே சிறிது வாசி பெற்றிருந்தாலும் விநாசம் இரண்டுக்கும் துல்யமே. அது போலவே குத்ருஷ்டிகளும் பாஹ்யர்களும் வேதப்ராமாண்ய அங்கீகார அநங்கீகாரங்களாலே சிறிது வாசி பெற்றிருந்தாலும் விநாசத்தில் வாசியற்றவர்களேயென்ற தாயிற்று. அந்த பாஹ்யர்களும் குத்ருஷ்டிகளும் கிடக்கட்டும், வேதக் கடலில் நாம் உள்ளபடி அவகாஹித்து அர்த்தரத்னங்களைக் கொள்ளை கொண்டு அநுபவித்து ஆனந்திக்கப்பெறுகிறோமே; இது நம்முடைய மஹத்தான பாக்கியம். வடமொழிவேதக்கடலோடு நில்லாமல் தென்மொழி வேதக் கடலிலும் அவகாஹித்துத் தீங்கரும்பான சீரிய பொருள்களைக் கொள்ளைகொண்டு அநுபவிக்கப்பெறுகிறோம். அந்த அர்த்தரத்னங்கள் அடியேனுடைய வடமொழி தென்மொழி நூல்களில் அபரிமிதமாக அநுபவிக்கக் கிடைக்கும். .... ... ....

## 34. உபநிஷத்துக்களேயும் ப்ரஹ்மஸூத்ரத்தையும் பற்றி.

“உப - நிஷீததி” என்கிற வ்யுதபத்திகொண்டது உபநிஷத்தென்கிறபதம். பகவானுடைய அருகேயுள்ள தென்கை. ❋வேதைச்ச ஸர்வை ரஹமேவ வேத்ய:❋ என்கிற கீதையின்படி கருமகாண்டமுங்கூட பகவானை ப்ரதிபாதிக்கவல்லதேயாயினும் அந்தப்ரதிபாதனம் வ்யவஹிதமாயிருக்கும், உபநிஷத்து அவ்யவதானே ப்ரதி பாதகமாயிருக்கும்.கர்மகாண்டத்தில் தோன்றும் சங்கைகளைப்பரிஹரிப்பதற்காக ஜைமினியென்னும் மஹர்ஷியெழுந்து பதினறு அதயாயங்களோடுகூடிய ஒரு சாஸ்த்ரத்தையியற்றினர். அதற்குப் பூர்வமீமாம்ஸையென்று பெயர். ப்ரஹ்மகாண்டமென்னும் உபநிஷத்பாகத்தில் தோன்றும் சங்கைகளைப் பரிஹரிப்பதற்காக வ்யாஸ மஹர்ஷியெழுந்து நான்கு அத்யாயங்கள் கொண்ட ஒரு சாஸ்த்ரத்தை இயற்றினர். அதற்கே சாரீரகமீமாம்ஸையென்று பெயர். உத்தரமீமாம்ஸைஎன்றும் வழங்குவர். ப்ரஹமஸூத்ரமென்பது இதனையே ஒவ்வோரத்யாயத்திலும் நான்கு பாதங்களுள்ளன. ஆகவே பதினறுபாதங்கள் கொண்டது சாரீரகமீமாம்ஸையென்றதாயிற்று. இதில் ஒவ்வொரு விஷயத்தைப்பற்றி சர்ச்சைசெய்து நிர்ணயிருக்கும் பகுதிக்கு அதிகரணமென்று பெயரிடப்பட்டது. அப்படிப்பட்ட அதிகரணங்கள் இந்த மீமாம்ஸையில்(156) நூற்றைம்பத்தாறுஉள்ளன. சில அதிகரணங்கள் ஒரே ஸூத்ரமாயிருக்கும் பல அதிகரணங்கள் பல ஸூத்ரங்களாயிருக்கும். மொத்தம் ஸூத்ரங்களின் லக்கம்(545) ஐந்நூற்று நாற்பத்தைந்து என்று கணக்கிடப்பட்டிருக்கிறது. ஆக நான்கு அத்யாயங்களேயும், பதினறு பாதங்களேயும் நூற்றைம்பத்தாறு அதிகரணங்களேயும் ஐந்நூற்று நாற்பத்தைந்து ஸூத்ரங்களேயும் கொண்டது ப்ரஹ்மஸூத்ர சாஸ்த்ர மென்றதாயிற்று. தத்வஹித புருஷார்த்தங்களை நாம் தெரிந்துகொள்வதற்கு உபநிஷத்துக்களே தஞ்சமாகும். அவவுபநிஷத்துக்களின் பொருள்களை ஸம்சயவிபர்யமற நிஷ்கர்ஷித்து விளக்கக் கூடியது இந்த ப்ரஹ்ம ஸூத்ர சாஸ்த்ரமேயாதலால் வேதாந்திகளுக்கு இதுவே புகலாயிற்று. இந்த சாஸ்த்ரத்தின் பொருளை நிஷ்கர்ஷமாகவும் நிஷ்கல்மஷமாகவும் தெரிந்துகொண்டவர்களே வேதாந்திகளென்றும் ப்ரஹ்மஜ்ஞானிகளென்றும் சொல்லத் தகுதியுடையார். மஹர்ஷிகளியற்றிய ஸூத்ரங்களின் பொருளை நம்போல்வார் சிறிதும் அறியகில்லார்களாதலால், நம்போன்ற அல்ப மதிகளிடத்தில் பரமகருணைகொண்ட பூருவர்கள் அந்த ஸூத்ரங்களின் அர்த்தத்தை வீளக்கி பாஷ்யங்கள் இயற்றியுள்ளார்கள். த்வைதம் அத்வைகம் விசிஷ்டாத்வைதங் என மூன்று மதங்கள் உலகப்ரஸித்தமாக வழங்குமவை; இம்மூன்று மதங்களிலும் பாஷ்யங்கள் அவதரித்துள்ளன, அத்வைத மதத்திற்காக சங்கராசாரியர் பாஷ்யமியற்றினர். த்வைதமதத்திற்காக ஆனந்ததீர்த்தர் (மத்வாசார்,) பாஷ்யமியற்றினர். நமது விசிஷ்டாத்வைதமதத்திற்காக பகவத் ராமானுஜாசார்யரென்கிற ஸ்வாமியெம்பெருமானர் ஸ்ரீ பாஷ்யமருளிச் செய்தார். .... ❋

---



## 35. ஸ்ரீ பாஷ்யத்தின் சிறப்பு விண்ணப்பம்

வடஇந்தியாவில் அதிக ப்ரஸித்திபெற்றுள்ள வல்லபமதம் நிம்பார்க்க மதம் முதலிய மதங்களுக்காகவும் பாஷ்யங்கள் தோன்றியுள்ளன. இப்படி மற்றும் பல பாஷ்யங்களிருந்தாலும் மதத்ரய பாஷ்யமென்று மூன்று பாஷ்யங்களே நமது நாட்டில் குலாவப்படுவன. ஸ்ரீ வைஷ்ணவர்களென்றும் விசிஷ்டாத்வைதிகளென்றும் பகவத்ராமானுஜ தர்சனஸ்தர்களென்றும் வழங்கப்படுகின்ற நமக்கு ஸ்வாமியின் ஸ்ரீ பாஷ்யமே ஜீவாதுவாகும். சங்கரபாஷ்யம் மத்வ பாஷ்யம் நீலகண்ட பாஷ்யம் என்பவை போலல்லாமல் ஸ்ரீ பாஷ்யமென்றே தோன்றியுள்ள ப்ரஸித்தி இதன் ஒப்பற்ற பெருமையைப் புலப்படுத்தும். உபநிஷத்துக்களின் உண்மைப் பொருளை ஸூத்ரகாரர்களுடைய உள்ளத்திற்கு ஒத்ததாக நிஷ்பக்ஷபாதமாய் நிருமிக்கப்பட்டது. ஸ்ரீபாஷ்யமேயென்று மேனாட்டுப் புலவர்களும் மெச்சியுள்ளார்கள். அது நிற்க: ஸ்வாமி ஸ்ரீபாஷ்யமருளிச் செய்யத் தொடங்கும் போதே பகவத் போதாயநக்ருதாம் விஸ்தீர்ணாம் ப்ரஹ்ம ஸூத்ரவ்ருத்திம் பூர்வாசார்யாஸ் ஸஞ்சிக்ஷிபு:; தந்மதாநுஸாரேண ஸூத்ராக்ஷராணி வ்யாக்க்யாஸ்யந்தே என்று[முன்னோர் மொழிந்த முறைதப்பாமே வியாக்கியானிப்பாதாக] அருளிச் செய்திருப்பதனல் ஸ்ரீ பாஷ்யத்தின் ப்ராமாணிகத்வம் அசைக்க முடியாது விளங்குகின்றது. ஆர்ஷவ்யாக்கியான கவசிதமாயும் அதிப்ராசீநமாயும் பரமபவித்திரமாயுமுள்ளது விசிஷ்டாத்வைதமே யென்றும், அதை நிலை நாட்டவல்ல பாஷ்யம் ஸ்ரீபாஷ்யமேயென்றும் ப்ராமாணிகவைதிகர்களின் கொள்கை. ஸ்ரீபாஷ்யத்திற்கு இங்ஙனே அமைந்த ஏற்றத்தை ஸஹிக்ககில்லாதசிலர் ஸ்ரீ பாஷ்யத்தின் தொடக்கத்திலுள்ள “பகவத் போதாயநக்ருதாம் விஸ்தீர்ணாம் ப்ரஹ்மஸூத்ரவ்ருத்திம்” என்கிற வாக்கியத்தை ஸ்ரீராமானுஜர் பொய்யாக எழுதிவைத்தாரென்றும், போதாயநர் வ்ருத்திக்ரந்த மென்று ஒன்று செய்ததே கிடையாதென்றும், ஸ்ரீ பாஷ்யத்திற்கு மூலமாக எந்த ஆர்ஷக்ரந்தமும் தோன்றினதே கிடையாதென்றும் மிகவும் ஸாஹஸிகமாக எழுதி வைத்திருக்கின்றார்கள். இந்த வாதங்களைக் கண்டித்து அடியேன் **சாங்கரசிரோபூஷா** என்னும் வடமொழி நூலொன்றும், **சாங்கரசிரோபூஷாவிபூஷண**மென்னும் தமிழ் நூலொன்றும் (ஸு 1958ல்) வெளியிட்டிருக்கிறேன். அவற்றுக்குப் பூர்வபக்ஷியான ஸ்மார்த்தவித்வான் இன்றைக்கும் ஜீவித்தேயுள்ளார். அப்போது தினமணிச் சுடரில் வெளிவந்த மதிப்புரையை வாசித்தால் நமது சிரோபூஷாவின் ஸகல விஷயங்களும் புலனாகும். அதனை இதன் கீழ்க் காண்மின். [இது ப்ராஸங்கிகமென்று கொள்க.]

### சாங்கரசிரோபூஷா-மதிப்புரை.

15—2—1959 தேதியுள்ள தினமணிச் சுடர் அநுபந்தத்தில் வெளிவந்தது.

“[இயற்றியவர்: ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியார் ஸம்ஸ்கிருத நூல். கிடைக்குமிடம். வைதிக மனோஹரா ஆபீஸ், விஷ்ணு காஞ்சீபுரம்.]
‘த்ரவிடாத்ரேயதர்சனம்’ என்கிற ஒரு ஸம்ஸ்கிருத நூல் மயிலை ஸம்ஸ்கிருத கல்லூரி

புரொபஸர் போலஹம் ஸ்ரீ ராமசாஸ்திரிகளால் இயற்றப்பட்டு வெளியாகியிருந்தது. அதில், பகவத் ராமானுஜருடைய ஸ்ரீபாஷ்யத்தின் தொடக்கத்தில் "பகவத் போதாயன க்ருதாம்" என்று தொடங்கி எழுதப்பட்டிருக்கும் வாக்கியமானது பொய்யானதென்று நிரூபணம் செய்ய முயற்சி கொள்ளப்பட்டிருக்கின்றது. அதாவது, வியாஸர் இயற்றிய ப்ரஹ்மஸூத்ரத்திற்கு போதாயனரென்னும் முனிவர் வ்ருத்தியென்னும் பெயரால் விரிவான வியாக்கியானமெழுதியிருந்ததாகவும், அந்த விரிவுரையைச் சுருக்கி டங்கர், த்ரமிடர் முதலானோர் உரை செய்திருந்ததாகவும் கூறி, ஆக இப்பூருவர்களின் கொள்கையை யொட்டி ஸ்ரீராமானுஜர் தாம் ஸூத்ரபாஷ்யம் இயற்றுவதாய்ப் பிரதிக்ஞை செய்யப்பட்டது. இதனால் பகவத்ராமானுஜருடைய ஸ்ரீ பாஷ்யம் புராதன மஹரிஷிகளின் மதத்தை யனுசரித்தே தோன்றியதென்பதாகத் தெரிவிக்கப்பட்டதாயிற்று. மேலே குறித்த த்ரவிடாத்ரேய தர்சனமெழுதிய போலஹம் சாஸ்திரிகள், ராமானுஜ பாஷ்யம் மஹரிஷிகளின் நூல்களைப் பின்பற்றித் தோன்றியதென்பதை ஏற்காதவராய், போதாயனரென்னும் மஹரிஷி ப்ரஹ்ம சூத்திரத்திற்கு வ்ருத்தி கிரந்தமென்று ஒரு வியாக்யானம் செய்ததே கிடையாதென்றும். ராமானுஜ மதமென்பது நூதனமாக வுண்டானதே யல்லது புராதனமான ஒரு நூலையும் மூலமாகக் கொண்டதன்று என்றும். ராமானுஜ மதம் நூதனமென்பதை வேதாந்ததேசிகரும் யதிராஜ ஸப்ததியில் ஒப்புக்கொண்டேயிருக்கிறாரென்றும் ஆளவந்தார் முதலான ஸ்ரீ வைஷ்ணவ ஆசாரியர்கள் குருகூர்ச் சடகோபனென்கிற நம்மாழ்வாரையே த்ரவிடாசார்யராகக் கொண்டவர்களென்றும், நம்மாழ்வாருடைய திருவாய் மொழியையே த்ரவிடபாஷ்யமென்று இவர்கள் வழங்கிவந்தார்களென்றும் எழுதிவைத்தார். ஷை சாஸ்திரிகளின் நூலில் கண்ட ஒவ்வொரு விஷயத்தையும் காஞ்சீபுரம் அண்ணங்கராசாரிய சுவாமிகள் தமது இந்த நூலில் தக்க பிரமாணங்களைக் கொண்டு ஆராய்ந்து, கண்டனம் செய்து பகவத் ராமானுஜ மதம் புராதனமே என்பதை ஸ்தாபித்திருக்கின்றார். ப்ரம்ம சூத்திரத்திற்கு போதாயன முனிவர் வ்ருத்தியென்கிற வியாக்யானம் செய்ததுண்டென்பதை சங்கர பகவத்பாதாளுடைய பாஷ்யத்தின் வியாக்யானங்களைக் கொண்டும் மற்றும் அத்வைத மதத்தலைவர்களின் நூல்களைக்கொண்டும் ஸ்தாபித்திருக்கிறார் வேதாந்த தேசிகர் ராமானுஜமதத்தை நவீனமென்று ஒப்புக்கொண்டிருக்கிறாரென்பது மருள் என்று விவரித்துக் காட்டியிருக்கிறார். காஷ்மீரமண்டலத்தில் சாரதா பீடத்தில் சேமிக்கப்பட்டிருந்த போதாயன விருத்தியுரையை ஸ்ரீ ராமானுஜரும் கூரத்தாழ்வானும் வெகு பரிச்ரமப்பட்டுப் பார்வையிட்டு வந்த வரலாறுகளை தக்க ஆதாரங்களுடன் எடுத்துக் காட்டியிருக்கின்றார். ஆளவந்தார் முதலானவர்கள் நம்மாழ்வாரையே த்ரமிடாசாரியராகக் கொண்டார்களென்கிற வாதத்தை விசேஷமாகக் கண்டித்திருக்கின்றார். ஆக, 74 பாராக்கள் கொண்ட பத்து பரிச்சேதங்களையுடைய சாங்கர சிரோபூஷா என்னுமிந்த நூல், ஸ்ரீ வைஷ்ணவர்களின் கொள்கைகளைத் திடமாக ஸ்தாபித்திருக்கிறது.



ஸம்ஸ்கிருத நடையானது அரிய பெரிய விஷயங்களையும் எளிதாகப் புரிந்துகொள்ளும்படி வெகு லலிதமாக அமைந்திருக்கிறதென்பது விசேஷமாகக் குறிப்பிடத்தக்கது. த்ரிமதஸ்தர்களும் உகந்து வாசிக்கக்கூடிய நூல் இது." [ஆக இவ்வளவும் தினமணி மதிப்புரை.] இந்த விவாதம் அவ்வளவோடு சாந்தமாய்விட்டது. ... * (35)

## 36. போஜனத்திற்கு எது முக்கியம்?

ஏழெட்டு சிஷ்யர்களுக்கு ஸ்ரீ வசனபூஷண காலக்ஷேபம் அருளிச் செய்கின்ற ஒரு பேராசிரியர் தினப்படியாக அவர்களைப் பரீக்ஷிப்பதுண்டு. அந்த முறையில் ஒருநாள் பரீக்ஷித்தார் 'போஜனத்திற்கு எது முக்கியம்?' என்று. ஒருவர் தண்டுலம் முக்கியமென்றார் ஒருவர் தண்ணீர் முக்கியமென்றார். ஒருவர் நெருப்பு முக்கியமென்றார். இப்படி ஒவ்வொருவர் ஒவ்வொன்றை முக்கியமாக மொழிகின்றார். இவையெல்லாமுமே முக்கியமென்கிறார் ஒருவர். ஆசிரியர் "என்னுடைய வினவை நன்கு ஆலோசித்து அதற்கு ஏற்ற விடையைக் கூறுங்கள்" என்கிறார். சிஷ்யர்களோ "ஆழ்ந்து ஆலோசிக்க வேண்டிய பெரிதான வினா ஒன்றுமில்லையே" என்று பரஸ்பரம் சொல்லிக்கொள்ளுகிறார்களேயன்றி மருமத்தை ஒருவருமறிந்திலர். ஒருவர் சிறிது ஆலோசித்து "ஸ்வாமீ! அடியேன் கண்டு பிடித்து விட்டேன், சொல்லட்டுமா?" என்றார். தாராளமாகச் சொல்லலா மென்றார் ஆசிரியர். அவர் சொல்லுகிறார்—"போஜனத்திற்கு எது ஸாதனம்? என்று கேளாமல் **எது முக்கியம்?** என்று ஸ்வாமி கேட்டிருப்பதால ஸ்தலந்தான் முக்கியமென்று திண்ணமாகச் சொல்லுகிறேனடியேன்; தண்டுலம் முதலியன எல்லாமிருந்தாலும் ஸ்தலமில்லையானால் ப்ரயோஜனமில்லையன்றோ" என்றார். பிறகு ஆசிரியர் "சமையல் செய்ய எது முக்கியம்? என்று நான் கேட்டிருக்கவில்லை; நீங்கள் சொல்லுமவையெல்லாம் சமையல் செய்வதற்கு முக்கியமானவையே; அதை நான் கேட்கவில்லை; போஜனத்திற்கு எது முக்கியமென்று கேட்டிருக்கிறேன். இப்போதாவது ருஜுவான விடை தாருங்கள்" என்றார். அப்போதும் ருஜுவான விடை ஒருவர்க்கும் ஸ்புரிக்கவில்லை. அதனால் "ஸ்வாமியேதான் ஸாதிக்க வேண்டும்" என்றார்கள். "**போஜனத்துக்குக்ஷுத்துத்தான் முக்கியம்**" என்று சிரித்துக்கொண்டே ஸ்வாமி ஸாதித்தார். எல்லாரும் 'மெய்தான் மெய்தான்' என்றார்கள். ஒருவர் மட்டும் "அன்னமில்லாமல் போஜனம் செய்ய முடியுமோ? அன்னம் முக்கியமன்றென்று தேவரீரால் ஸாதிக்க முடியுமோ?" என்று வாதத்திலிறங்கி விட்டார். ஸ்வாமி ஒரே வார்த்தையில் முடித்திட்டார்—"பஞ்சபக்ஷ்ய பரமான்னங்கள் ஸித்தமாகவேயிருக்கட்டும்; பசியில்லையாயின் அவற்றைக் கொண்டு என் செய்வது?" என்று. வாதஞ் செய்யத் தொடங்கினவர் உடனே சாந்தரானார். இந்தமுடிவைச்சிறிது விவரிக்கிறேன். நம்மாழ்வார் திருவாய் மொழியில் *உண்ணுஞ் சோறு பருகு நீர் தின்னும் வெற்றிலையும்* என்றொரு பாசுரம் பாடியிருப்பது ப்ரஸித்தம். இதில் "சோறும் நீரும் வெற்றிலையுமெல்லாம்

கண்ணன்'' என்றிவ்வளவே சொல்லியிருந்தால் போதுமானது; சோற்றுக்கு உண்ணுமென்கிற விசேஷணமும், நீருக்குப் பருகு மென்கிற விசேஷணமும், வெற்றிலைக்குத் தின்னுமென்கிற விசேஷணமும் எதற்காகக்கொடுத்தது? சோறுஎன்றால் அது உண்ணப் படுவதுதானே; வெற்றிலையென்றால் அது தின்னப்படுவதுதானே; விசேஷணங்கள அவசியமில்லையே; பாதபூரணார்த்தமாகவா இவை இடப்பட்டன? என்று கேட்கநேரும். கேண்மின்; வயிறாரவுண்டுகளித்தவனுக்குச் சோறு கிடைத்தால் அது அவனுக்கு உண்ணத்தக்கதாயோ? கங்கைக் கரையிலே திரியுமவனுக்கு க்ஷாரஜலம் பருகத்தக்கதாமோ? வெற்றிலை தின்று மென்றவனுக்கு அது கண்டால் விருப்பமாகுமோ? பசியுள்ளவனுக்கே சோறு போக்யம்; தாஹமுள்ளவனுக்கே நீர் அபேக்ஷிதம்; வாய் உலர்ந்தவனுக்கே வெற்றிலையில் விருப்பம். ஆக *உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையுமெல்லாம்* என்றாழ்வாரருளிச் செய்தது பொருத்தம். போஜனத்துக்கு க்ஷுத்து தான் முக்கியமென்பது இதனாலும் தெரிவிக்கப்பட்டதாகிறது. க்ஷுத்தானது போஜனத்திற்கு முக்கியமாயிருந்தாலும் அதை போஜனத்திற்கு ஸாதனமாக நினைப்பாரு மில்லை சொல்லுவாருமில்லை. அதுபோல 'பக்தியுள்ளவனுக்குத்தான் பகவத் போகம் ருசிக்கும்' என்றால் பக்தியை ஸாதனமென்று நினைக்கத்தகுமோ? அதிகார கோடியிலே சேருமவற்றை ஸாதன கோடியிலே சேர்க்கலாகா தென்கிற தத்துவம் இதனால் உணரத்தக்கதாகும். நம்மிடத்திலே ஸாதனமாகச் சொல்லக் கூடியது ஏதுமில்லை. எதுவும் அதிகார ஸம்பத்தியில் சேருமித்தனையே. ஆகவேதான் "உபாயமும் அவனே, உபேயமும் அவனே" என்கிற நூற்கொள்கையை நம் ஆசாரியர்கள் பல முகமாக விவரித்தருளுகிறார்கள்; "போஜனத்துக்கு க்ஷுத்துப் போலே" என்பது ஆசார்ய திவ்யஸூக்தி. இது நிதியாகக் கொள்ளத்தக்கது. .... .... .... * (36)

## 37. ரோமச மஹர்ஷியின் சரிதை எங்குள்ளது?

ரோமசரென்பவர் சரீரமுழுவதும் கரடிபோல் அடர்ந்த ரோமங்களை யுடைய ஒரு மாமுனிவர். இவர் விண்ணுலகிற்சென்று விண்ணவர் கோனைத் தொழுதிறைஞ்சி யேத்துவதிற்காட்டிலும் இம்மண்ணுலகிலேயே நெடுங்காலம் வாழ்ந்திருந்து நெடுமாலைச் சிந்தை செய்தலாகிற பேரின்பம் பெறுதலில் மிக்க குதூஹலம் கொண்டார்; "கோவிந்தற்கோர் குற்றேவல் இம்மைப் பிறவிசெய்யாதே இனிப்போய்ச் செய்யும் தவந்தானென்?" என்ற ஆண்டாளைப் போலே இங்ஙனே குதூஹலங்கொண்டார். "வேதநூற் பிராயம் நூறு" என்னப்பட்ட ஆயுளில் த்ருப்தியற்றவராய் மிகவும் நீண்ட ஆயுள்பெற வேணுமென்று ஒரு புண்ணிய நதியின் கரையிலே இவர் தவம் புரிந்தார். *உள்ளுவாருள்ளிற்றெல்லாமுடனிருந்தறியு மெம்பெருமான் இவருடைய அபிலாஷையை நோக்கி மிகவும் மகிழ்ந்து இவர் முன்னே வந்து ஸேவை தந்தருளி "உம்முடைய விருப்பத்தைக் கூசாதே வேண்டிக்கொள்ளும்" என்று சோதிவாய்திறந்து அருளிச் செய்தான். அது கேட்டு உவந்த மாமுனிவர் "பரந்தாமா! பரஞ்சோதீ! பரம புருஷா! இவ்வுடம்போடே உன்னை வெகு காலம் வழிபடவேணுமென்று பேராசை கொண்டிருக்கிறேன் நான்; அனேகமாயிரம் ப்ரஹ்மாக்களுடைய ஆயுளை என்னொருவனுக்குக் கல்பித்தருளினால் மஹா ப்ரஸாதமாகும்" என்று கைகூப்பி விண்ணப்பஞ்செய்ய, எம்பெருமான் அப்படியே திருவுள்ளமுவந்து 'முனிவரே! ப்ரஹ்மாவினுடைய ஆயுளின் அவதி உமக்குத் தெரிந்ததே; ஒரு பிரமன் காலஞ்சென்றால் உம்முடைய உடம்பினின்றும் ஒரு ரோமம் இற்று விழக்கடவது; இப்படி ஒவ்வொரு ப்ரஹ்மாவின் முடிவிலும் ஒவ்வொரு மயிராக இற்று விழுந்தொழிந்து 'இனி உம்முடைய உடம்பில் ஒரு ரோமமும் இல்லை' என்று சொல்லத்தக்க நிலைமை நேருமளவும் நீர் ஜீவித்திருந்து வழிபாடு செய்வீர்" என்று வரம் தந்தருளி மறைந்திட்டனன் அவர் காழிச்சீராம விண்ணகரம் [சீகாழி] என்னும் க்ஷேத்திரத்தில் அவ்வண்ணமாகவே நெடுக ஜீவித்திருந்து வழிபாடு செய்யலுற்றார். இக்கதை மேற்குறித்த திருப்பதியின் பதிகத்தில் இரண்டாவது பாசுரத்தில் "நான்முகனுள் மிகைத்தருக்கை யிருக்கு வாய்மை நலமிகுசீர் உரோமசனால் நவிற்றி" என்று திருமங்கையாழ்வாரால் அநுஸந்திக்கப்பட்டுளது. இக்கதையைச் சிறிது வேறு வகையாகவும் சிலர் சொல்லக் கேட்டதுண்டு. இந்தச் சரிதை எங்குளது? வல்லார் ஆகரங் கண்டு விவரிக்கவேணும். ... ... .... .... (49)



## 38. மாரீசனை பக்தகோடியில் சேர்க்கலாம்.

ஸ்ரீ ராமாயணத்தில் பெருமாள் நாட்டைத்துறந்து காட்டுக் கெழுந்தருள்வதற்கு மூலகாரணம் மந்தரை என்று சொல்லப்படுவதுபோல, காட்டில் பிராட்டியைப் பிரிந்து படாத பாடுகளும் பட்டதற்கு மூலகாரணம் மாரீசனென்பது கதை வாயிலாக அறிந்த விஷயமாகும் "சுரிகுழற்கனிவாய்த் திருவினைப்பிரித்த கொடுமையிற் கடுவிசை யரக்கன்" என்று இராவணன் படுபாவியாக நிந்திக்கப்படுவதுபோல் இந்த மாரீசனும் அவனுக்குத் துணைபுரிந்த காரணம்பற்றி மிகவும் நிந்திக்கத்தக்கவன் என்று பலர் நினைக்கக்கூடும். ஆனால் இவனது தன்மையை நன்கு ஆராய்ந்து பார்க்குமளவில் இவனை அநுகூலனாகவே கொள்ள வடுக்குமென்று நுண்மதியோர் கூறுவர். கேண்மின்:—சூர்ப்பணகை மூக்கறுப்புண்டு ஜனஸ்தானத்திலிருந்த தன் தமையனாகிய கரன் பக்கல் சென்று இச் செய்தியைச் சொல்லிப் புரண்டழுது அவனுக்குக் கோபத்தை உண்டாக்கினவளவில் அக்கரன் பதினாலாயிரம் சேனாதிபதிகளையும் சேனைகளையும் இராமபிரானோடு போர் செய்ய அனுப்ப, இராமன் அவர்களத்தனை பேரையும்தான் ஒருவனாகவே கொன்று வென்றிட்டு, பிறகு வந்த கரனையும் கொன்றுவிட்டு ஜன ஸ்தானத்தை சூன்யமாக்கின போது அங்கு இராமபாணத்துக்குத் தப்பிப் பிழைத்து ஒளிந்து ஓடிப்போன அகம்பனன்

லங்கைக்குச்சென்று, ஜனஸ்தானமடங்கலும் பாழ்பட்ட செய்தியையும் இராமன் ருவராலும் வெல்லமுடியாதவனென்பதையும் சொல்லி ஸீதையை அபஹரித்துக் காண்டுவந்தால் அந்த வருத்தத்திஞல் இராமன் முடிந்து விடக்கூடும்' என்று தெரிவிக்க, இராவணன் அவனது சொற்படியே ஸீதையைக் கொள்ளைகொள்ள உபாயமென்? என்று சிந்தித்து அங்கு நின்றும் புறப்பட்டு மாரீசனிருக்குமிடத்திற்கு வந்தான். வந்து, 'நீ எனக்கு ஒரு உதவி செய்யவேணும்' என்று சொல்லித் தன் கருத்தை வெளியிட்டபோது. மாரீசன் 'அப்பா! இராவணு! அந்த மஹாநுபாவனுடன் உனக்கு த்வேஷம் தகாது; இந்த இராமன் சிறு பிள்ளையாயிருக்கும்பொழுதே விச்வாமித்திர யாகத்தில் அவனுடைய அம்புக்கு இலக்காகி நான்பட்ட பாடு இன்னும் மறக்க முடியவில்லை. அத்திருநாமம் செவிப்படும் போதே என் உடல் நடுங்குகின்றது; இப்பேச்சை விட்டுவிடு; இதை நெஞ்சிலும் நினையாதே' என்று யுக்தமாக உபதேசிக்க, அதைக்கேட்டு இராவணன் இலங்கைக்குப் போய்விட்டான; பிறகு சூர்ப்பணகை இலங்கைக்குச் சென்று, தான் மூக்கறுப்புண்டபடியையும் தாசரதிகளின் ஸௌந்தர்ய பராக்ரமாதி குணங்கள் எல்லையற்றிருக்கிறபடியையும் ஸீதையின் இருப்பையும் சொல்லி 'இராகவனை நீ எவ்விதத்திலாவது பங்கம் செய்யாவிடில் நீ ஆண்பிள்ளையே அல்லை' என்று கூறி இராவணனை நிந்தித்துக் கீழே விழுந்து புரண்டு அழ, இராவணன் மறுபடியும் மாரீசனிடம் வந்து நயபயங்களிஞல் அவனைத் தன் சொல்வழிப் படுத்திக் கொண்டு அம்மாரீசனும் தானுமாய்ப் புறப்பட்டுவந்து தான் ஓர் இடத்தில் ஒளிந்திருந்தான். மாரீசன் இராவணனுடைய வலிகட்டாயம் பொறுக்கமாட்டாமல் மனம் நொந்துகொண்டே உடன்பட்டு வந்தானேயன்றி இராமபிரானிடத்தில் கறுக்கொண்டு வந்தானல்லன்; படுபாவியான இவ்விராவணனுக்கு உடன்பட்டு நாம் காரியஞ் செய்யாவிடில் இவன் நம்மைக் கொலைசெய்யப்போகிருன்; இவனுக்கு உடன்பட்டுக் காரியம் செய்தோமாகில் இராமபிரான் நம்மைக் கொன்றுவிடப்போகிருர்; இப்பாவியின் கையில் நாம் கொலையுண்பதிற் காட்டிலும் அப்பரமபுருஷன் கையிற் கொலையுண்பது நற்கதி நண்ணுதற்கு ஹேதுவாகும்'' என்றெண்ணித் தன் மரணத்தைத் திடமாக நிச்சயித்துக் கொண்டே வந்தானத்தனை. பிறகு மாரீசன் பொன்மானுருவெடுத்துக்கொண்டு ஸீதையின் பார்வையில் மேயத்தொடங்கி அக்காட்டில் இராகவனை நெடுந்தூரம் இழுத்துக்கொண்டுபோய் விட்டான். அப்பொழுது இராகவன் 'இவன் அரக்கன்' என்று தெளிந்து அம்புகளை அவன்மீது எறிந்தார். அதனுல் அடியுண்ட மாரீசன் மானுருவை விட்டு நிஜ ரூபத்துடன் கீழே விழுந்து 'ஹா லக்ஷ்மணு! ஹா ஸீதே! கெட்டேன்' என்று இராகவனைப்போல் கூச்சலிட்டுக்கொண்டு மரணமடைந்தான். இங்கு நாம் ஆலோசிக்க வேண்டியதாவது, இப்படி இவன் கூச்சலிட்டது இராவணனுக்கு உபகாரம் செய்ய வேணுமென்கிற எண்ணத்திஞலா? அல்லது அபகாரம் செய்யவேணுமென்கிற எண்ணத்திஞலா? என்று ஆராயவேண்டும். 'இராவணன்கையிற் கொலையுண்பதைவிட



இராம பாணத்தாற் கொலையுண்டு முடிதல் நன்று' என்கிற எண்ணத்தோடுவந்த மாரீசனுக்கு இராவணன் திறத்தில் உபகாரம் செய்யவேணுமென்கிற எண்ணமுண்டாக ப்ரஸக்தியில்லை; 'நாம் மாண்டொழிவது போல் அவனையும் மாண்டொழியச் செய்து விடவேண்டும்' என்ற எண்ணங்கொண்டே இராகவனைப்போல் கூச்சலிட்டான். மாரீசன் இப்படி கூச்சலிடாமல் வெறுமனே சென்றிருப்பாஞகில் பிராட்டி லக்ஷ்மணனைப் பிரிய நேர்ந்திராது; இராவணன் பிராட்டியைக் கவர்ந்துகொண்டு போகவும் அது நிமித்தமாகத் தான் மாண்டுபோகவும் நேர்ந்திராது தேவர்களின் வேண்டுகோள் ஈடேறவும் வழியிராது. மரணகாலத்தில் மாரீசன் போட்ட கூச்சலே ராவணஸம்ஹாரத்திற்கு மூல காரணமாக நின்றமையால் ஸ்ரீராம விஷயத்திலே மாரீசன் உபகாரகனேயன்றி அபகாரக னல்லன் என்று நினைக்கத்தக்கது. ''அப்ரமேயம் ஹி தத் தேஜா யஸ்ய ஸா ஜநகாத்மஜா'' என்று நிலையிட்டவனுன மாரீசன் பரம பாகவதனென்றே மதிக்கத்தக்கவன். .... (38)

## 39. ஒரு மஹாகவியின் சிறந்த சுலோகம்.

**ஆபத்தக்ருத்ரிமஸடாஜடிலாம்ஸபித்தி:**
**ஆரோபிதோ ம்ருகபதே: பதவீம் யதி ச்வா,**
**மத்தேபகும்பதடபாடநலம்படஸ்ய**
**நாதம் கரிஷ்யதீ கதம் ஹரிணுதிபஸ்ய?**

(இதன் கருத்து.) உலகத்தில் சிங்கம் முதலிய உயர்ந்த ஜந்துக்களும் நாய் முதலிய நிஹீந ஜந்துக்களும் பகவானுடைய ஸ்ருஷ்டியில் ஏற்பட்டிருக்கின்றன ஒன்றிஞல் ஆகத்தக்க காரியம் மற்ருென்றிஞல் ஆகாது. சிங்கத்தின் உளைமயிர்களை நாய்க்கு ஏறிட்டு [அதாவது நாய்க்கு சிங்கக் கோலம் போட்டு] அந்த நாயை சிங்கம் வீற்றிருக்க வேண்டுமிடத்தில் உட்காரவைப்பதில் கஷ்டமில்லை; இதை எளிதாகச் செய்துவிடலாம். ஆஞல் உண்மையான சிங்கம் செய்யக்கூடிய காரியத்தை அந்த நாய் செய்ய முடியுமா! என்பதுதான் ஆராயத்தக்கது. ''மாரி மலைமுழஞ்சில் மன்னிக்கிடந்துறங்கும் சீரிய சிங்க மறிவுற்றுத் தீவிழித்து, வேரிமயிர் பொங்க எப்பாடும் பேர்ந்துதறி மூரிநிமிர்ந்து முழங்கிப் புறப்பட்டுப் போதரும்'' என்கிற இயல்வு க்ருத்ரிம ஸிம்ஹமாகிய க்ராமஸிம்ஹத்திற்கு ஒரு நாளும் வாய்க்காது என்றபடி. ஒரு மஹாராஜ ஸபையில் ஆஸ்தான வித்வாஞயிருந்த ஒரு மஹா பண்டிதனைத் தள்ளி அந்த ஸ்தானத்தில் ஒரு யதாஜாதனை பண்டிதக்கோலம் செய்து பட்டுப் பீதாம்பரங்கள் போர்த்து உட்காரவைத்திட முடியுமாஞலும் கம்பீரமாக வாய் திறந்தொன்று பேசமுடியுமோ? என்பது போன்ற பல விஷயங்களுக்கு இது அந்யாபதேசம். ப்ரஸங்காத் அந்யாபதேச சுலோகங்களின்

ரஸபுஷ்டியைப் பற்றிச் சிறிது விஞ்ஞாபிக்கிறேன். உலகில் கவிதைகள் இருவகைப்படும், (1). பக்தர்களின் கவிதைகள், (2). மஹாகவிகளின் கவிதைகள். முகுந்தமாலை. ஸ்தோத்ரரத்னம், பஞ்சஸ்தவம்....இத்யாதிகள் பரமபக்தி பரீவாஹமாக அவதரித்த பக்த கவிதைகளாதலால் இவற்றில் ச்லேஷயமகங்களோ அந்யாபதேசோக்திகளோ புகுவதற்கு அவகாசமே கிடையாது. **“அவாவிலந்தாதி”** என்று திருவாய்மொழியின் முடிவில் நம்மாழ்வார் அருளிச் செய்தபடி காதல் அன்பு வேட்கை அவா என்னப்படுகிற பல நாமங்களுக்கு இலக்கான பக்தி உள்ளடங்காமல் வழிந்து புறப்பட்ட சொற்கள் என்னும் படியாக ஆவிர்ப்பவித்த ஸ்துதிகளுக்குக் கர்த்தாக்களான ஆசாரியர்கள் காளிதாஸாதி கவிகளுக்கும் மேற்பட்ட மஹத்தர கவிகளானாலும் இவ்வாசிரியர்கள் சிலேஷயமகாதிகளை யிட்டும் அந்யாபதேசங்களையிட்டும் கவிதைகள் இயற்றினதில்லை. கவிகள் என்றும் மஹாகவிகள் என்றும் பெயர் பெற்றவர்களே அத்தகைய கவிதைகள் இயற்றுவதில் ஊக்கங்கொண்டவர்களாயிருந்தனர். அவர்களினுள்ளும் பண்டிதராஜரும் பர்த்ருஹரி கவியும்அந்யாபதேசச்லோகங்களியற்றுவதில் நிபுணர்களாக மிக்கப்ரஸித்திபெற்றவர்கள். பண்டிதராஜசதகம் என்று வழங்கப்படும் நூல் ஒரு சதகமேயன்று; ஐந்து சதகங்கள் கொண்டது. ஒவ்வொரு சுலோகமும் அதில் அற்புதமானது. தெலுங்குலிபியில் இரு முறை அச்சாகியுள்ளது. இந்நூல் இக்காலத்தில் துர்லபமென்று நினைக்கிறேன். வட நாட்டில் தேவநாகரலிபியில் அச்சிட்டிருக்கக்கூடும். இந்நூல் முழுவதும் அந்யாபதேசமாகவே அமைக்கப்பட்டுள்ளது. ப்ரக்ருதம் இங்கு நாம் கையாண்டிருக்கிற * ஆபத்த க்ருத்ரிம ஸடேத்யாதி சுலோகம் அந்நாலிலுள்ளதே. அலங்கார சாஸ்த்ரத்தில் ரூபகாதிசயோக்தி, அப்ரஸ்துத ப்ரசம்ஸை, ஸமாஸோக்தி என்றிப்படி மூன்று அலங்காரங்களுண்டு. அந்யாப தேசத்திற்கு இம் மூன்றலங்காரங்களும் ஜீவ நாடிகளாம். இவ்வலங்காரங்களுக்கு லக்ஷ்யமான சுலோகங்களே ஸாஹித்ய ரஸிகர்களுக்குப் போது போக்காயிருக்கும். ஆயிரக்கணக்கான இத்தகைய சுலோகங்களைத் திரட்டி ஸுபாஷித ரத்னபாண்டாகார மென்று பெரிய புத்தகம் (தேவநாகாலிபியில்) வெளியிட்டுள்ளார்கள். மேகத்தை ப்பார்த்துச் சொல்லுதல் மானைநோக்கிச் சொல்லுதல் மலையைக் குறித்துரைத்தல் .. இப்படியாக அபரிமிதம். இவையெல்லாம் வேறொரு பொருளையே விவக்ஷிதமாகக் கொண்டிருக்குமாதலால் அந்யாபதேசமெனப்படும். .... ... *

ஒரு குறிப்பு;—சாடுச்லோக சதகம் என்றொரு நூல் நம்மால் சிலவாண்டுகட்கு முன் உரையோடுங்கூட வெளியிடப்பட்டுள்ளது அதில் நாம் கொண்ட சுலோகங்கள் பெரும்பாலும் அந்யாபதேசச்சுலோகங்களேயாம். ரஸிகர்கள் அந்நூலைப் படிப்பது நன்று.



## 40. ஸ்ரீமந்நாதமுனிகளின் திருவருட்பொலிவு.

ஆழ்வார்களருளிச்செய்த திவ்யப்ரபந்தங்களெல்லாம் உலகில் மலினமாகி மறைந்திருந்தகாலத்தில் ஸ்ரீமந்நாதமுனிகள் வெகு பரிச்ரமப்பட்டு நம்மாழ்வாரை யோகதசையில் ஸாக்ஷாத்கரித்து திவ்யப்ரபந்தங்களை யெல்லாம் பெற்று விசேஷ ப்ரசாரம் செய்தருளினதாக இதிஹாஸமுள்ளது. இது பின்புள்ளவர்கள் கற்பனையாக எழுதி வைத்ததென்று சிலர் சொல்வதற்கிடமில்லாதபடி ஸ்ரீமத் வேதாந்தவாசிரியர் முதலான முன்னோர்கள் தாமும் குருபரம்பரா ஸாரம் முதலான ரஹஸ்ய க்ரந்தங்களில் எழுதிவைத்துள்ளார்கள். ஆகவே, நம்முடைய ஸம்ப்ரதாய பஹிர்ப்பூதர்களான பிறர் எப்படிச் சொன்னாலும் நமது ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாயஸ்தர்கள் இதில் அதிசங்கைகொள்ள அவகாசலேசமுமில்லை. இப்படியிருக்க “திவ்ய ப்ரபந்தங்களை வளர்த்தவர் எம்பெருமானார்” என்று ப்ரஸித்தி வந்திருக்கிறது. எம்பெருமானார்க்கு வாழி திருநாமமருளிச் செய்தவர் மணவாளமாமுனிகள். (ஆர்த்திப்ரபந்தத்தில் அஃதுள்ளது.) அதில் “மாறனுரை



காட்டுமன்னார் ஸன்னிதி ஸ்ரீமந்நாதமுனிகள்.

"தமிழ்மறை வளர்த்தோன் வாழியே" என்றுள்ளது. இவ்விஷயத்தை
ுமானுருடைய ஸமகாலத்தவர்களான மஹாசார்யர்களின் ஸ்ரீஸூக்திகளி
நன்கு உணர்கின்றோம். ஆழ்வார்களருளிச்செய்த ஸகல திவ்யப்பிரபந்தங்
ம் தனியன்கள் அநாதிகாலமாகவே அநுஸந்திக்கப்பட்டுவருகின்றன. சில
ங்களுக்கு ஒன்றிரண்டு தனியன்களும் சில பிரபந்தங்களுக்கு ஐந்தாறு
களும் அமைந்திருக்கின்றன. நம்மாழ்வாரருளிய திருவாய்மொழியாயிரத்
ஸம்ஸ்க்ருதத்தனியன் ஒன்றும், தமிழ்த் தனியன்கள் ஐந்துமாக ஆறு
கள் உலகமெங்கும் அநுஸந்திக்கப்பட்டுவருகின்றன. மாறன் பணித்த
றைக்கு ஆறங்கங்கூறவவதரித்த திருமங்கையாழ்வாரருளிச்செய்த பெரிய
ாழியாயிரத்திற்கு ஸம்ஸ்க்ருதத் தனியன் ஒன்றும் தமிழ்த் தனியன்கள்
மாக நான்கு தனியன்கள் அநுஸந்திக்கப்பட்டுவருகின்றன. பெரும்பாலும்
களில் அந்தந்த திவ்யப்பிரபந்தங்களின் பெருமை, அவற்றையருளிச்
வர்களின் பெருமை, அவர்களவதரித்த தலத்தின் பெருமை முதலியன
லப்படுகின்றன. திருவாய்மொழித் தனியன்களில் ஒன்றும், பெரிய
ாழித் தனியன்களில் ஒன்றும் வெகு விலக்ஷணமாக அவதரித்திருக்கின்றன.
ய்மொழித் தனியன்களில், "**ஏய்ந்த பெருங்கீர்த்தி யிராமானுச முனிதன்**
**த மலர்ப்பாதம் வணங்குகின்றேன்—ஆய்ந்தபெருஞ் சீரார் சடகோபன்**
**மிழ்வேதந் தரிக்கும் பேராத வுள்ளம் பெற.**" என்கிற தனியனானது
பருமானுர் திருவடிகளிலே பண்ணுகிறவொரு பிரார்த்தனையாக அமைந்திருக்
. இந்த வெண்பாவின் பொருளாவது மிகச்சிறந்த கல்யாணகுணசாலியான
ழ்வாரருளிச்செய்த திருவாய்மொழியாயிரத்தை நன்கு தரித்துக்கொள்ள
நெஞ்சுதன்னைப் பெறுவதற்காக பெரும்புகழ்படைத்த எம்பெருமானு
டைய திருவடித் தாமரைகளை வணங்குகின்றேனென்பதாம். ஸ்வாமிந்!
பருமானுரே! திருவாய்மொழியாயிரத்தையும் மறவாமல் தரிக்கத்தக்க
ர்த்தியத்தை வரப்ரஸாதமாகத் தந்தருளவேணுமென்று அவர்தம்மையே
க்கிப் பிரார்த்திக்கிறபடியாகத் தேறுகின்றது.

பெரிய திருமொழித் தனியன்களுள்,

**எங்கள் கதியே யிராமானுச முனியே! சங்கை கெடுத்தாண்ட தவராசா!—**
**பாங்குபுகழ் மங்கையர்கோனீந்த மறையாயிரமனைத்தும் தங்குமனம்**
**யெனக்குத் தா.**"—என்கிற விந்தத் தனியனும் இதேரீதியாக அமைந்திருக்
றது. இது எம்பெருமானாரை முன்னிலைப் படுத்தியே கூறியுள்ளது. திருமங்கை



யாழ்வாரருளிச்செய்த பெரிய திருமொழியாயிரத்தையும் தரிக்கவல்ல மனத்தைத் தந்தருளவேணுமென்று எம்பெருமானாரை நோக்கிப் பிரார்த்தித்திருக்கிறது இதில். ஆக இவ்விரண்டு தனியன்களையும் விசேஷித்து மனதில் மனனம் செய்யுங்கால் தனிச்சிறப்புவாய்ந்தவொரு பரமானந்தம் விளைவதோடு எம்பெருமானாருடைய ஒப்பற்றவொரு பெருமையும் அறியலாகிறது. பிரபந்தங்களைத் தரிக்கும்படியான நெஞ்சைத் தந்தருளவேணுமென்கிற பிரார்த்தனையை அந்தந்த ஆழ்வார்களை நோக்கியே செய்திருக்கலாம்; அவர்களுக்கு அந்தரங்கர்களான மதுரகவிகள் ஸ்ரீமந்நாதமுனிகள் போல்வாரை நோக்கியாவது செய்திருக்கலாம்: பரமோதாரனை எம்பெருமானைநோக்கியாவது செய்திருக்கலாம். ஸகலவிதஸம்பத்துக்களையும் அளிக்கவல்ல பெரியபிராட்டியாரைநோக்கியாவது செய்திருக்கலாம். [இராமானுச நூற்றந்தாதியின் ஈற்றுப்பாசுரத்தோடு மிகப்பொருந்துமிது.] இப்படிப்பட்ட வழிகளைவிட்டு எம்பெருமானாரை நோக்கி இந்தப் பிரார்த்தனை செய்திருப்பது எதனாலென்று விமர்சிக்கவேண்டியது ஆவச்யகமன்றோ? புதிதாக நாம் என்ன விமர்சிக்கப் போகிறோம்? அக்காலத்தில் ஆழ்வாரருளிச்செயல்களெல்லாம் எம்பெருமானாரிட்டவழக்கா யிருந்தனவென்பது நிஸ்ஸந்தேஹமாக அறியக்கிடக்கின்றது. வெகு ச்ரமப்பட்டு அதிகரித்துப் பலகால் உருச்சொல்லித் தரிக்கவேண்டிய இந்த மஹத்தான ப்ரஹ்மவித்யையை ஸ்வாமி யெம்பெருமானாரொருவரே ***கலியுங்கெடுங் கண்டுகொண்மி**னென்று ஆசாஸித்த ஆழ்வாருடைய பரமக்ருபையினாலும். ***ஆமுதல்வனிவ**னென்று அநுக்ரஹித்த ஆளவந்தாருடைய அற்புதமான கடாக்ஷவீக்ஷணாதிசயத்தினாலும் அநாயாஸமாக க்ரஹித்து ஓரிடத்திலும் ஒருவிதமான ஸந்தேஹமும் விஸ்மரணமுமின்றிக்கே தரித்தருளியிருந்தாரென்பது ஸுஸ்பஷ்டமாகின்றது. இல்லையேல் இந்தத் தனியன்கள் இவ்வண்ணமாக அவதரித்திருக்க அவகாசமில்லையன்றோ. ...

## 41. "வளர்த்த இதத்தாய் இராமானுசன்"

முன்னெடுத்த, *ஏய்ந்த பெருங்கீர்த்தி* என்கிற தனியனுக்கு அடுத்ததான "வான்திகழுஞ்சோலை" என்று தொடங்குந் தனியனில் "தமிழ்மறைகளாயிரமும் ஈன்ற முதல் தாய் சடகோபன், மொய்ம்பால் வளர்த்த இதத்தாய் இராமானுசன்" என்று சொல்லப்பட்டிருக்கின்றது. திருவாய்மொழியைப் பெற்ற தாயார் நம்மாழ்வாரென்றும், வளர்த்த தாயார் எம்பெருமானாரென்றும் அக்காலத்திலிருந்த ஆப்ததமர்களான ஆசிரியர்கள் அருளிச் செய்தார்களென்றால் திவ்யப் பிரபந்தங்களிலே எம்பெருமானார் எவ்வளவு ஈடுபாடு கொண்டவராக இருக்கவேண்டும்! திவ்ய

ந்தங்களைக் கற்க ருசியில்லாமலிருந்தவர்களை வலிய அழைத்துக் கற்க நியமித்
ளினர். வியாக்யானங்கள் அவதரிக்க நியமனம் தந்தருளினர். ஆங்காங்கு
மை பெருமை வாய்ந்த நிர்வாஹங்களை வெளியிட்டருளினர். திவ்ய தேசங்
ல் அருளிச்செயல் பிரசாரங்களை ப்ரபலப்படுத்தியருளினர். இவ்வண்ணமாகச்
தருளின செயல்களைக்கொண்டே "மொய்ம்பால் வளர்த்த இதத்தாய்
மானுசன்" என்று பணித்தார்கள். அக்காலத்தில் எம்பெருமானார் அவ்வளவு
தை கொண்டருளியிராவிடில் திவ்ய ப்ரபந்தங்கள் ஸ்ரீமந் நாதமுனிகளின்
த்திற்கு முன்னேயிருந்த விதமாகவே லோபமடைந்திருக்கும். அப்படியாகாத
ந்கு ஸ்வாமி யெம்பெருமானர் செய்தருளின சேமக்காப்பு வாசாமகோசரம்.
ர்வதேசதசாகாலேஷு...ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞா வர்த்ததாம் அபிவர்த்த
...திகந்தவ்யாபினீ பூயாத் ஸாஹி லோகஹிதைஷிணீ" என்கிற ச்லோகத்தை
நகரமெங்கும் திவ்யப்ரபந்த ஸேவா காலங்களிலேயே அநுஸந்தித்து வருவ
ல் அந்த ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞையானது திவ்யப் பிரபந்த விஷயமேயல்லது
ு விஷயமன்று என்பது நன்கு உணரலாகிறது. ... ... ❋

## 42. ஸ்ரீ கோவர்த்தனம் ஆத்யரங்காசார்யஸ்வாமி

உலகில் பிறந்தவர்கள் போதைப்போக்குவதற்குப் பல வழிகள் இருந்
தும் "கார்கலந்தமேனியான் கைகலந்தவாழியான், பார்கலந்த வல்வயிற்றான்
பணையான் —சீர்கலந்த சொல்நினைந்து போக்காரேல் சூழ்வினையினாழ்துயரை,
நினைந்து போக்குவர் இப்போது." என்று நம்மாழ்வாரருளிச் செய்தபடி
த் குணாநுபவத்தினால் போதுபோக்குவதுதான் மிகச்சிறந்ததென்று அநுபவ
ர்கள் பலர் கைகண்டிருக்கிறார்கள். நாஸ்திகர்களாயிருப்பவர்களுங்கூடச் சில
ங்களில் பக்தி தலையெடுக்கப்பெற்று பகவத் குணங்களைப் பற்றிய புத்தகங்
வாசிக்க விரும்புகிறார்களென்பதை நாம் கண்டு வருகிறோம். அப்படி வாசிக்க
ம்பும் புத்தகங்களில் ஆழ்வார்களருளிச்செய்த திவ்யப் பிரபந்தங்களே
ான ஸ்தானத்தில் நிற்கின்றன. பொருள் தெரியாமற்போனாலும் பாசுரங்
ப் படிக்கும்போதே அற்புதமான ஆத்மானந்த முண்டாகின்ற தென்று பலர்
க் கேட்டிருக்கிறோம். பொருளும் தெரிந்து அனுபவிக்க நேர்ந்தால் விலக்ஷண
ஆனந்தவெள்ளம் ஆத்மாவில் பொங்கி அலையெறியுமென்பதில் ஸந்தேஹ
ல. வேதவேதாந்தங்கள் முதலிய ஸகல சாஸ்த்ரங்களிலும் கரைகண்டவர்க
ா நம் பூருவாசாரியர்களும்—[ஸ்ரீமந்நாதமுனிகள் ஆளவந்தார் ஸ்ரீராமாநுஜர்
ந்தாழ்வான் பட்டர் முதலான பேராசிரியர்களுங்கூட] இத்திவ்யப் பிரபந்தங்
லேயே போதைப்போக்கினார்களென்றால் இவற்றின் இனிமை எப்படிப்



பட்டதாயிருக்கவேணும்! கீர்த்திமூர்த்தியான ஸ்ரீமத் கோவர்த்தனம் (ஆத்ய) ரங்காசார்யர்ஸ்வாமி வடதேசத்தில் வியாபகராக எழுந்தருளியிருந்து ப்ருந்தாவனத்தில் திவ்யதேசப்ரதிஷ்டை செய்தருளினகாலத்தில் **ஸுதர்சநாசார்ய சாஸ்த்ரி** என்றொரு உத்தராகிவைஷ்ணவர் அவருடைய திருவடிகளில் ஆச்ரயித்திருந்தார். அவர் சதுச் சாஸ்த்ர பண்டிதர். கோவர்த்தனம் ஸ்வாமிக்கு தக்ஷிண பாஹுவாக விளங்கினவர். அவர் கோவர்த்தனம் ஸ்வாமி ஸன்னிதியில் திருவாய்மொழி வியாக்கியானமாகிய பகவத் விஷயத்தைக் காலக்ஷேபஞ் செய்தாராம். அப்போது அவருடைய உள்ளத்தில் தோன்றியதை அவரே பத்து ச்லோகங்களாக இயற்றி வெளியிட்டிருக்கிறார், அந்த ச்லோகங்களின் தாத்பர்யஸாரம் கேண்மின்.

"இவ்வுலகில் எண்ணிறந்த சாஸ்த்ரங்கள் தோன்றியிருந்தாலும் ஆழ்வார்களுடைய திவ்யப்ரபந்தங்களுக்குச் சமானமான சாஸ்த்ரம் எதுவுமே கிடையாது. அவற்றுக்கு வியாக்யானங்களை யருளிச்செய்த ஆசாரியர்களே உண்மையான ப்ரஹ்மவித்துக்கள். அப்படிப்பட்ட திவ்யப்பிரபந்தங்களையும் வியாக்கியானங்களையும் அதிகரிக்க யோக்யமான ஜன்மமே ஜன்மம். ஐயோ! நான் தமிழ்பாஷைக்கு வைதேசிகனாய் யமுனைக்கரையிலே பிறந்துகெட்டேனே! ஆனாலும் அந்த மஹார்த்தங்களை ஒருவாறு கேட்கும் பாக்கியம் பெற்றேனேயென்று மகிழ்கிறேன். ஸ்ரீமந் நாராயணா! கோவர்த்தனம் ஸ்வாமி திருவடிகளில் ஆச்ரயித்து ஸ்ரீராமாநுஜ ஸம்பந்தம்பெற்றவெனக்கு மோக்ஷப்ராப்தியில் ஸந்தேஹலேசமும் கிடையாது. ஆனாலும் ஸ்ரீமந் நாராயணா! எனக்கு நீ இப்பிறப்பில் மோக்ஷம் கொடுக்கலாகாதென்று உன் திருவடிகளைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு பிரார்த்திக்கிறேன். என்னை நீ தமிழ்நாட்டில் பிறப்பித்து **நாலாயிர அத்யாபகன்** என்ற விருதைப் பெறுவித்து ஆழ்வாருடைய ஸ்ரீஸூக்திகளை வாயாரக் கதறும்படி பண்ணி அப்படி பத்தெட்டு ஜன்மங்கள் கொடுத்து, பிறகுதான் என்னை நீ திருவடி சேர்த்துக் கொள்ளவேணும். இப்படியல்லாமல், நாராயணா! எனக்கு நீ இப்போதே மோக்ஷம் கொடுத்துவிட்டாயாகில் ***நச புநராவர்த்ததே நச புநராவர்த்ததே*** என்கிற உபநிஷத்தையும் ***அநாவ்ருத்திச் சப்தாதநாவ்ருத்திச் சப்தாத்*** என்கிற ப்ரஹ்ம ஸூத்ரத்தையும் கிழித்தெறிந்துவிட்டு இந்நிலத்திற்குத் திரும்பிவந்து தாம்ரபர்ணீ தீரத்திலும் காவேரிக்கரையிலும் ஸ்ரீபெரும்பூதூர் ப்ராந்தத்திலும் பிறவி எடுத்தே தீருவேன்." என்று இப்படிப்பட்ட நிர்வேதத்தைப் பொதிய வைத்துப் பத்து ச்லோகங்கள் இயற்றியிருக்கிறார் ப்ருந்தாவனம் ஸுதர்சனாசார்ய பண்டிதர். ... ... ... ❋

## அடியேனுடைய கிஞ்சித்காரம்பற்றின விண்ணப்பம்.

நேரில் கண்டவொரு விஷயத்தையுமிங்குத் தெரிவிக்கிறேன். கீர்த்தி ா யெழுந்தருளியிராநின்ற ஸ்ரீமத் பரமஹம்ஸ. ஸ்ரீ வானமாமலை சின்ன ஸ்வாமி இரண்டாவது தடவை வடதேசயாத்திரை யெழுந்தருளினபோது பாட்டுவில் தீகாகாட் என்ற ஸ்தலத்தில் எழுந்தருளியிருந்த காலத்தில் அடியேன் யாத்ராவசாத் (1916ம் வருஷத்தில்) அங்கு விடைகொள்ள நேர்ந்தது. ஸ்ரீ ஸ்வாமியின் பரம கிருபைக்கு இலக்காகிச் சிலநாள் அங்கத் தங்கியிருக்கையில் ஸ்ரீ ஸ்வாமி ஆழ்வார் ஸ்ரீ ஸூக்தியிலிருந்து அருமையான அர்த்த விசேஷங்களை அநுதினமும் ஹிந்தியில் உபந்யஸிக்கும்படியா யிருந்தது அதைக் கேட்ட அந்தத் தேசத்துப் பண்டிதர்கள் யாவரும் கண்ணுங் கண்ணீருமாயிருந்தனர். அவர்களில் தலைவரான வொருவர் சொன்ன வார்த்தை இன்னமும் லிருக்கிறது. அதாவது *ஆஸாமஹோ சரணரேணுஜுஷாமஹம்



கோயில் பிள்ளைலோகாசார்யர்



**ஸ்யாம் ப்ருந்தாவனே கிமபி குல்ம லதௌஷதீநாம், யா துஸ்த்யஜம் ஸ்வஜநம் ஆர்யபதஞ்ச ஹித்வா பேஜுர் முகுந்தபதவீம் ச்ருதிபிர் விமருக்யாம்*** [வேதங்களாலே தேடப்படுமதான க்ருஷ்ணன் போனவழியை யாவர் சில பெண்கள் ஸ்வஜனங்களையும் அதிக்ரமித்துப் பின்தொடர்ந்தார்களோ அவர்களுடைய பாத தூளியை பஜிக்கப்பாங்காக ப்ருந்தாவனத்திலுள்ள சிறு செடிகள் கொடிகள் ஓஷதிகள் முதலானவற்றில் ஏதேனுமொன்றாகப் பிறக்கப்பெறவேணும்] என்றும், ***அஹம் கதம்போ பூயாஸம் குந்தோவா யமுனாதடே*** [யமுனைக் கரையில் கண்ணபிரான் திருவடிகளால் மிதித்தேறின கடம்பமரமாகவோ குருந்தமரமாகவோ பிறக்கப்பெறவேணும்] என்றும் முன்னே உத்தவர் முதலானோர் ப்ரார்த்தித்ததாகச் சொல்லுகிறார்கள்; அந்த ஜன்மங்களெல்லாம் ஏதுக்கு? இப்படிப்பட்ட திவ்ய ப்ரபந்தங்களை யதிகரிக்கப் பாங்கான ஜன்மமன்றோ ஜன்மம்—என்றார். ஆகவிப்படி வைதேசிகர்களுங்கூட ஈடுபடும்படியான பெருமைவாய்ந்த திவ்யப்ரபந்தங்களின் அரிய பெரிய பொருள்களை ஸகல தேசத்தாரும் தெரிந்துகொண்டு ஆனந்திக்கவேணுமென்கிற ஆசை அடியேனுக்குத் தோன்றி, ஸம்ஸ்க்ருதம் ஹிந்தி தெலுங்கு ஆகிய மூன்று பாஷைகளிலும் திவ்யப்ரபந்த வியாக்யானங்களை எழுதத்தொடங்கி எட்டு வருஷங்களுக்கு மேலாயிற்று இதில் பலபகுதிகள் வெளிவந்திருக்கின்றன. அநுஸ்யூதமாக அச்சாகிவருகின்றது. பிள்ளை லோகாசார்யருடைய முக்கியமான மூன்று ரஹஸ்யங்களையும் ச்லோகபத்தமாக்கி தேவநாகரியிலும் தெலுங்கிலும் வெளியிட்டிருக்கிறேன். ... ... ... ... ❋

## 44. தமிழில் ஒரு விலக்ஷணரீதிகாட்டுதல்

வடமொழியில் ஒரு சொல்லுக்குப் பலபொருள்கள் இருப்பதுபோலவே தென்மொழியிலுமுண்டு வடமொழியில் ஹரி: என்கிற ஒரு சொல்லை யெடுத்துக் கொண்டோமானால் இதற்கு, விஷ்ணு, ஸூரியன், குதிரை, தவளை முதலிய பல பொருள்கள் நிகண்டுகளில் கூறப்பட்டிருக்கக் காண்கிறோம். விஷ்ணுவை உத்தேசித்தே ஹரி: என்னுமிந்தச் சொல்லைப் பெரும்பாலும் பிரயோகித்து வருகிறார்களெனினும் ஏனைய பொருள்களை உத்தேசித்தும் இச்சொல்லைப் பிரயோகிப்பதில் தவறில்லை, அங்ஙனே பிரயோகங்களும் பலவுள்ளன. விஷ்ணு வாசகமாக இதைப் பிரயோகிக்குங்காலத்தில் விஷ்ணுவினிடத்தில் அந்வயிக்கக் கூடிய விசேஷணங்களைப் பிரயோகிப்பர்கள்—"பீதாம்பராய ஹரயே கரவை நமாம்ஸி" என்றொரு ச்லோகத்தை எடுத்துக்கொள்வோம். இதில் ஹரிக்குப் பீதாம்பரத்வம் விசேஷணமாயிருக்கின்றது. பீதகவாடை யணிந்துகொண்டுள்ளவர் என்பது பொருள். இந்த விசேஷண ஸாமர்த்தியத்தினாலும் நாம் ஹரிசப்தார்த்த

தை இங்கு நிச்சயித்துக்கொள்ள விரகுண்டு, ஹரி பதத்திற்கு தவளேயென்கிற ாருளும் உண்டாகையாலே அப்பொருளே விவக்ஷித்து ஹரிபதம் உபயோகிக்கு த்து பீதாம்பரத்வ விசேஷணம் செய்யக்கூடுமா? என்றால் கூடாது என்பதே றுதியிடப்பட்டிருக்கிறது. தமிழில் இப்படியில்லே. அந்த பாஷையில் ஒரு ால்லுக்கு இரண்டு பொருள் இருந்தால் ஒரு பொருளுக்கு இசையும் டைமொழியை [விசேஷணத்தை] மற்றொரு பொருளுக்கும் உபயோகிப்ப ண்டு. இதற்குச் சில உதாரணங்கள் காட்டியே ஸஹ்ருதயர்களின் நெஞ்சில் தைப் பதியவைக்கவேண்டியிருக்கிறது. வஞ்சி என்கிறவொரு சொல்லே த்துக்கொள்வோம். இதற்கு வஞ்சிமரம் என்கிறவொரு வ்ருக்ஷவிசேஷமும் த்தம், சேரனுடைய ராஜதானியாகிய வஞ்சிமாநகரும் அர்த்தம். வஞ்சிமரத் க் கூறவேண்டுங்கால் உபயோகப்படுத்தக்கூடிய இலே, காய், கொடி முதலியன டைமையைத் தெரிவிக்கும் அடைமொழிகள் வஞ்சிமாநகரைக் கூறுங்கால் யோகப்படாவாயினும் கவிகள் பிரயோகத்தில் உபயோகிப்பதுண்டு. பரிபாடல் னும் சிறந்த தமிழ்நாலில் பன்னிரண்டாம் பாட்டினுரையில் பரிமேலழகர் கிற பெரியார் "நெட்டிலே வஞ்சிக்கோ" என்பதை எடுத்துக்காட்டியுள்ளார். நானூறு என்னும் நூலில் (செய்யுள்—387) "புல்லிலே வஞ்சிப் புறமதி க்கும் கல்லென் பொருநை" என்றுள்ளது. இவ்விடங்களில் வஞ்சிமாநகர் க்ஷிதமேயல்லது வஞ்சிமரம் விவக்ஷிதமேயன்று. ஆயினும், வ்ருக்ஷவிசேஷப் ாருட்கு உரிய நெட்டிலே புல்லிலே என்னும் அடைமொழிகளே அம்மரப் பெயர் ாண்ட வஞ்சிமாநகர்க்கும் ஏற்றியுள்ளார்கள் என்பது நன்கு காணக்கிடக் றது. நாகம் என்னுஞ் சொல் புன்னே மரத்திற்கும் பாம்புக்கும் பெயர். ாடலில் நாகமென்ற சொல்லேயிட்டுப் புன்னேமரத்தைப் பேசுங்கால் பாம்புக்கு ப அடைமொழியைப் புன்னேக்கு இட்டனர். "ஒளி திகழ் உத்தி உருக்கெழு கம்" என்ற பன்னிரண்டாஞ் செய்யுள் காண்க. இங்ஙனே தமிழ்நூற்களி ள ஸம்பிரதாயம் ஆழ்வார்களது அருளிச் செயல்களிலும் ஏறியுள்ள ன்பதே இங்கு எடுத்துக்காட்ட விரும்பியது. திருமங்கையாழ்வாருடைய ரிய திருமொழியில் (3-8-8.) "துளேயார் கருமென் குழலாச்சியர்" என்ற ட்டில் குழலுக்குத் துளேயார் என்னும் அடைமொழி கொடுக்கப்பட்டிருக் து. இங்கே குழல் என்பதற்குக் கூந்தல் என்று பொருள். குழல் என்பது லாங்குழலுக்கும் வாசகமாயினும் அப்பொருள் இங்கு விவக்ஷிதமன்று; கூந்தல் னும் பொருள் விவக்ஷிதமானல் அதற்குத் 'துளேயார்' என்ற விசேஷணம் ஙனே பொருந்துமென்று பரிசீலிக்கவேணும். புல்லாங்குழலில் துளே ஆர்ந்



திருப்பது ப்ரஸித்தம். ஆகவே, துளேகள் நிரம்பிய புல்லாங்குழலேச் சொல்லக் கடவதான குழல் என்கிற சொல்லால் கூறப்படுகின்ற கூந்தலேயுடையவர்களான ஆய்ச்சிகள் என்றதாயிற்று. வேறுவகையாகப் பொருள் கூறலாமானலும், இப்படியும் நிர்வஹிக்கிற புடையுண்டு என்றும், தமிழ் மரியாதையிலே இது விசேஷார்த்தமாகத் தெரிந்துகொள்ளத் தக்கதென்றும் இங்குக் காட்டினேம்.

## 45. வடமொழி மரியாதையுணர்த்துதல்

ஸம்ஸ்க்ருத பாஷையிலுள்ள பலபல நியமங்களுள் இதுவும் ஒரு நியமம். அதாவது முதல் வேற்றுமையான எழுவாய் (கர்த்தா) இருந்தால் அது ஒரு க்ரியா பதத்தோடுதான் அந்வயித்து முடியும். இடையிலுள்ள வினேயெச்சம் முதலான வற்றில் அந்வயித்து நிற்கமாட்டாது என்பதே. இதை ஸம்ஸ்க்ருத ஸரணியில் விவரிக்கிறேம். ப்ரதமாவிபக்தியான கர்த்ரு பதம் இருக்குமானல் அது ஒரு காரகக்ரியாபதத்திலோ திஙந்தக்ரியாபதத்திலோ அந்வயித்து முடியுமேயல்லது ல்யபந்தம் முதலான இடையிலுள்ள அவ்யயங்களில் அந்வயித்து நில்லாது என்றபடி. "சைத்ர : க்ராமம் கத்வா மைத்ரம் ததர்ச" என்பதாக ஒரு வாக்கியத்தைக் கொள்ளுவோம். சைத்ரன் ஊருக்குச் சென்று மைத்ரனைக் கண்டானென்பது இந்த வாக்கியத்தின் பொருள். இதில் சைத்ரன் என்ற எழுவாய் (ததர்ச-கண்டான்) என்ற வினேமுற்றேடே அந்வயித்தே தலேக்கட்டுகின்றது. "சைத்ரன் உண்பதற்கு மைத்ரன் சமைத்தான்" என்று சொல்லவேண்டில் "சைத்ர: போக்தும் மைத்ர: பசதிஸ்ம" என்று பிரயோகிக்கலாமா? என்று பார்க்கவேணும். இங்ஙனே பிரயோகிப்பதை சாஸ்த்ரஜ்ஞர்கள் ஸஹியார்கள். ஏனெனில், சைத்ர: என்கிற எழுவாயானது ஒருவினேமுற்றில் அந்வயித்தே தீரவேண்டுமாதலாலும், இங்கே உள்ளதான (பசதிஸ்ம—சமைத்தான்) என்ற வினேமுற்றில் அது அந்வயிக்க ஔசித்யமில்லாமையாலும் இந்த ப்ரயோகம் துஷ்டமென்றே கொள்ளப்படும். ச்ராத்தப்ரயோகத்தில் (இதம் க்ஷேத்ரம் கயா க்ஷேத்ரஸத்ருசம் பூத்வா...... மம அதிகார ஸம்பத் அஸ்து) என்று புரோஹிதர்கள் சொல்லிவருகிற வாக்கியத்தைப் பெரியார் ஸமஞ்ஜஸமென்று கொள்வதில்லே. கொள்வதற்கு இடமில்லே. முன்னே விவரித்த அநுபபத்திதான் காரணம். (இதம் க்ஷேத்ரம்) என்கிற எழுவாயும் (பூத்வா) என்கிற வினேயெச்சமும் மேலே அந்வயிக்க யோக்யதையில்லேயென்பது ஸ்பஷ்டம். ஆகவை இதைத் திருத்தியே வித்வத் வைதிகர்கள் சொல்லி வருகிறுர்கள். (இதம் க்ஷேத்ரம் கயாக்ஷேத்ரஸத்ருசம் பூயாத்) என்பர்கள். ... ... ...

## யாதவப்ரகாசகதையில் ஐந்துசங்கைகளையநுவதித்தல்

நம்முடைய குரு பரம்பராப்ரபாவம் முதலிய நூல்களில், ஸ்வாமி ஜர் யாதவப்ரகாசரிடம் வேதாந்தார்த்த ச்ரவணம் பண்ணினதாகச் சொல்லப்படுமிதிஹாஸத்தில் நமக்குப் பலவகையான ஆசங்கைகள் தோன்றக் கூடியதுண்டு. எங்ஙனே யென்னில்: (1) ஸ்வாமி இயற்கையிலேயே மிகச் சிறந்த ஸ்ரீ வைஷ்ணவோத்தமர் என்பது நிர்விவாதம். ஆளவந்தார் திருவடிகளில் ஆச்ரயித்து உய்ந்தவரான பெரிய திருமலை நம்பியின் ஸஹோதரீ புத்ரரான ஸ்வாமி ஆஜாநபாவரென்பதில் யாருக்கும் விப்ரதிபத்தியிருக்க நியாயமில்லை; அக்காலத்தில் ஆளவந்தார் சதுச்சாஸ்த்ர மஹாவித்வானும் ஸகல தர்சநார்த்த ப்ரவசந ஸமர்த்தராயுமெழுந்தருளியிருக்க, அவரிடத்திலே சென்றுசேர்ந்து வேதாந்த ச்ரவணம் பண்ணலாமாயிருக்க, சாஸ்த்ர விருத்தமாக ஏகதண்டியாயும் முண்டித மஸ்தகராயும்



காட்டுமன்னார் ஸன்னிதி ஆளவந்தார்

ாபவீத ரஹிதராயுமிருக்கிறவொரு விமதரிடத்திலே சென்று உபநிஷத்துக்களை யதிகரித்தது எதனாலே? (2) யாதவ ப்ரகாசர்க்கு ஸ்வாமி எண்ணெய் தேய்த்ததாகச் சொல்லப்படுகிறது. மஹாஜ்ஞாநாதிகரான அவர் ஜ்ஞானத்துக்குத் தக்கபடி அனுஷ்டாந சீலராயுமிருந்திருப்பரே: அவர் ஆச்ரம விருத்தமாக எண்ணெய் தேய்த்துக்கொள்வரா? அப்படி அவர் எண்ணெய் தேய்த்துக் கொண்டாலும் அவருடைய இனத்தார்கள் பலரிருக்க அந்தத் தொழிலை ஸ்வாமி செய்வானேன்? (3) மேலும், வேதாந்தார்த்த விசாரணைக்கு அதுவா ஸமயம்? அரையில் காஷாயமுமின்றிக்கே கௌபீநமாத்ர மணிந்துகொண்டு எண்ணெயும் தலையுமாயிருக்கிறகாலத்தில் வேதாந்தார்த்த விசாரத்திற்கு ஔசித்யமேது? (4) கப்யாஸ ச்ருதிக்கு யாதவ ப்ரகாசர் சொன்ன மர்க்கட ப்ருஷ்டப் பொருள் ஏற்கெனவே த்ரமிடாசார்யருடைய க்ரந்தத்திலிருக்கையாலே அதையநுவதித்து யாதவர் சொல்லியிருந்தால் அதற்காக உஷ்ணோஷ்ணமான கண்ணீர் பெருக ப்ரஸக்தியுண்டோ? (5) ஸ்வாமி யாதவ ப்ரகாசரிடத்தில் அந்தேவாஸியாயிருந்த காலத்தில் திவ்ய ப்ரபந்தங்களில் பரிசயம் செய்திருக்க ப்ரஸக்தியில்லாமையாலே, கம்பீராம்பஸ்ஸமுத்பூதேத்யாதிகளுக்கு திவ்ய ப்ரபந்தாநுகுண்யத்தை அப்போது திருவுள்ளம் பற்றியிருக்க ஔசித்யமில்லையே. திவ்யப்ரபந்தாநுகுணமாகவன்றோ அப்பொருளிருப்பது என்றிப்படி இக்காலத்தவர்கள் கேள்விகள் கேட்கிறார்கள்.



## 47. ஒவ்வொன்றாகவெடுத்துப் பரிஹாரமுணர்த்தல்

ஆளவந்தார் சதுச்சாஸ்த்ரங்களிலும் அத்விதீய மஹாவித்வானும் ஸகல தர்சநார்த்த ப்ரவசந ப்ரவீணராயு மெழுந்தருளியிருந்தாரென்பது வாஸ்தவம். இதில் யாதொரு விப்ரதிபத்தியுமில்லை. ஆனால் அவர் உத்தமாச்ரமியாகையாலே குத்ருஷ்டிகளின் க்ரந்தங்களை ப்ரவசநம் செய்யத்தகாதென்று விட்டிட்டவர். மேலும் ஸ்ரீராமாநுஜருடைய இளமைப் பருவத்தில் அவர் மிகவும் வயோவ்ருத்தராயிருந்தார். அவர் காஞ்சீபுரத்திற் கெழுந்தருளித் தேவப்பெருமாளுடைய திருமடைப்பள்ளி ப்ரதக்ஷிண வீதியிலே ஸ்வாமியை *ஆமுதல்வனிவனென்று கடாக்ஷித்து அநுக்ரஹித்தருளுகிற காலத்திலே ஸ்வாமி மிகவும் இளவயதிலிருந்தவர். இப்படிப்பட்ட காரண விசேஷங்களினாலே ஸ்வாமி ஆளவந்தாரிடம் அந்தேவாஸியாயிருக்க ப்ராப்தமாகவில்லை. யாதவப்ரகாசர் சிகாயஜ்ஞோபவீதாதிகளை வர்ஜித்தவராயிருந்தாலும் அவர்களுடைய மதாசாரப்படிக்கு அது கிடக்கட்டுமென்று ஸ்வாமி அந்த வேஷத்திலே கண் செலுத்தாமலிருந்தார். அக்காலத்தில் மதத்வேஷமென்பது தலையெடுத்தாடாமலிருந்தது. மதத்வேஷம்

கமிக முற்றின இக்காலத்திலுங்கூட மத பேதங்களேயும் வேஷ வேற்றுமை ளேயும் பாராமல் அவரவர்கள் யதேச்சமாக வித்யாக்ரஹணம்செய்து போருவதை ங்கும் காணுநின்றோம். மேலும், ஸ்வாமி யாதவ ப்ரகாசருடைய பாண்டித்ய ரபாவங்களேக் கண்டு அவரைத் திருத்திப் பணிகொள்ள வேணுமென்கிற ருவுள்ளத்தை முதலிலேயே கொண்டுவிட்டார். அதனாலேயே இரண்டு மூன்று டவை அவரைவிட்டுத் தாம் விலகநேர்ந்துங்கூட அவரோடொட்டிக்கொண்டே ருந்தார். யதிராஜஸப்ததியில் "ஸ்வபலாதுத்த்ருத யாதவப்ரகாச:" என்று க்காலத்திலேயே ஸ்பஷ்டமாகக் கூறப்பட்டிருத்தலால், யாதவப்ரகாசரை வாமி திருத்திப் பணிகொண்ட கதை அவிச்வஸநீயமென்று இக்காலத்திலே லர் சொல்லுவது உண்மைக்கு மாறுனது. அக்காலத்தில் யாதவர் ஸகலவிதத் லும் மஹா ப்ரக்க்யாதராயிருந்தவர். அவரை அடிமைப்படுத்திக்கொள்ளும் கத்தால் ஸ்ரீ வைஷ்ணவ தர்சனத்திற்கு மிக்க பெரும்புகழ் விளேக்கவேண்டியே வாமி அவரை அநுவர்த்தித்திருந்தாரென்பது தத்துவம். ஸ்வாமியின் ப்ரபாவமும் வருடைய ஸம்பந்தத்தாலே மிகமிக விளங்கிற்று. எங்ஙனேயென்னில்: ஜபுத்ரியை ப்ரஹ்ம ரக்ஷஸ்ஸு பிடித்து நலிந்துகொண்டிருக்கையில் அதை யோட்டுவதற்காக யாதவர் சிஷ்ய பரிவார ஸமேதராய் ராஜ க்ருஹத்திற்குச் சென்றவளவிலே அங்கு நடந்த கதை ஸுப்ரஸித்தமானது. "த்ரஸ்தோஹம் தவ ஸவிதோஷிதாதமுஷ்மாத் சேஷாம்சாஜ் ஜநமவிதும் க்ருதாவதாராத்" திவ்யஸூரி சரிதே] என்று சொல்லிற்று ப்ரஹ்மரக்ஷஸ்ஸு. "யாதவா! உனக்கு ான் அஞ்சமாட்டேன்; இவ்வுலகை ரக்ஷிக்க ஆதிசேஷாம்சமாய்த் திருவவதரித் ருப்பவரும் உன்னருகே நிற்பவருமான ஸ்ரீ ராமாநுஜர்க்கே நான் அஞ்சுவன்" ன்று சொல்லிற்று. விந்த்யாடவியிலிருந்து ஒரே ராத்ரியில் ஸத்யவ்ரத க்ஷேத்திரம் ந்து சேரும்படியான பெருமையும் யாதவப்ரகாசரோடு ஸம்பந்தித்திருந்த ாலத்தில் வெளியாயிற்று. இவ்வாறு அனேக ப்ரபாவாதிசயங்கள் வெளி ாவதற்குப் பாங்காகவும், இத்தகைய வைபவங்களேக் காட்டி யாதவரை டுபடுத்திக் கொள்வதற்காகவுமே ஸ்வாமி அவரை அநுவர்த்தித்திருந்தாரென்பர்.

## 48. அப்யஞ்ஜந சங்காபரிஹாரமுணர்த்துதல்

உத்தமாச்ரமியாய் அநுஷ்டாந சீலருமான யாதவர் எண்ணெய் தேய்த்துக் கொள்ளுகிற வழக்கம் வைத்துக் கொண்டிருப்பரோ வென்கிற சங்கை கச் சிறியது. "சரீரமாத்யம் கலு தர்மஸாதநம்" ஆகையாலே உத்தமாச்ரமிகளும் சரீர ரக்ஷணம் செய்து கொள்ள ப்ராப்தமாகிறது. நாட்டாரோடியல் வொழிந்து



வநேசரர்களாயிருப்பார் அப்யஞ்ஜந - வபந – விரேசநாதிகளே விட்டிருந்தாலும் ஸம்ஸாரிகளினிடையே போதுபோக்குவார்க்கு அவை அநுவர்த்தநீயங்களாகிற படியைக் காணு நின்றோம். உபாத்யாயர்க்குக் கைங்கர்யம் செய்வதில் சிஷ்யர் களுக்குக் குதூஹலமிருப்பது ஸஹஜமாகையாலே, அப்யஞ்ஜநத்தை அவர்க்கு ஸ்வாமி செய்தாரென்பதில் விப்ரதிபத்தி தோன்ற விரகில்லை. அப்யஞ்ஜந காலத்தில் வேதாந்த ப்ரவசநம் நடந்ததாகவோ வேதாந்தார்த்த விசாரம் நடந்த தாகவோ யாரும் சொல்லவில்லை. ப்ரஸக்தாநுப்ரஸக்தமான வார்த்தாலாபங்கள் எந்த ஸமயத்திலும் நேரலாம். ஏதோ வார்த்தையடைவில் எம்பெருமானுடைய திருக்கண்களேப்பற்றி யாதவர் ஹேயமாகச் சொல்லியிருக்கிறரென்பது தெரிய வருகிறது. 'பகவானுக்கு விக்ரஹமே கிடையாதென்றும், விக்ரஹமுள்ளதாகக் கொண்டாலும் அவனுக்கு மர்க்கட ப்ருஷ்டம் போன்ற கண்ணே யுள்ள தென்றும் ஏச்சான பேச்சு யாதவர் வாக்கில் வெளிவந்ததென்பதில் ஸந்தேஹ மில்லை. அது கேட்டுப் பொறுத்திருக்க மாட்டாமையினாலேயே ஸ்வாமிக்கு உஷ்ணோஷ்ணமான கண்ணீர் பெருகிற்று. மர்க்கட ப்ருஷ்டப் பொருள் த்ரமிடாசார்யருடைய க்ரந்தத்திலுமிருந்தாலும் அங்கிருக்கிறவிதம் வேறு; யாதவர் அதை அநுவதித்தவிதம் வேறு. *மச்சொடு மாளிகையேறி மாதர்கள் தம்மிடம் புக்குக் கச்சொடு பட்டைக் கிழித்துக் காம்பு துகிலவை கீறி நிச்சலும் தீமைகள் செய்வாய்* என்று ஆழ்வார்கள் திருவாக்கில் வருமவையே பிறர்வாக்கில் வந்தால் அஸஹ்யமாகிறபடியை அநுபவத்தில் காணுநின்றோமல்லவா? ... ❋

## 49. உடையவர் இயற்கையிலேயே திவ்யப்ரபந்த நிபுணர்

ஸ்வாமி யாதவரிடத்தில் அந்தேவாஸியாயிருந்தகாலத்தில் திவ்ய ப்ரபந்தங் களில் அவகாஹநமின்றிக்கே யிருந்தாரென்பது அவரை ஒரு ஸாமாந்ய புருஷராக நினைத்துச் சொல்லுகிற வார்த்தையாகும். பவிஷ்யதாசார்யராய் நம்மாழ்வா ருடைய திருவடிகளிலேயே மதுரகவிகளுக்கு ஸேவை ஸாதித்த ராமாநுஜர் அவதார புருஷராகையாலே இயற்கையிலேயே ஸகல வித்யா ஸம்பந்நர். கண்ணபிரான் ஸாந்தீபநிபக்கலிலே போயிருந்து சதுஷ்ஷஷ்டி கலைகளேயும் வாசித்தானென்றால் அதற்குமுன்னே அவையறியாதிருந்தானென்று பொருளோ? "அவரம் பவதோ ஜந்ம பரம் ஜந்ம விவஸ்வத:, கதமேதத் விஜாநீயாம் த்வமாதௌ ப்ரோக்தவாநிதி." என்று அர்ஜுநன் கேட்டதுபோலே இங்குங் கேட்கலாம். அங்கு வெளிவந்த உத்தரமே இங்கும் வெளிவரத் தகும். *கம்பீராம்பஸ் ஸமுத்

பூதேத்யாதி ஸூக்திகளாலே வெளியிடப்பட்ட அர்த்தங்கள் திவ்ய ப்ரபந்தங்களிலே மலிந்திருப்பது அபலபிக்கமுடியாமல் தேறியிருக்கிறது. இவ்வர்த்தங்களே ஸ்வாமி ஸூக்திகளில் காணப்படுகின்றனவென்றால் ஸ்வாமிக்கு திவ்ய ப்ரபந்தாவகாஹநம் ஜந்மஸித்தம் என்றே நினைக்கத்தக்கது. *ஆமுதல்வனென்கிற ஆளவந்தாருடைய மங்களாசாஸநம் எதுதான் செய்யாது? ஸ்வாமியினுடைய திவ்ய ப்ரபந்தாவகாஹநம் லோக விலக்ஷணமாக இருந்தபடியினாலன்றோ "ஏய்ந்த பெருங்கீர்த்தி யிராமானுச முனிதன்" "எங்கள் கதியே யிராமானுச முனியே" என்கிற லோக விலக்ஷணமான இரண்டு தனியன்கள் அவதரித்தன. ... ❁

## 50. நம்ஆழ்வார்களின் பெருமையில் ஆக்ஷேபம்

ப்ரபந்நஜந கூடஸ்தரான நம்மாழ்வாருடைய பெருமைக்கடலில் சில திவலைகளைப் பருகிக்களிக்க விரும்புகிறேன். பொய்கையார் பூதத்தார் பேயார் திருமழிசைப்பிரான் முதலான மற்றையாழ்வார்களும் தோன்றித் திவ்யப்பிரபந்தங்களையருளிச் செய்திருந்தாலும் ஒரு கால விசேஷத்திலே அத்திருமொழிகளெல்லாம் உலகில் பிரசாரமற்று மறைந்தனவாக, ஸ்ரீமந்நாதமுனிகளென்னும் பேராசிரியர் ஆழ்வார்திருநகரிக் கெழுந்தருளித் திருப்புளியாழ்வாரடியிலே நியமத்துடனிருந்து கண்ணிநுண் சிறுத்தாம்பென்கிற நம்மாழ்வார் துதியைப் பன்முறை ஆவ்ருத்திசெய்து யோகதசையிலே நம்மாழ்வாரை ஸாக்ஷாத்கரிக்கப் பெற்று அவருடைய திருவாக்கிலிருந்தே நாலாயிரம் பாசுரங்களையும் அருள் செய்யப் பெற்றாரென்பது ஸம்பிரதாயம். இதுபற்றியே "நாதனுக்கு நாலாயிர முரைத்தான் வாழியே" என்று நம்மாழ்வார் வாழ்த்தப்பட்டு வருகின்றார். இதுவே காரணமாகத்தான் ப்ரபந்நஜநகூடஸ்தரென்கிற விருதும் நம்மாழ்வார்க்கு நிகழ்ந்துவருகின்றது. இவரையே அவயவியாகவும் மற்றையாழ்வார்களை அவயவபூதர்களாகவும் பூருவர்கள் நிரூபித்துள்ளார்கள். அப்படியே இவருடைய திவ்ய ப்ரபந்தங்களையே அங்கியாகவும் மற்றையாழ்வார்களினருளிச்செயல்களை அங்கோபாங்கங்களாகவும் அறுதியிட்டுள்ளார்கள். இக்காலத்தில் சிலர் கூறுகிற வாதங்களை அடியேன் இங்கு எடுத்துக்காட்டி ஆஸ்திகர்கள் த்ருப்தியடையுமாறு ஸமாதானம் வெளியிட விரும்புகின்றேன். ஆனால், வழிப்போக்கர்களின் வாதங்களை நாம் பொருள்படுத்தவே தகாதென்றும் அவற்றுக்கு ஸமாதானங் கூறுவதென்கிற வழியிலேயே நுழையலாகாதென்றும் சில பெரியார் கருதுவதுண்டு. இப்படியே நாம் உபேக்ஷித்துப் போவதனால் நம்முடைய ஸம்பிரதாயத்



திற்கு நஷ்டமே மலிகின்றது. சிறிது ஆஸ்திக்யமுடையவர்களும் கலங்கித் தெளிவுபெறாமல் விபரீத புத்திகளைக்கொண்டு நசித்துப்போக ஹேதுவாகிறது.



ஸ்ரீ பெரும்பூதூர் பரமஹம்ஸ எம்பார்ஜீயர் ஸ்வாமி
(வர்த்தமானர்)

ஆகவே இக்காலத்தவர்களின் கூற்றுக்களை அநுவதித்து நாம் ஸமாதானம் தெரிவிக்கவேண்டியது மிக அவசியமென்றும், இது நமது ஸம்பிரதாயத்திற்கு உபகாரகமென்றும் திண்ணமாக வெண்ணுகிறேன். சிலருடைய வாதமென்னவென்றால், கால விசேஷங்களில் ஒவ்வொரு நாட்டிலும் பக்தர்கள் தோன்றியதுண்டு. அவர்கள் தங்களுடைய பக்தியினாலோ அல்லது தங்களுடைய பாண்டித்யத்தைக் காட்டவேண்டியோ தங்களுக்கமைந்த பாஷைகளில் பிரபந்தங்களைச் செய்திருப்பதுண்டு. தெலுங்கு கன்னடம் ஹிந்தீ குஜராதீ மராடீ முதலான பல பாஷைகளிலும் பல பக்தர்களால் பலபல பிரபந்தங்கள் இயற்றப்பட்டேயுள்ளன. அவைபோலவே ஆழ்வார்களின் பிரபந்தங்களுமாம். துளஸீதாஸர், தியாகராயர், கம்பர், ராமதாஸர் என்றிப்படி சொல்லப்படுகிற மஹான்களுக்கும் அவர்களது நூல்களுக்கும் எவ்வளவு கௌரவமுள்ளதோ அவ்வளவு கௌரவமேதான் ஆழ்வார்களுக்கும் அவர்களின் பிரபந்தங்களுக்கும் ஏற்கும். இவற்றை வேதங்களென்றும் வேதங்களிற்காட்டிலும் சிறந்தவையென்றும் கொள்வதுஎதற்காக?......என்றிப்படிப் பட்ட வாதங்கள் இக்காலத்தவர்களால் ஆங்காங்கு அட்டஹாஸமாக அறையப் படுகின்றன. இதற்குரிய ஸமாதானத்தை அடுத்த விண்ணப்பத்திற் காண்க. ❁

# 51. ஆக்ஷேபத்திற்கு ஸமாதான விண்ணப்பம்

எந்த விஷயத்திலும் நாஸ்திகர்களை எளிதில் த்ருப்திபடுத்த ஒருவராலு மாகாது. வேதங்கள் ப்ரமாணமென்பதை, இசைகின்றவர்கள் இசைந்து போகிறார் களேயல்லது இசையாதவர்கள் ஒருநாளும் இசைவதில்லை. பகவானுடைய உண்மையிலும் அவனது விபவாவதார அர்ச்சாவதாரங்களிலும் நம்பிக்கை யில்லாதவர்கள் உலகமெங்கும் நிறைந்திருக்கிறார்கள். அவர்களைத் தெளிவிக்க ஸர்வசக்தனான எம்பெருமானாலுமாகவில்லை. இயற்கையிலே ஆஸ்திகர்களா யுள்ளவர்களுக்கும் ஒரு கலக்கம் ஏற்பட்டால் அதைப்போக்க முடியுமேயல்லது "ஜ்ஞானலவதுர்விதக்த்தம் ப்ரஹ்மாபி நரம் ந ரஞ்ஜயதி" என்னப் பிறந்தவர்களைத் தெளிவிக்க ஆராலுமாகாது. ஸ்ரீ வைஷ்ணவ ஸந்ததியிலேயே ஜனித்து நல்ல தெளிவுடனிருந்து சில விதண்டாவாத ச்ரவணங்களாலே கலங்கினவர்களை மாத்திரம் நாம் தெளிவுபெறுத்தவல்லோம். ஸ்ரீ வைஷ்ணவகுலதிலகர்களான ஆழ்வார்கள் திவ்யப்ரபந்தமருளிச் செய்திருப்பதுபோலவே சைவர்களிலே நாயன் மார்கள் தேவாரத்திருமுறைகள் பணித்துள்ளார்களென்பது யாவருமறிந்ததே. அந்தப்ரபந்தங்களையாவது அவற்றை இயற்றிய பக்தர்களையாவது சிவபக்தர்களான பிராமணர்கள் யாரேனும் ஆதரிக்கிறார்களாவென்று பார்க்கவேணும். அன்றியும் வேதாந்த நிர்வாஹத்திற்கு அந்தப் பிரபந்தங்களைச் சிறிதேனும் துணைகொள்ளு கிறார்களோவென்றும் நோக்கவேணும். சிவாலயங்களில் அவற்றுக்குப் பாராயண நியதி ஏதேனும் வைத்திருக்கிறார்களோவென்றும் ஆராயவேணும். இவை யொன்றுமில்லையென்பது எங்கும் ப்ரத்யக்ஷம். யாரோ சில சதுர்த்தர்கள் அத்தேவாரங்களைப் பார்ப்பதும் பாடுவதுமாயிருக்கிறார்களேயல்லது பிராமணர்கள் அவற்றில் சிறிதும் கண் செலுத்துவதில்லை. ஆகவே வேதாந்த நிர்வாஹத்திற்கு அவற்றைத் துணைகொள்ள ப்ரஸக்தியேயில்லை. ஒரு சிவாலயத்திலும் அவற்றுக்குப் பாராயண நியதியொன்றும் காண்கின்றிலோம். இவ்விஷயங்களை இங்கு நாம் அவற்றின்மீது பழிப்பாக எழுதுவதாய் ஒருவரும் கருதலாகாது. உள்ள நிலைமையை உணர்த்துகின்றோமத்தனை. வியாஸ பராசர வால்மீகி ப்ரப்ருதிகளான மஹர்ஷிகள் இயற்றிய இதிஹாஸ புராணங்களுக்கும் தேவாலயங்களில் ஒரு சிறப்புக் கண்டிலோம். அந்த மஹர்ஷிகளில் ஒருவரையும் ஒரு ஸன்னிதியிலும் விக்ரஹ ப்ரதிஷ்டைசெய்து ஆராதநோத்ஸவாதிகள் நடத்துகிற முறையையும் காண்கின்றிலோம். துளஸீராமாயணம் கம்பராமாயணம் முதலிய மற்றுமுள்ள பிரபந்தங்களுக்கு எவ்வளவு மதிப்பு என்பதை உலகம் நன்கறிந்தேயுள்ளது.



இனி நம் ஆழ்வார்களினருளிச் செயல்களை யெடுத்துக்கொள்வோம். இவற்றில் இன்று நேற்று நாமும் நம்போன்றவர்களும் காட்டுகின்ற ஆதரம் கிடக்கட்டும். ப்ராஹ்மண குலதிலக ராய் வடமொழி வேத வேதாந்த வேதாங்கங் களில் ஆழ அவகா ஹித்து ஸகல சாஸ்த் ரார்த்தங்களையும் கையி லங்கு நெல்லிக்கனியா கக் கண்டவர்களான ஸ்ரீமந்நாதமுனிகள் ஆளவந்தார் தொடக்க மான ஆசாரியர்கள், ப்ரமாதாக்களில் ஆழ் வார்களுக்கு மேலில்லை யென்றும் ப்ரமாணங் களில் அருளிச் செயல் களுக்கு மேலில்லை யென்றும் கொண் டிருந்த கொள்கையில் யாருக்காவது விப்ரதி பத்தியுளதோ? ஸ்ரீமந் நாதமுனிகளின் வாழ் நாள் முழுவதும் திவ்ய ப்ரபந்தங்களைப் புநருத் தாரம் செய்வதிலேயே பெரும்பாலும் சென் றற்றதென்று காண்கி றோம். ஆளவந்தார்க்கு ஸமரான ஸம்ஸ்க்ருத



கோயில் மணவாள மாமுனிகள்

வித்வான்-சதுச்சாஸ்த்ரப்புலவர் *ந பூதோ ந பவிஷ்யதியென்று உலகமெல்லாம் போற்றுகின்றது. அப்படிப்பட்ட வைபவம் பொலிந்த ஆளவந்தார் த்ரிஜகத்

ப்ரஸித்தமான தம்முடைய ஸ்தோத்ரரத்னத்தில் ஆழ்வார்க்கு ஒரு ச்லோகந்தான் அருளிச்செய்துள்ளார்—*மாதா பிதா யுவதய: என்று. இந்த ச்லோகம் அமைந்திருக்குமமைப்பை என்சொல்லவல்லோம். எம்பெருமானுக்குக்கூட இப்படியொரு சுலோகம் அமையவில்லையே. ஆழ்வாருடைய திருநாமத்தைச் சொல்லாமலே *ஆத்யஸ்ய ந: குலபதே:* என்கிறாரே, இது எவ்வளவு ஆச்சரியமான பக்தியின் காரியம்! நம்முடைய ஆசார்ய பரம்பரையில் *லக்ஷ்மீநாதஸமாரம்பாமென்கிறபடியே முதல் ஸ்தானத்தில் எம்பெருமான் நிற்பதனால் *ஆத்யஸ்ய ந: குலபதே:* என்றது அப்பெருமானையே நோக்கியதாகுமென்று சிலர் கொள்ளவுங் கூடுமென்று சங்கித்து உடனே வகுளாபிராமம் என்றருளிச்செய்கிறார். மகிழ்மாலையணிந்த தெய்வத்தைப்பற்றி இங்கு நான் பேசுகின்றேனேயன்றித் திருத்துழாயணிந்த தெய்வத்தைப்பற்றியன்று—என்றன்றோ காட்டுகின்றார். நம்மாழ்வார் திருவாய்மொழியில் *சேலேய் கண்ணியரும் பெருஞ்செல்வமும் நன்மக்களும், மேலாத் தாய்தந்தையும் அவரேயினியாவாரே* என்று எம்பெருமான் விஷயத்தில் காட்டின துணிவையன்றோ ஆளவந்தார் ஆழ்வார் திறத்திலே காட்டியுள்ளார். அந்த ஸ்தோத்ரரத்னத்தில் மேலே ஒவ்வொரு சுலோகமும் ஆழ்வாரருளிச்செயல்களையேயன்றோ மிகமிகத் தழுவி அவதரித்துள்ளன. ஆளவந்தாருடைய காலம் இற்றைக்கு ஆயிரமாண்டுகட்கு முற்பட்டதென்பது நிர்விவாதம். அக்காலத்திலேயன்றோ ஆழ்வாருடையவும் அருளிச்செயல்களினுடையவும் மேன்மை ஊரும் நாடுமுலகமுமறியநின்றது. அக்காலத்திலேயே ஆழ்வார்களுக்கு ஸன்னிதிகளில் விக்ரஹ ப்ரதிஷ்டையும் நடைபெற்றிருந்ததாக நன்கு தெரிகின்றது. எங்ஙனேயென்னில், பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் "பராங்குசாத்யா: ப்ரதமே புமாம்ஸோ நிஷேதிவாம்ஸோ தச மாம் தயேரந்" என்றருளிச்செய்திருப்பது ஸ்பஷ்டம். இதனால் நம்மாழ்வார் முதலான ஆழ்வார்கள் பதின்மரும் அப்போது திருக்கோலங்கொண்டு எழுந்தருளியிருந்தமை கைகொள்கனியாகக் காண்கின்றது. பட்டர் உடையவர்காலத்தில் எழுந்தருளியிருந்தவரும் உடையவர் ஸ்தானத்தில் அபிஷிக்தருமாவர், ... ... ✻

## 52. கூரத்தாழ்வான் காட்டிய ஆழ்வார்பிரபாவம்

பட்டருடைய திருத்தகப்பனாரும் உடையவருடைய அந்தரங்க சிஷ்யருமான கூரத்தாழ்வான் தமது பஞ்சஸ்தவத்தில் நம்மாழ்வாரைப் போற்றியிருப்பதும் பரமாத்புதம். "த்ரைவித்யவ்ருத்த ஜநமூர்த்த விபூஷணம் யத் ஸம்பச்ச ஸாத்விக ஜநஸ்ய யதேவ நித்யம், யத்வா சரண்யமசரண்யஜநஸ்ய புண்யம் தத் ஸம்ச்ரயேம வகுலாபரணாங்க்ரியுக்மம்" என்றும் "பக்திப்ரபாவ பவதத்புத பாவபந்த ஸந்துக்ஷிதப்ரணயஸாரரஸௌகபூர்ண:, வேதார்த்தரத்ந நிதிரச்யுத திவ்யதாம ஜீயாத் பராங்குசபயோதிரஸீமபூமா" என்றுமுள்ள சுலோகங்களிற் காணும் பக்திவிசேஷம் வாய்கொண்டு வருணிக்கத்தக்கதோ? எம்பெருமானைப்பற்றிப் பேசிக்கொண்டுபோம்போதும் ஆழ்வாருடைய நினைவேயன்றோ ஆழ்வானுக்கும் பட்டருக்கும் இடையறாது செல்லுகின்றது. அதிமாநுஷஸ்தவத்தில் எம்பெருமானுடைய திருவடிகளை வருணிக்கிற ஆழ்வான் *ஸ்ரீமத் பராங்குச முநீந்த்ர மனோநிவாஸாத் தஜ்ஜாநுராகரஸமஜ்ஜநமஞ்ஜஸாப்ய, அத்யாபி அநாரத தநுத்தித ராகயோகம் ஸ்ரீரங்கராஜ சரணாம்புஜம்* என்கிறார். எம்பெருமானுடைய திருவடிகள் செந்தாமரைபோலச் சிவந்திருப்பது ஏனென்றால் நம்மாழ்வாருடைய திருவுள்ளத்திலேயே நெடுங்காலம் உறைந்திருந்து அங்குள்ள அநுராகரஸத்திலே ஊறிக்கிடந்தமையாலே [அநுராகத்தைச் சிவப்பாகவருணிப்பது கவிமரபு] செம்மை மாறாதவை என்கிறார். கச்சி யத்திகிரித் தேவப்பெருமாளைத் துதிக்கும்போது அவரை நோக்கிக் கேட்கிறார் கூரத்தாழ்வான்—"யச் ச மூர்த்தா சடாரே: ஹஸ்த்யத்ரேர் வா கிம் அதிஸுகதம் தேஷு பாதாப்ஜயோஸ் தே" என்று. அதாவது, தேவப்பெருமாளே! உம்முடைய திருவடிகளுக்கு நம்மாழ்வார் திருமுடிமீது வாஸம் செய்வது பாங்கா? அத்திகிரியுச்சியில் வாஸம் செய்வது பாங்கா? என்கிறார். இப்படியே பட்டரும் தம்முடைய ஸ்தவத்தில் "வடதளதேவகீஜடர வேதசிர: கமலாஸ்தந சடகோப வாக்வபுஷி ரங்கக்ருஹே சயிதம்" என்கிறார். இங்ஙனே ஒவ்வொரு ஆசார்யரும் ஆழ்வாரைப்பற்றி வாய்வெருவியிருக்கின்றமை பன்னியுரைக்குங்கால் பாரதமாம். வேதாந்தவாசிரியரின் ஈடுபாடும் வாசாமகோசரம். அவருடைய திருவாக்குக்களில் "ச்ருதீநாம் விச்ரமாயாலம் சடாரிம் தமுபாஸ்மஹே" என்றதொன்றே போதும். நஞ்சீயர், நம்பிள்ளை, பெரியவாச்சான்பிள்ளை, வடக்குத் திருவீதிப்பிள்ளை, பிள்ளை லோகாசாரியர், திருவாய்மொழிப்பிள்ளை, மணவாளமாமுனிகள் முதலான பேராசிரியர்களின் ஈடுபாடு விவரிக்கவேண்டியதோ? ஸ்ரீ வைஷ்ணவாசார்ய பரம்பரையிலே ஸேனைமுதலியார்க்கும் ஸ்ரீமந்நாதமுனிகட்கும் இடையில் நம்மாழ்வாரைச் சேர்த்து அநுஸந்தானம் பண்ணிவருகிற முறைமை இன்று நேற்றுத் தோன்றியதன்றே. இதெல்லாம் கூரத்தாழ்வான் முன்னான பூருவாசாரியர்களின் திருவாக்குகளிலேயே ஸந்தேஹவிபர்யயமற விளங்காநின்றனவே. அப்பரமாசார்யர்களின் காலத்திலேயே திவ்யப்ரபந்தங்களானவை தமிழ் வேதமாகவும் அர்ச்சாவதார வேதமாகவும் பாராட்டப்பெற்றுவந்த விஷயத்தில் இன்னமும் நிரூபிக்க வேண்டியதுண்டோ?

## 53. சடகோபரந்தாதியில் ஒன்றே.

கம்பரியற்றிய சடகோபரந்தாதியில் ஸாரமாக ஒன்றே கேண்மின். *அந்தமிலாமறையாயிரத்தாழ்ந்த வரும்பொருளைச் செந்தமிழாகத் திருத்திலனேல் நிலத்தேவர்களும், தந்தம் விழாவுமழகுமென்னும்* என்கிறார் கம்பர். திவ்யப்ரபந்தமவதரித்திராவிடில் ஸ்ரீவைஷ்ணவ ப்ராஹ்மணர்களின் கதி என்னாகுமோ! கோவில்களின் ஸ்திதி என்னாகுமோவென்று வயிறுபிடிக்கிறார் காண்மின். நமது இவ்வளவு நிருபணங்களினால்—வேதவேதாந்தப் புலவர்களும் சதுச்சாஸ்த்ர பாரங்கதர்களும் ப்ராஹ்மணோத்தமர்களுமான நம் பூருவாசாரியர்களும் பிறரும் ஒப்புமுயர்வுமறக் கௌரவித்த ஆழ்வார்களைப்பற்றியும் அருளிச்செயல்களைப்பற்றியும் சிலர் எது பேசினாலென்ன? அப்பேராசிரியர்களுடைய திருவடிகளையே தஞ்சமாகக்கொண்ட நமக்கு மனம்கலங்க ப்ரஸக்தியில்லை. அந்தப் பூருவாசாரியர்களையும் சேர்த்தே நாம் ஆக்ஷேபிக்கிறோமென்றும், அவர்களும் தவறாகவே கௌரவித்துவிட்டார்களென்றுதான் சொல்லுகிறோமென்றும் கூறுவார்களைப்பற்றி நமக்குப் பணியில்லை. நமது முன்னோர்களின் வழியிலே பக்தி விச்வாஸமுள்ள ஆஸ்திகர்களுக்கு இந்த நிருபணங்கள் அருமருந்தாகக் குறையில்லை. இவை நூற்றிலொருபங்கோ. ❋

## 54. பட்டருடைய அமுத மொழியொன்று.

பட்டர் ஒரு நாள் உபங்யாஸத்தில் *பரிவதி லீசனைப்பாடி* என்கிற திருவாய்மொழிப் பாசுரத்தில் "புரிவதுவும் புகைபூவே" என்ற விடத்தை யெடுத்துக் கொண்டு "இவ்விடத்தில் அகில்புகை யென்னாவது கருமுகைப்பூ என்னாவது சிறப்பித்துச் சொல்லாமையாலே ஏதேனும் ஒரு பூவும் எம்பெருமானுக்கு அமையும்; செதுகையிட்டுப் புகைக்கலாம்; கண்டகாலிப் பூவும் சூட்டலாம்" என்று ரஸமாக உபங்யஸித்தாராம். அதை நஞ்சீயர் கேட்டு "ந கண்டகாரிகாபுஷ்பம் தேவாய விநிவேதயேத்" [கண்ட காலிப் பூவை எம்பெருமானுக்குச் சாத்தலாகாது] என்று சாஸ்த்ரம் மறுத்திருக்க, இப்படி அருளிச் செய்யலாமோ? என்று கேட்டாராம். அதற்கு பட்டர் அருளிச்செய்த ரஸோக்தி;—"சாஸ்த்ரம் மறுத்தது மெய்தான்; கண்டகாலிப்பூ எம்பெருமானுக்கு ஆகாதென்று மறுத்ததன்று. அடியார்கள் அப்பூவைப் பறித்தால் கையில் முள் பாயுமே! என்று பக்தர்கள் பக்கல் தயையினால் சாஸ்த்ரம் நிஷேதித்ததே யன்றி எம்பெருமானுக்கு ஆகாத பூ எதுவுமில்லை" என்றாம். இதனால் எந்த புஷ்பத்தையும் சாத்தலாமென்றதாகாது. ... ... ... ... ❋



## 55. முதலியாண்டான் அமுத மொழியொன்று.

திருவாய்மொழியில் (2—9—2) *ஞானக்கை தா* என்ற விடத்து ஈட்டில் "எம்பார்க்கு ஆண்டானருளிச் செய்த வார்த்தையை ஸ்மரிப்பது" என்றுள்ளது. இதன் விவரணம் வருமாறு:—முதலியாண்டான் ஒருகால் திருநாராயணபுரத்தில் எழுந்தருளியிருக்கையில் அவருடைய சிஷ்யரான வொரு ஸ்ரீ வைஷ்ணவர் கோயிலிலே வந்து எம்பார் ஸந்நிதியிலே கைங்கரியம் பண்ணிக் கொண்டிருந்தார். அப்போது ஒருநாள் சில ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு எம்பார் திருவிலச்சினை ஸாதிக்கவிருக்கையில் இந்த ஸ்ரீ வைஷ்ணவர் தமக்கும் திருவிலச்சினை (சக்ராங்கனம்) ஸாதிக்கும்படி வேண்டினார். அப்போது எம்பார் 'உமக்கு விசேஷ ஸம்பந்தமுண்டோ?' என்று அவரைக் கேட்க, 'தேவரீருடைய ஸம்பந்தமே ஸம்பந்தம்' என்று அவர் விண்ணப்பம் செய்தாராம். அவ்வளவிலே எம்பார் இவர் முதலியாண்டானுடைய ஸ்ரீ பாதத்தவர் என்றறியாதே இவர்க்குப் பஞ்ச ஸம்ஸ்காரங்களைப் பண்ணி இவரைக்கொண்டு கைங்கரியங்களுங் கொண்டெழுந்தருளியிராநிற்கையில் முதலியாண்டானும் திரும்பிக் கோயிலிலே எழுந்தருள, அப்போது அந்த ஸ்ரீ வைஷ்ணவர் ஆசார்ய ப்ரேமத்தாலே ஆண்டானிடம் சென்று சேர, ஆண்டானும் முன்பு போலே இவரைக்கொண்டு வேண்டுங்காரியங்களைக் கொண்டருளியிருந்தார். அப்போது எம்பார் விசாரிக்கையில், அந்த ஸ்ரீ வைஷ்ணவர் ஏற்கெனவே ஆண்டானுடைய சிஷ்யர் என்பதை யறிந்து, ஆண்டானிடம் எழுந்தருளி 'கனக்க அபசாரப்பட்டேன். க்ஷமித்தருள வேணும்' என்றாராம். அப்போது ஆண்டான் எம்பாருடைய திருவுள்ளத்தில் க்லேசத்தையறிந்து எம்பாரை நோக்கி அருளிச்செய்த வார்த்தை:—"கிணற்றிலே விழுந்த ஒருவனுக்கு இரண்டுபேர் கைகொடுத்தால் எடுக்குமவர்களுக்குமெளிதாய் ஏறுமவனுக்குமெளிதாயிருக்குமிறே. அப்படியேயாகிறது"—என்றாம். இங்குக் கைகொடுப்பதாவது ஞானமளிப்பது. ஸம்ஸார ஸகாரத்தில் அழுந்தினவர்களுக்கு இரண்டு ஆசாரியர்கள் ஞானக்கை கொடுப்பது நல்லதே யன்றித் தீயதன்றே; நானும் கைகொடுத்து நீரும் கைகொடுத்தால் இதில் என்ன பிழை? ஏதுக்கு வருந்துகிறீர்; நன்மை செய்தீரே யொழியத் தீமை யொன்றும் செய்திலீரே" என்பதாக ஆண்டானுடைய திருவுள்ளம். ... ... ... ... ... ❋

## 56. அஸ்மத்குல கூடஸ்தர் பெருமைச் சுருக்கம்.

மாஞானிகளால் இருள் தருமாஞாலமென வழங்கப்படும் இவ்விபூதியில் வகுளபூஷணபாஸ்கர—லோகதிவாகராதிகளான ஆழ்வார்களும் ஸ்ரீ ராமாநுஜ திவாகராதிகளான ஆசாரியர்களும் திருவவதரித்துக் கலியிருளையும் அகவிருளையும் ஸதுபதேச ஸத்க்ரந்த நிர்மாணாதிகளாலே தொலைத்திருக்கச் செய்தேயும், பண்டு ஓர் ஆசார்யராலும் ஆகாத காரியத்தைப் பிள்ளைலோகாசாரியர் மூலமாகச் செய்வித்தருளத் திருவுள்ளம் பற்றிய எம்பெருமான் ஸம்ஸார போகி ஸந்தஷ்ட ஜீவ ஜீவாதுவான அம்மஹாசார்யரையும் அவருடைய திருத்தம்பியாரையும் திருவவதரிப்பித்து அவ்விருவர் முகேந அரிய பெரிய திவ்ய ஸூக்திகளை அவதரிப்பித்தருளினான். வ்யாஸ மஹர்ஷி ப்ரஹ்ம ஸூத்ரமாகிற சாரீரகமீமாம்ஸையை இயற்றியிருந்தும், பாஷ்யமின்றிக்கே அதன் பொருள் அறிவரிதென்று கருதிய கடல் வண்ணன்பகவத் பாஷ்யகாரரான எம்பெருமானாரைத் திருவவதரிப்பித்தருளினாற் போலே, அவரையே மீண்டும் மணவாளமாமுனிகளாகத் திருவவதரிப்பித்து முந்தின திருவவதாரத்தில் சேஷித்த க்ருத்யங்களை மாமுனிகளைக்கொண்டு நிறைவேற்றுவித்தான் ஸத்யஸங்கல்பன். மணவாள மாமுனிகளைப்போன்ற ஆசார்யர் முன்பு அவதரித்ததுமில்லை. இனி அவதரிக்கப்போகிறதுமில்லை. "உபமாநோபமேயத்வம் யதேகஸ்யைவ வஸ்துந:" என்னும்படியான அநந்வயாலங்காரத்திற்கு ஆசார்ய வர்க்கத்தில் லக்ஷ்யம் காட்டவேணுமானால் மணவாள மாமுனிகளையன்றி வேறொருவரையும்காட்டவொண்ணாதென்பது நிர்மத்ஸர ஸகல விவேகிஸமுதய ஸம்மதமானதே. மாமுனிகள் திருவரங்கம் பெரியகோயிலிலே அழகிய மணவாளனும் அடிபணிந்து அர்த்த விசேஷங்கள் கேட்கும்படி விலக்ஷண சிஷ்யஸம்ருத்தியுடன் வாழ்ந்தருளுங்காலத்திலே ஸ்ரீ காஞ்சீபுரியிலே திருத்தண்காவில் திருவவதரித்து ஸ்ரீமந்நயன வரதாசார்ய ஸன்னிதியிலே அத்யாத்ம வித்யாக்ரஹணம் பண்ணி ப்ரதிவாதிபயங்கரரென்று விருதுபெற்றவரும் பிள்ளை லோகாசார்யருடைய பித்ருவ்ய பௌத்ரருமான அண்ணா திருமலையில் எழுந்தருளியிருந்து திருவேங்கடமுடையானுக்குத் திருமஞ்சன கைங்கர்யம் செய்துகொண்டிருக்கையில், நம்பெருமாள் ஸன்னிதியில் நின்றும் யாத்ருச்சிகமாக அங்குவந்த ஸ்ரீ வைஷ்ணவர்கள் முகமாகக் கோயிலிலே வாழ்ந்தருளும் மணவாள மாமுனிகளின் அப்ரதிம வைபவங்களைக் கேட்டு அவர் திருவடிகளிலே பணிந்து ஸத் ஸம்ப்ரதாயார்த்த விசேஷங்களை யுணர்ந்து உய்யக் கருதி, அன்றே திருவேங்கடமுடையான் பக்கலில் விடைபெற்றுக்கொண்டு, பயணகதியிலே கோயிலேறவந்து சேர்ந்து மணவாள மாமுனிகள் திருவடிகளிலே ஸகுடும்பமாக ஆச்ரயித்துத் திருவிலச்சினை



பெற்று, "வரவரமுநிதாம் யாதே யதிராஜே ஸகல லோகஜீவாதௌ, ஸ்ரீவாதிபீகரோபூத் ஸ்ரீமாந் ஸ்ரீவத்ஸ சிஹ்நமிச்ரோபி,* என்கிறபடியே எம்பெருமானார்க்குக் கூரத்தாழ்வான்போலே மாமுனிகளுக்கு சிஷ்யாக்ரேஸரராய் உசாத்துணையாயிருந்து வாழுங்காலத்திலே ஆசார்யப்ரேமம் கனத்து வடமொழி தென்மொழிகளிலே மாமுனிகள் விஷயமாகச் சில ஸ்தோத்ர க்ரந்தங்களை விண்ணப்பம்செய்ய விரும்பி சப்தபுஷ்டி அர்த்தபுஷ்டி முதலானவற்ருல் கவிகளுக்கும் வித்வான்களுக்கும் பக்தர்களுக்கும் கர்ணாம்ருதமாய் விளங்குகின்ற சில துதிநூல்களைச் செய்தருளினர். மாமுனிகளின் நியமனத்தினுல் ஸுப்ரபாத ஸ்துதிகள் பலவும் செய்தருளினர்.

## 57. ஆழ்வாருடைய யாத்ருச்சிக ஸுக்ருத விமர்சம்

ஆசார்ய ஹ்ருதயம் இரண்டாம் ப்ரகரணத்தில் ஆழ்வார்க்கு விளைந்துள்ள பரமபக்தியானது பகவந் நிர்ஹேதுக க்ருபையினுலத்தனையல்லது கர்மஜ்ஞான பக்திகளாகிற ஸாதனங்களின் அநுஷ்டானத்திலைன்று என்பதைப் பல சூர்ணைகளினுல் பரக்க உபபாதித்து வருகிருர் மூலகாரர்; யாத்ருச்சிகம் ப்ராஸங்கிகம் ஆநுஷங்கிகம் என்று சொல்லப்படுகிற ஸுக்ருதாபாஸங்கள் கூட ஆழ்வாரிடமில்லையென்று பரக்க உபபாதித்தார். (107) "முந்நீர் வாழ்ந்தார் சூட்டுங் கோவை யாழி யென்கிற ஸாக்ஷாத்க்ருத ஸ்வபர வ்ருத்தாந்தர்க்கு யாத்ருச்சிகாதிகள் உண்டாகில் தோன்றும்" என்னும் சூர்ணை முக்கியமாகக் காணத்தக்கது. ஒன்றுவிடாமல் எல்லாவற்றையும் ஸாக்ஷாத்கரித்து அருளிச் செய்திருக்கிற ஆழ்வார்க்கு அஜ்ஞாதமான தொன்றுமில்லாமையாலே தம்மை எம்பெருமான் அங்கீகரிப்பதற்கு மூலமான ஏதேனுமொரு ஸுக்ருதமுண்டாகில் அது ஆழ்வாருடைய புத்திக்கு எட்டாமலிராது; எட்டியேயிருக்கும். அதை அருளிச்செய்யாது விடமாட்டாராழ்வார் ;


சதுஷ்ஷஷ்டி கலா வல்லபஜீயர் ஸ்வாமி காஞ்சீ
(அடியேனுடைய மாதாமஹர்)

அப்படியருளிச்செய்யக் காணாமையாலும், கேவல நிர்ஹேதுக பகவத் ப்ரஸாதத்தையே வெளியிடவல்ல ஸ்ரீஸூக்திகளையே ஆழ்வாரருளிச் செய்திருக்கக் காண்கையாலும் யாத்ருச்சிகம் முதலான ஆபாஸ ஸுக்ருதங்களும் இவர்க்கு இல்லையென்று நிரூபிக்கப்பட்டதாயிற்று. இதற்குமேல் மூன்று சூர்ணைகளுக்கு அப்பால் "மாதவன் மலை நீர் நிழலென்று ஏறிடுமது வ்யாவ்ருத்த்யுக்தி, அந்யார்த்தம் அபுத்திபூர்வம், அவிஹிதம், பலவிஸத்ருசம் பலாந்தரஹேது" என்ற சூர்ணை அருளிச்செய்யப்பட்டுள்ளது. இத்தால் என்ன தெரிவிக்கப்படுகிறதென்றால், ஆழ்வாருடைய இரண்டு பாசுரங்களை எடுத்துக் காட்டி இவர்க்கு யாத்ருச்சிக ஸுக்ருதமுண்டு என்று தெரிவிக்கப்படுகிறது. எங்ஙனேயென்னில்; திருவாய்மொழியில் (2-7-3) *மாதவனென்றதே கொண்டு என்னை யினி யிப்பாற்பட்டது, யாதவங்களும் சேர்கொடேனென்று என்னுள் புகுந்திருந்து* என்கிற பாசுரத்திலே மாதவன் என்கிற திருநாமத்தைத் தாம் அஹ்ருதயமாகச் சொன்னதாகவும், அவ்வளவிலே இத்தையே பெரிய ஹேதுவாகக்கொண்டு எம்பெருமான் தம்மை விஷயீகரித்துத் தம்முள்ளே புகுந்திருந்து ஸகல கர்மங்களையும் போக்கினதாகவும் சொல்லப்படுகிறது. மேலே *திருமாலிருஞ் சோலைமலை யென்றேனென்னத் திருமால் வந்து என்னெஞ்சு நிறையப் புகுந்தான்* (10-7-1) என்கிற பாசுரத்திலே—திருமாலிருஞ்சோலைமலை யென்று அவனுடைய திவ்யதேசத்தின் பெயரை அஹ்ருதயமாகத் தாம் சொன்னதாகவும், அவ்வளவிலே அவன் தானுகந்து வர்த்திக்கிற திருமலையின் பெயரை விரும்பிச் சொன்னதாகக்கொண்டு பிராட்டியோடே கூடவந்து தம்முள்ளே பரிபூர்ணமாகப் புகுந்ததாகவும் சொல்லிற்று. ஆக இவ்விரண்டு பாசுரங்களையும் மூலகாரர் எடுத்துக்காட்டி இப்பாசுரங்களிற் சொன்ன மாதவன் மலையென்னு முக்திகளுக்கு அஹேதுத்வத்தை யருளிச் செய்கிறார். மேலே யெடுத்துக்காட்டிய இரண்டு பாசுரங்களினாலும் ஆழ்வார்க்கு யாத்ருச்சிகம் முதலான ஸுக்ருதமுண்டு என்று காட்டப்பட்டுவிட்டதல்லவா? 107 சூர்ணையில் யாத்ருச்சிகாதிகள் இல்லையென்று ஸாதித்துவிட்டு 111 சூர்ணையில் அவை யிருப்பதாகக் காட்டினது பரஸ்பர வ்யாஹதமென்று சங்கிக்க நேரும். ஆனால் இந்த சங்கைக்கு இடமில்லை என்றதுவும் இங்கே மாதவறிடத்தக்க யாத்ருச்சிகாதிகள்தான் பலவுமுண்டாகையாலே அத்யுத்கடங்களாய் மஹாபலத்துக்கு உறுப்பாய் வந்து விழுமவையும் ஆபாஸங்களா யிருக்குமவையுமுண்டாகையாலே அத்யுத்கடங்களாய் அவனுக்கு ஹேதுவாகக்கொள்ளலாம்படி யிருக்குமவற்றைக் கீழே சொல்லிற்றாக்கி, ஆபாஸங்களாய் அவனேரோபித்துக் கொள்ளத்தக்கவற்றை இங்கே சொல்லிற்றென்று கொள்ளுமளவில் விரோதமில்லை" என்று மணவாள மாமுனிகளுணர்த்திய தத்துவம். ... ❁



# 58. ஓர் இன்சுவைமிக்க வாக்கு

இந்த விண்ணப்பமாலையை அடியேன் மாசித் திருவோணத்தன்று எழுதத் தொடங்கினதாக முதலில் விண்ணப்பம் செய்திருக்கிறேன். அடியேன் ஏககாலத்தில் பல காரியங்கள் வைத்துக்கொண்டு செய்பவனாதலாலும், 30-3-66 தேதிக்குள் இதை அச்சிட்டு முடித்தால் போதுமென்றிருப்பதனாலும் இடையிடையில் தாமதித்து பங்குனித்திருவோணமாகிய இன்று (18-3-66) வெள்ளிக்கிழமையிரவு 10 மணிக்கு இந்த விண்ணப்பமெழுதுகின்றேன். நேற்று மாசிமாதம் 29உ (12-3-66) முதல் தேவப்பெருமாளுக்குப் பல்லவோத்ஸவம் நடந்துவந்து இன்று (ஏழாவது நாளில்) ஸமாப்தியாயிற்று. இன்றைய இயல் கோஷ்டியில் நாச்சியார் திருமொழியில் *நாமமாயிரமேத்தநின்ற* என்கிற திருமொழியைப் பெருமாள் திருச்செவிசாத்தியருள ப்ராப்தமாயிற்று.



இயல்சாற்றும்போது *சீதைவாயமுதமுண்டாய்* என்கிற பாசுரம் ஸேவிப்பதுதானே க்ரமப்ராப்தம். அது ஸேவிக்கும்போது அதில் மூன்றாமடி "வேதவாய்த் தொழிலார்கள்வாழ் வில்லிபுத்தூர் மன் விட்டுசித்தன்தன்" என்னுமிடத்தில் அருகேயெழுந்தருளியிருந்த ஸ்ரீஉவே. திருமலை ஈச்சம்பாடி வரதாசாரியர் ஸ்வாமி ஓர் இன்சுவைமிக்க வாக்கையுரைத்தனர்; அது ரஸிக்கத்தக்கதா யிருந்தபடியால் அதனை இங்குக் குறிப்பிட்டுச் சிறிது விவரிக்கிறேன். * "வேதவாய்த் தொழிலார்கள் என்று இதை ஒரு தொழிலாக ஆண்டாள் திருவுள்ளம் பற்றினாள் போலும்" என்று அந்த ஸ்வாமி ஸாதித்தது. இதிலுள்ள சுவையைக் கேண்மின். வேதமோதினவர்களை ஆழ்வார்கள் பலவிடங்களில் பலவாறு நிர்தேசிக்கக் காண்கிறோம். *வேதம் வல்லார்களைக் கொண்டு* என்கிறார் நம்மாழ்வார். *வேதம் பயின்றுவாழ் திருக்கோட்டியூர்* என்கிறார் பெரியாழ்வார். *நால்வேத மாறங்கம் வல்லவந்தணர்* என்கிறார் திருமங்கையாழ்வார். இப்படியாக அருளிச்செய்து வருகிறமுறையில் *வேதவாய்த் தொழிலார்கள்* என்று ஆண்டாளருளிச்செய்வது விலக்ஷணமாகவேயுள்ளது. திருமங்கையாழ்வார் திருவெழுகூற்றிருக்கையில் *அறுதொழிலந்தணர் வணங்கும்* என்று ஷட்கர்ம

ரதர்களான பிராமணர்களை அறு தொழிலந்தணரென்கிற சொல்லால் கூறியுள்ளார். இவ்வாழ்வார்தாமே பெரிய திருமொழியில் "நாத் தொழில் மறைவல்லார்கள்......தீத் தொழில் பயிலுநாங்கூர்" என்று ஒன்றுக்கொன்று ஏற்ற இரண்டு தொழில்களை யருளிச்செய்கிறார். அதாவது நாத்தொழிலான மறைக்கு ஏற்றது தீத்தொழிலென்று காட்டுகிறபடிபோலும். திருமழிசைப்பிரான் *தொழிலெனக்குத் தொல்லைமால் தன்னுமை மேத்த* என்று தாம் ஒரு தொழிலை மேற்கொண்டதாக அருளிச்செய்திருப்பதுமுண்டு. எம்பெருமானுக்கு அடிமை செய்வதை ஒரு தொழிலாகவைத்து "அடிமைத்தொழில் பூண்டாயே" என்று ஒருகால் சொன்னாற்போலே ஒன்பதின்கால் சொல்லுகிறார் திருமங்கையாழ்வார். இங்ஙனே திவ்வியப்பிரபந்தங்களில் தொழிற்சொல் மலிந்திருந்தாலும் ஆண்டாள் *வேதவாய்த் தொழிலார்கள்* என்றருளிச்செய்ததில் சிறிது ஆராய்ச்சி செலுத்த வேணும். பெரியாழ்வார் திருமொழியைக் கண்டபாடமாகக் கொண்டவள் ஆண்டாள். அதில் அவ்வாழ்வார் *வேதப் பயன் கொள்ளவல்ல விட்டுசித்தன்* என்று தம்மை விசேஷிக்கிறார். இதற்கு மணவாள மாமுனிகளின் வியாக்கியானம் "மங்களாசாஸனத்தையே வேத தாத்பர்யமாகக் கொள்ளவல்ல பெரியாழ்வார்" என்று. உண்மையில் வேதமோதுவதற்குப் பலன் எம்பெருமானுக்கு மங்களாசாஸனம் செய்கையேயன்றோ. திருவாய்மொழியில் (1-10-11) *தணிவிலர் கற்பரேல் கல்வி வாயுமே* என்றவிடத்திலும் "கல்விக்கு வாய்ப்பாவது கைங்கர்ய பர்யந்தமாகை" என்று வியாக்கியானித்தருளக் காண்கிறோம். வேதப்பயன் கொள்ளவல்ல விட்டுசித்தர்வாழ்கிற ஸ்ரீவில்லிபுத்தூரிலே வேதவாய்த் தொழிலாளர்களும் வாழ்கிறார்களென்று பேசினபடி. வேதமோதுதலை மங்களாசாஸனத்தில் விநியோகியாதே கேவலம் தொழிலாகமட்டும் கொண்டவர்கள் என்கிற கருத்துத் தொனிக்கின்றது. வானமாமலைப் பதிகத்தில் "செந்தொழிலவர் வேத வேள்வியறா" என்றவிடத்தில் வெறுந்தொழிலென்னாதே செந்தொழிலென்கையாலே கைங்கர்ய பரர்களென்று ஆசார்யர்கள் அர்த்தமருளிச் செய்கைக்குப் பாங்காயிருந்தது. வேதவாய்த்தொழிலார்களென்ற ப்ரக்ருத ஸ்தலத்தில் அப்படியில்லையே. இதைக் கொண்டு ஒரு ரஸோக்தி சொல்லுவதற்கு ஔசித்யமுள்ளதென்று அடியேன் மிகவும் ரஸித்தேன். இந்த ஸம்வாதத்திற்கு நிலமான ஸ்ரீ வரதாசார்ய ஸ்வாமியைப் பற்றிக் கீழே (பக்கம் 6ல்) எட்டாவது விண்ணப்பத்தில் சுருக்கமாக ப்ரஸ்தாவித்திருப்பதை நினைப்பூட்டி நிற்கிறேன். ... ... ❋



## 59. ஆழ்வார்களின் ப்ரபத்தி எவ்விடத்திலே?

சாஸ்திரங்களில் விதிக்கப்பட்டிருக்கிற ஜ்யோதிஷ்டோமம் முதலிய கருமங்களுக்குப் பல நியமங்கள் ஏற்பட்டிருக்கின்றது. புண்ணிய க்ஷேத்ரத்தில் செய்ய வேணும், வேறிடத்தில் செய்யலாகாது என்கிற தேசநியமமும், வஸந்தாதி காலங்களிலே செய்ய வேணும், மற்ற காலங்களிலாகாது என்கிற காலநியமமும், ஸ்நானம் பாதப்ரக்ஷாளநம் முதலியவற்றைச் செய்த பின் செய்யவேணும். வேறு படியாகச் செய்யக்கூடாதென்கிற ப்ரகார நியமமும். த்ரைவர்ணிகரா யிருக்க வேணும், அத்ரைவர்ணிகர் கூடாதென்கிற அதிகாரி நியமமும், இன்ன பலனைத் தான் இது தரும், மற்ற பலனைத் தாராதென்கிற பல நியமமுமாகிற இந்த நியமங்களெல்லாம் ஜ்யோதிஷ்டோமம் முதலிய கருமங்களுக்கு உள்ளனவேயன்றி சரணாகதிக்கு இந்த நியமங்களொன்றுமில்லை; இன்ன விஷயத்திலே செய்யவேணுமென்கிற விஷய நியமமொன்று மாத்திரமே இதற்குள்ளது. அதாவது—பரத்வம் முதலிய ஐந்தினுள்ளும் ஸௌலப்யாதிகுணங்கள் பரிபூர்ணமாயிருக்கப்பெற்ற இடமே விஷயமாகை. ஸ்வதஸ் ஸர்வஜ்ஞனான எம்பெருமான் தானே சொல்லப் புகுந்தாலும் சொல்லித் தலைக்கட்ட முடியாதபடி குணங்கள் பூர்த்தியாயிருப்பது அர்ச்சாவதாரத்திலே யாகையாலே ஆழ்வார்கள் சரணாகதியை அர்ச்சாவதாரத்தில் செய்தருளினார்கள். [ஸ்ரீவசன பூஷணம்] ... ... ❋

## 60. பாட்டுத்தோறும் திருவடிப்பேச்சின் அதிசயம்.

திருவாய்மொழி யாயிரத்தில் நூறு பதிகங்களன்றோவுள்ளன. அவற்றுள் ஒரு பதிகத்திற்கும் அமையாத அதிசயமொன்று *உலகமுண்ட பெருவாயா* என்னும் பதிகத்திற்கு அமைந்துள்ளது. அஃதாவது என்னென்னில்; ஒவ்வொரு பாட்டிலும் விடாமல் திருவடியைப்பற்றின சொல் அமைந்திருப்பது நோக்கத் தக்கது. முதற்பாட்டில் *குலதொ லடியே னுனபாதம் கூடுமாறு கூறாயே. 2. *ஆறாவன்பி னடியேன் உன்னடி சேர் வண்ண மருளாயே. 3. அண்ணலே! உன்னடி சேர அடியேற்கு ஆவாவென்னாயே. 4. *பூவார் கழல்க ளருவினையேன் பொருந்துமாறு புணராயே. 5. *திணரார் சார்ங்கத் துனபாதம் சேர்வ தடியே னெந்நாளே. 6. *மெய்ந்நா னெய்தி யெந்நா ளுன்னடிக்க ளடியேன் மேவுவதே. 7. *பொடியார் பொழுது முனபாதங் காண நோலாதாற்றேனே. 8. *நோலா தாற்றே னுனபாதங் காண. 9. *அந்தோ! அடியே னுனபாதம் அகலகில்லே னிறையுமே. 10. புகலொன்றில்லா வடியே னுன்னடிக்கீழமர்ந்து புகுந்தேனே.

11. *அடிக்கீழமர்ந்து புகுந்து அடியீர் வாழ்மின். ஆக இப்பதிகம் முழுவதும்
திருவடி ஸம்பந்தம் இடையறாது வரப்பெற்றதென்னு மதிசயம் குறிக்கொள்ளத்
தக்கது. இதற்கொரு முக்கியமான கமகமுண்டு. அதாவது, "முமுக்ஷுவுக்கறிய
வேண்டும் ரஹஸ்யம் மூன்று" என்னப்பட்ட திருமந்த்ரம் த்வயம் சரம ச்லோக
மாகிற மூன்று ரஹஸ்யங்களில், திருமந்த்ரத்திலும் சரம ச்லோகத்திலும் திருவடி
யைப்பற்றின ப்ரஸ்தாவமே கிடையாது; அஃதுள்ளது மந்த்ரரத்னமென்கிற
த்வயத்தில் மட்டுமேயாம் அந்த த்வயத்தின் அர்த்தாநுஸந்தான பரமான
*இவ்வுலகமுண்ட பதிகத்தில் திருவடியின் ப்ராதாந்யத்தை ஆழ்வார் இங்ஙனே
காட்டியருளினது சாலச் சிறக்கும். அன்றியும், மற்ற இரண்டு ரஹஸ்யங்களிலும்
பிராட்டியின் ஸம்பந்தமும் ஸ்பஷ்டமாகத் தோற்றிற்றில்லை. அக்குறையும் தீர
த்வயத்தில் இரண்டு கண்டங்களினுடையவும் தொடக்கத்தில் ஸ்ரீ சப்த விந்யாஸ
முள்ளது; அதற்குச் சேர *அகலகில்லேனிறையுமென் றலர்மேல் மங்கை யுறை
மார்பா* என்றருளிச் செய்தாராழ்வார். அதற்கிணங்கத் திருவாய்மொழி நூற்றந்
தாதிப் பாசுரத்திலும் "அலர்மகளை முன்னிட்டு" என்றருளிச் செய்யலாயிற்று. ❋

## 61. காலக்ஷேபக்ரமங்களைப்பற்றின விண்ணப்பம்.

வடமொழியில் வழங்கும் காலக்ஷேபமென்கிற சொல்லுக்குத் தமிழில்
போதுபோக்கென்பதுதான் பொருள். ஸ்ரீ பாஷ்யம் ஸேவித்தல் பகவத் விஷயம்
ஸேவித்தல் என்று சொல்லவேண்டிய ஸ்தானத்தில் ஸ்ரீ பாஷ்ய காலக்ஷேபம்
பகவத் விஷய காலக்ஷேபம் என்றே தொன்றுதொட்டுப் பெரியார்கள் வழங்கி
வருகிறார்கள். காலக்ஷேபமென்கிற சொல்லுக்கு 'ஸேவிப்பது' என்கிற பொருள்
எப்படி கூடுமென்றும், இந்த ப்ரயோகம் எப்படி பொருந்துமென்றும் சில
வ்யுத்பந்நர்கள் விமர்சிப்பதுண்டு. ஸ்ரீ பாஷ்ய காலக்ஷேபமென்றால் ஸ்ரீ பாஷ்யத்
தைக்கொண்டு போதுபோக்குவது என்றுதான் பொருள். ஸ்ரீ ராமாயண கால
க்ஷேபம் ஸ்ரீவசநபூஷண காலக்ஷேபம் இத்யாதிகளான ஸகல வ்யவஹாரங்
களுக்கும் இதுதான் பொருள். இப்படி வ்யவஹரிக்கத் தொடங்கின பெரியார்
களின் திருவுள்ளம் யாதெனில், விஷயங்களை க்ரஹிக்கிறோமோ இல்லையோ அது
எப்படியாயினுமாகுக; நல்லபடியாகப் போதைப் போக்கினால் போதும்–என்பதே
யாம். ஆர்த்தியில் "முன்னவராம் நம் குரவர் மொழிகளுள்ளப் பெற்றோம் முழுது
நமக்கவை பொழுதுபோக்காகப் பெற்றோம்" என்று மணவாளமாமுனிகள்
பணித்தபடியே பெரியோர்களுடைய ஸ்ரீஸூக்திகளால் போதுபோக்குவதென்பது
ஜன்மாந்தர ஸஹஸ்ர நற்றவப் பயன். *காவ்ய சாஸ்த்ர விநோதேந காலோ கச்சதி



தீமதாம். அந்யேஷாம் து மநுஷ்யாணாம் நித்ரயா கலஹேந வா* என்கிற ச்லோக
மொன்று யாவருமறிந்ததே. ஆங்காங்கு அவரவர்கள் தம்தம் போதுகளை எப்படி
போக்கி வருகிறார்களென்று நாற்புறமும் பார்ப்போமாயின், உத்யோகஸ்தர்கள்
வியாபாரிகள், பயிர்த் தொழிலாளர்கள், வக்கீல்கள் முதலானோருடைய போது
போக்குகள் ஒவ்வொரு விதமாக நிகழ்ந்து வருகின்றன. சிலபேர்கள் தேச
வ்ருத்தாந்தப் பத்திரிகைகளைப் படித்தல், நாவல்களைப் படித்தல் சூது சதுரங்க
மாடுதல்......முதலிய காரியங்களிலே காலத்தைச் செலவிடுகிறார்கள். இது தவிர,
நால்வர் எண்மர் பதின்மராகக் கூடி ஒரு காசுக்கு முதவாத வம்பு வார்த்தைகளை
வெகு அட்டஹாஸங்களுடன் பேசிக்கொண்டும், தங்கள் திரளிலே அந்வயிக்கப்
பெறாமல் சுவடிகளிலும் பகவத் பாகவத பரிசர்யைகளிலும் போதுபோக்கிவரும்
மஹான்களைப்பற்றி ஏதேனும் பழிமொழிகளைப் பறைசாற்றிக் கொண்டும்
பத்து மணி காலத்தைப் பத்து நிமிஷமாகக் கழிக்கின்றவர்கள் சிறிய கிராமம் முதல்
பெரிய நகரம் வரையில் எங்குமுள்ளார்கள், அன்னவர்கள் பெறுமானந்தம் அளவு
கடந்தது. அவர்களுக்கு உலகமெல்லாம் த்ருணம். ... ... ... ❋

## 62. அடியேனுடைய சர்விதசர்வணமொன்று

தேசிகர் அவதரித்த காலமும் திருநாட்டுக் கெழுந்தருளின காலமும்
ஸர்வஜநவிதிதமாகவுள்ளது. அன்று தொடங்கி இன்றளவாக அவிச்சிந்ந பரம்
பரையில் வருமவர்கள் ப்ரதிவாதி பயங்கராசார்ய வம்சஸ்தர்களேயல்லாது
வேறெவருமிலர். இவ்வம்சஸ்தர்கள் இன்றைக்கும் தங்கள் பரம்பரையில்
வேதாந்தாசார்யரென்றும் நயனாசாரியரென்றும் நாமகரணம் செய்து
வருகிறார்கள். இவர்களை அசலாக்கி வேறுசிலர் தங்களை தேசிகாநுபந்திகளாகச்
சொல்லிக் கொள்ளவாரம்பித்தது எந்தவாண்டிலென்பதை எளிதாக அறிந்து
கொள்ள இயலும். தேசிகனுடைய பரச்சத க்ரந்த ரத்னங்களில் ஏதேனு
மொன்றுக்காவது இந்த நவீனர்களின் முன்னோர்கள் வியாக்கியான மியற்றிய
துண்டோ? இவர்களுக்கு ப்ரவசந பரம்பரையில் கிடைத்த தேசிக க்ரந்தம் ஒன்று
வது உண்டோ? கி. பி. ௲ 1860க்கு மேலல்லவோ இவர்களில் சிலர் ரஹஸ்ய
வியாக்கியான மெழுதவும், சிலர் ஸ்தோத்ர வ்யாக்கியான மெழுதவும், சிலர்
(தேசிகப்) பிரபந்த வியாக்கியான மெழுதவும் புகுந்திருக்கிறார்கள். இதை நாம்
எத்தனை தடவை யெடுத்துக் காட்டியிருக்கிறோம். "இது சர்விதசர்வணம், பிஷ்ட
பேஷணம்" என்று தோஷம் கூறலாமிவர்கள். இதுவும் ஒரு தூஷணமே
யாதலால் இந்த வகையில் நம்மைக் கண்டித்து விட்டதாக இவர்கள் த்ருப்தி

யடையலாமத்தனே. தேசிகர் அவதரித்துப் பரச்சத க்ரந்தங்களை யருளிச்செய்து திருநாட்டுக் கெழுந்தருளியபின் நானூறு ஸம்வத்ஸரகாலம் இவர்கள் எங்கிருந்தார்கள்? என்ன செய்துகொண்டிருந்தார்கள்? என்கிற நம்முடைய கேள்வி நாற்பது வருடங்களுக்கு மேலாகத் தொடர்ந்து வருகின்றது. தேசிகரைப் பற்றியோ ஸ்ரீ ராமாநுஜரைப் பற்றியோ மற்றுமுள்ள நாதயாமுநாதிகளைப் பற்றியோ ஆழ்வார்களைப் பற்றியோ இவர்களில் ஒருவராவது ஒரெழுத்தாவது எழுதியிருப்பதுண்டோ வென்று நாம் கேட்கிற கேள்வியை இவர்கள் உபேக்ஷிக்க முடியாது. இக்கேள்வியை இவர்கள் நம்மை நோக்கிக் கேட்கிற பக்ஷத்தில் நாம் தாராளமாக விடையிறுக்கவல்லோம். ஸ்ரீ வசநபூஷண மீமாம்ஸாபாஷ்யம், ரஹஸ்யத்ரயமீமாம்ஸாபாஷ்யம், தாத்பர்யதீபிகை முதலாக விளங்கிவரும் வடமொழி நூல்களும், பெரியவாச்சான்பிள்ளை ஸ்ரீ ஸூக்திகளுக்கும் மணவாள மாமுனிகளின் ஸ்ரீ ஸூக்திகளுக்கும் அரும்பத விளக்கங்களாகவும் காப்பாகவும் அவதரித்துள்ள தென்வடமொழி நூல்களும் ஸமீபகாலத்தில் (அதாவது இரண்டு மூன்று நூற்றாண்டுகளுக்குள்) தோன்றியவையல்ல. பூர்வாசாரியர்களுள் பெரும் பான்மையோர்க்கு ஸந்ததி அநுஸ்யூதமாய் இடையறாது வந்துகொண்டிருக்கிறது. உடையவர் காலத்து ஆசார்ய புருஷர்களோ, மணவாளமாமுனிகளின் காலத்து ஆசார்ய புருஷர்களோ [அஷ்டதிக்கஜாசாரியர்கள்] இவர்களின் ஸந்ததி பரம்பரையார்கள் ஆங்காங்கு திவ்ய தேசங்களில் ப்ரதிஷ்டிதர்களாக விளங்குவதொன்றே போதுமானது. பெரியநம்பி ஸந்ததியார் நாங்கள் என்றோ, திருமாலையாண்டான் வம்சஸ்தர்கள் நாங்கள் என்றோ, திருக்கோட்டியூர் நம்பி பரம்பரையினர் நாங்கள் என்றோ, அனந்தாழ்வான் திருவம்சத்தவர்கள் நாங்கள் என்றோ, எம்பார் ஆழ்வான் முதலியாண்டான் வம்சத்தவர்கள் நாங்கள் என்றோ, பிரதிவாதி பயங்கர வம்சியர்கள் நாங்கள் என்றோ, சோளஸிம்ஹபுரம் தொட்டயாசாரியர் ஸ்வாமி குலத்தவர் நாங்கள் என்றோ, கிம்பஹுநா? வேதாந்தாசார்ய வம்சஸ்தர்கள் நாங்கள் என்றோ சொல்லிக்கொண்டு திவ்ய தேசங்களில் தலைகாட்டுவதற்கு எதிர் வகுப்பில் ஒருவருளரோ? ... ... ... ... ❀

## 63. அடியேனுடைய மற்றொரு பிஷ்டபேஷணம்

ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாயஸ்தர்களுக்கு உபயவேதாந்த ப்ரவர்த்தகத்வம் சிறப்புப் பெயராகக் கிடைத்தது. அதுதன்னிலும் ஸம்ஸ்க்ருத வேதாந்தத்தை இடக்கண்ணாகவும், த்ராவிட வேதாந்தத்தை வலக்கண்ணாகவும் கொள்பவர்களே உத்தம ஸ்ரீ வைஷ்ணவர்களென்கிற அத்யவஸாயமும் அநபாயமாகவுள்ளது.



இதனால் ஸம்ஸ்க்ருத வேதாந்தத்திற்குக் குறைகூறினதாக ஆகாது. ஸ்ரீமந்நாத முனிகள் கோரமாதவஞ்செய்து திராவிட வேதாந்தத்தை ஆர்ஜித்தருளினபடியால் "நாதோபஜ்ஞம் ப்ரவ்ருத்தம்-இதமகிலதம:கர்சநம் தர்சநம் ந:" என்று தேசிகர் கொண்டாடின நம் தரிசனத்தில் திராவிட வேதாந்த ப்ரவர்த்தகர்களுக்கே ப்ரசஸ்தி விளைந்தது. அந்த ப்ரசஸ்தியைப் பெற்றவர்கள் தென்னாசார்ய ஸம்பிர தாயஸ்தர்களே யென்பது ஊர்ஜிதம். எங்கும் திவ்யதேச பரிபாலகர்கள் இவர்களே யன்றோ. இதைப் பற்றி ஒரு பாரதமெழுதினாலும் போராது. அருளாளப் பெருமாளெம்பெருமானார் பணித்த ஞானஸார ப்ரமேய ஸாரங்களுக்கோ, பிள்ளைப் பெருமாளையங்கார் பணித்த அஷ்டப் பிரபந்தங்களுக்கோ ஒரு கோவிலிலும் பரிக்ரஹமேற்படவில்லை; அவற்றில் என்ன குறை கூறமுடியும்? பகவந்நியமனம் ஏற்படவில்லையென்பதே குறை. மற்றுள்ள ஆசாரியர்களின் தனியன்களிற் காட்டிலும் மணவாளமாமுனிகளின் தனியனுக்குச் சிறப்பு ஏற்பட்டதுபோல மணவாளமாமுனிகளின் திவ்வியப்பிரபந்தங்களுக்கும் அப்ரத்ருஷ்யமான சிறப்பு ஏற்பட்டதென்றால் இதற்குப் பொறாமைப்பட்டுப் பயனென்கொல்? விச்வாமித்ர ஸ்ருஷ்டிகள் ஒருகாலும் ஓரிடத்திலும் விலைச்செல்லமாட்டா. ... ... ❀

## 64. காளிதாஸகவிக்கு உவமையில் ஏற்றம்

முற்காலத்தில் காளிதாஸர், பாரவி, தண்டி என்றிப்படி சில கவிகளை யெடுத்து ஒவ்வொருவர்க்கு ஒவ்வொரு விதமான சாதுர்யத்தைச் சொல்லுமடைவில் "உபமா காளிதாஸஸ்ய" என்றார்கள். உவமை கூறுவதில் காளிதாஸர்க்கு மிக்க ப்ரஸித்தியுள்ளது. உண்மையில் அவருடைய க்ருதிகளில் உவமை அபரிமிதமாகவே காணப்படுகின்றது. உபமானமில்லாமல் அவர் சுலோக மியற்றுவது தேடிப்பிடிக்க வேண்டியதாகவே யிருக்கும். அவர் கூறும் உபமானங்களும் சாமான்யமாக இராது. மிகச் சீரியவையாகவே யிருக்கும். அவருடைய ரகுவம்ச காவியமொன்றை மட்டும் எடுத்துக் கொள்வோம். முதல் சுலோகத்தில் இஷ்ட தேவதா நமஸ்காரம் செய்திருக்கிறார். "பார்வதீபரமேச்வரௌ வந்தே" என்கிறார். பார்வதியும் பரமேச்வரனுமாகிற தம்பதிகள் ஒருவரைவிட்டொருவர் பிரியாமல் "அர்த்தோ வா ஏஷ ஆத்மநோ யத் பத்நீ" என்று வேதமோதுகிற படியே இணைந்திருக்கிறார்களென்பதைச் சொல்லத் தொடங்கும்போதே *வாகர்த்தாவிவ ஸம்ப்ருக்தௌ* என்று இந்த உபமானம் கூறியுள்ளார். சொல்லும் பொருளும் ஒன்றைவிட்டொன்று பிரியாமலிருப்பது போல – என்று இங்ஙனே உவமை கூறியிருப்பதானது மற்றையோர்க்குச் சடக்கென ஸ்புரியாது.

ஸ்த்ரீயான பார்வதியின் ஸ்தானத்திலே ஸ்த்ரீலிங்கமான வாக்சப்தத்தை யிட்டும், புமானன பரமசிவன் ஸ்தானத்திலே பும்லிங்கமான அர்த்த சப்தத்தையிட்டும் இயற்றியிருப்பதானது இன்சுவை மிக்கது. மேலே ஒவ்வொரு சுலோகத்திலும் உவமை கூறுதலை விடாமலே யிருப்பதை உற்று நோக்க வேணும். மேலே நாலாவது ஸர்க்கத்தின் முதல் சுலோகத்திலே ‘திலீபனுக்குப் பிறகு ரகுமஹா ராஜன் மிகமிக விளங்கினன்’ என்று சொல்லி அதற்கு இட்டிருக்கிற ஸூர்யாக்நி த்ருஷ்டாந்தம் “அக்நிம் வாவ ஆதித்யஸ் ஸாயம் ப்ரவிசதி” என்கிற வேத வாக்கை யடியொற்றியது. இதனாலும், இத்தகைய மற்றும் பல த்ருஷ்டாந்தங்களாலும் அவர் வேதமுமோதியிருக்கிறாரென்பது நன்கு விளங்குகின்றது. ❋

## 65. உபதேசம் பெறவேண்டுவது அவசியம்

நம் ஆசாரியர்கள் எடுத்துக்காட்டும் பிரமாண வசனங்களுள் “சாஸ்த்ரஜ்ஞாநம் பஹுக்லேசம் புத்தேச் சலநகாரணம், உபதேசாத் ஹரிம் புத்த்வா விரமேத் ஸர்வகர்மஸு”* என்பதுமொன்று. சாஸ்த்ரங்களை வாசித்து ஞானம் பெறுவதென்பது மிகவும் கடினமானது; சிரமப்பட்டுப் பெற்றாலும் புத்தி சலிப்பதற்கே ஹேதுவாகும்; தெளிவு உண்டாகாது. ஆகவே மஹாசார்யர்களின் திருவடி வாரத்தில் காத்திருந்து அவர்களிடம் உபதேசங்கள் கேட்டு அவ்வழியாலே பகவானையறிந்துகொண்டு ஸகல கருமங்களிலும் ஓய்ந்திருக்கவேண்டும்—என்றபடி. இதனால் சாஸ்த்ரங்களை வாசிக்கக் கூடாதென்று கட்டளையிடுவதாக நினைக்கலாகாது. எத்தனை சாஸ்த்ரங்கள் வாசித்தாலும் ஆசார்யர்கள் ஸாரமான பொருளைத் திரட்டியெடுத்து உபதேசிக்கக் கேட்டாலொழியத் தெளிவு பிறவாது, ஆகவே உபதேசம் கேட்பதுதான் முக்கியம் என்னுமிவ்வளவே இந்த வசனத்தின் கருத்தாகத் தேறும். நமது ஸம்பிரதாயத்தில் ஆசாரியர்கள் பரம்பரையாக வந்துகொண்டிருக்கிறார்கள்; இவர்கள் சிஷ்யர்களுக்கு உபதேசங்கள் செய்யவேணுமானால் சாஸ்த்ரஜ்ஞான ஸம்பந்நர்களாயிருந்தாலொழியச் செய்யமுடியாது உபதேசம் கேட்கிற சிஷ்யர்கள் பிறகு ஆசார்ய பதவியில் அமர்ந்து தாங்கள் தம் சிஷ்யர்களுக்கு உபதேசம் செய்ய



ஸ்ரீ ஜகத்குரு காதி ஸ்வாமி



வேணுமானால் தாம் சாஸ்த்ரஜ்ஞான ஸம்பந்நர்களா யிருந்தாலொழியச் செய்ய முடியாது. இப்படி சிஷ்யாசார்ய க்ரமம் தொடர்ந்துவருமிடத்து சாஸ்த்ரஜ்ஞான ஸம்பத்து இன்றியமையாததாகும். ஆகவே *சாஸ்த்ரஜ்ஞாநம் பஹுக்லேசம்* என்கிற இந்த வசனமானது சாஸ்த்ரஜ்ஞானம் ஸம்பாதிக்கவேண்டாமென்று சொல்லவந்ததன்றென்றும் உபதேசம் பெறவேண்டியது ஆவச்யகம் என்பதை வற்புறுத்தவே வந்ததென்றும் கொள்ளக்கடவது. ... ... ❋

## 66. உபதேச க்ரந்தங்களின் உயர்த்தி

நம்முடைய ஸம்பிரதாயத்தில் உபதேச க்ரந்தங்களென்று அருமை பெருமைவாய்ந்த சில நூல்கள் வழங்குவதுண்டே; முமுக்ஷுப்படி, தத்வத்ரயம், ஸ்ரீவசநபூஷணம், ஆசார்ய ஹ்ருதயம் என்றாற்போன்ற திவ்யக்ரந்தங்களுக்கு உபதேச க்ரந்தங்களென்று பெயர். இவற்றால் உண்டாகும் ஞானம் மிகத் தெளிவாகவேயிருக்கும். இவற்றில் அருளிச் செய்யப்படுகிற அர்த்தங்களெல்லாம் நாநாசாஸ்த்ரங்களிலிருந்து தொகுக்கப்பட்டனவேயன்றி ஒன்றுகூட ஸ்வகபோல கல்பிதமாக அருளிச்செய்ததன்று. அந்த சாஸ்த்ரங்களிலிருந்தே நாமும் தெரிந்து கொள்வோமேயென்று நம்போன்றவர்கள் நினைக்கலாகாது. அந்த சாஸ்த்ரங்கள் நமக்குத் தெளிவான ஞானத்தைப் பிறப்பிக்கமாட்டா. கடல்நீரைக் கொண்டு தான் மேகம் வர்ஷிக்கிறது; ஆனாலும் அந்தக் கடல்நீர் நமக்கு உபஜீவ்யமாகிறதில்லை. அது பாநத்துக்கும் உதவுவதில்லை, அபாநத்துக்கும் உதவுவதில்லை. அதுபோல சாஸ்த்ரங்களிலிருந்து நாம் நேராகக் கொள்ளும் பொருள்கள் நமக்குத் தெளிந்த ஞானத்திற்கு ஸாதனமாகமாட்டா. பரமகாருணிகர்களான பிள்ளை லோகாசாரியர் மணவாள மாமுனிகள் போன்ற பேராசிரியர்கள் ஸ்வயம் ஸகல சாஸ்த்ரஜ்ஞான ஸம்பந்நர்களாயிருந்து நம்போன்ற மந்தமதிகளை உஜ்ஜீவிப்பிக்கக் கோலியே உபதேச க்ரந்தங்களென்று சிலவற்றை அவதரிப்பித்தருளினார்கள். நாம் தெளிந்த ஞானம் பெறவேணுமானால் நமக்கு அவையே தஞ்சம் அந்த க்ரந்தங்களை நாம் வரியடைவே கற்றாலுங்கூட உபதேஷ்டாக்களான ஆசாரியர்களிடமிருந்து ஸாரஸங்க்ரஹமான சில உபதேசங்களைத் தனிப்படவும் கேட்டே தெளிவுபெற வேண்டியதாகும். ... ... ... ❋

## 67. முமுக்ஷுப்படியில் ஒரு ஸந்தேஹபரிஹாரம்

பிள்ளை லோகாசாரியர் முமுக்ஷுப்படியில் (ஆரம்பத்தில்) "மந்த்ரத்திலும் மந்த்ரத்துக்குள்ளீடான வஸ்துவிலும் மந்த்ர ப்ரதனான ஆசார்யன் பக்கலிலும் ப்ரேமம் கனக்கவுண்டானால் கார்யகரமாவது" என்றருளிச் செய்திருப்பது ப்ரஸித்தம். இதன் கீழிலும் "திருமந்த்ரத்தினுடைய சீர்மைக்குப் போரும்படி ப்ரேமத்தோடே பேணியநுஸந்திக்கவேணும்" என்றார். அவ்விடத்து வியாக்கியானத்தில் "இப்படி யநுஸந்திக்கவேணுமென்கையாலே ப்ரகாராந்தரேண அநுஸந்திக்கலாகாதென்கிற நியமம் தோற்றுகிறது" என்று மணவாள மாமுனிகள் அருளிச் செய்தார். இவற்றால், ஸக்ரமமாக அநுஸந்தித்தாலொழிய மந்த்ரம் கார்யகரமாகாதென்று தெரிவிக்கப்பட்டதாகிறது. இது இப்படியிருக்க, மேலே (17ம் சூர்ணிகை.) "சொல்லும் க்ரம மொழியச் சொன்னாலும் தன் ஸ்வரூபம் கெட நில்லாது" என்றருளிச் செய்யப்படுகிறது. 'ப்ரேமத்தோடே பேணி யநுஸந்தித்தால் கார்யகரமாகும்' என்ற முந்தின வார்த்தைக்கும், அக்ரமமாகச் சொன்னாலும் கார்யகரமாகும் என்கிற பிந்தின வாக்யத்திற்கும் பரஸ்பரம் விரோதமுள்ளதாக ஸ்பஷ்டமாய்க் காண்கிறது. விரோதம் சிறிதுமில்லை. கேண்மின்; 'திருமந்த்ரத்தை ப்ரேமத்தோடே பேணியநுஸந்திக்கவேணும்' என்றும், '......ப்ரேமம் கனக்கவுண்டானால் கார்யகரமாவது' என்றும் அருளிச் செய்ததானது, மந்த்ரத்தை யநுஸந்திக்கவேண்டிய அதிகாரிகளை நோக்கிச் சொன்னது. 'சொல்லும் க்ரமமொழியச் சொன்னாலும் தன் ஸ்வரூபம் கெட நில்லாது' என்றது மந்த்ரத்தின் பெருமை சொன்னது. இவை பரஸ்பர விருத்தங்களாகமாட்டா. இதற்கு இணங்க ஒரு லௌகிகத்ருஷ்டாந்தம் காட்டுகிறோம் காண்மின்; புக்ககம் செல்லுகிற பெண்ணைக் குறித்துத் தாய்தந்தையர் ஹிதோபதேசம் பண்ணும்போது 'பெண்ணே! நீ புக்ககத்தில் மிகவும் குணசாலினியாய் வாழவேண்டும்; தளிகை செய்கையில் மிகுந்த கவனிப்புடனிருக்கவேண்டும்; உப்புப் புளி காரங்களை திட்டமாகச் சேர்க்கவேண்டும்; இல்லையாகில் மாமியார் மாமனார் பர்த்தா முதலானவர்களின் அன்பை நீ பெறமுடியாது' என்று நன்மை சொல்லுகிறார்கள். இதில் ஒரு தவறுமில்லை; யுக்தமான வார்த்தைதானே இது. மற்றொருகால் மாமியார் மாமனார் முதலானாருடைய நற்குணநற்செய்கைகளைப் புகழ்ந்து பேசும்போது 'இவர்கள் எமது பெண் தளிகையைச் சிறிதும் தூஷிப்பதில்லை; உப்புப் புளிகாரங்களை இரட்டிப்பாகவிட்டு அவள் தளிகை செய்தாலும் பரம போக்யமாக அமுது செய்கிறார்கள்' என்று சொல்லுகிறார்களென்று



வைத்துக்கொள்வோம். இதிலும் தவறில்லை. இவ்வார்த்தைகளில் பரஸ்பர விரோதம் ஏதுமில்லையன்றோ. மகளிருக்கவேண்டியவிதத்தை சிக்ஷிப்பது முந்தின வார்த்தை; பெரியார்களின் கம்பீர ஸ்வபாவத்தைத் தெரிவிப்பது பிந்தினவார்த்தை. நம்முடைய தோஷங்களையும் பெரியார்கள் குணமாகக் கொள்ளுகிறார்களென்பதைக்கொண்டு நாம் குற்றம் செய்யலாகாதன்றோ. ... ... ❋

## 68. நாம் செய்யவேணுமா வேண்டாமா?

எம்பெருமானை நிர்ஹேதுக க்ருபாளுவென்றும் அவ்யாஜதயாளுவென்றும் சொல்லிவருகிறோம். ஸ்வாமி யெம்பெருமானார் *அநாலோசிதவிசேஷாசேஷலோக சரண்ய!* என்று அடிக்கடி எம்பெருமானை ஸம்போதிக்கிறார். இதன் பொருள் என்ன? சிலரிடத்தில் ஏற்றமும் சிலரிடத்தில் தாழ்வுமாகிய வாசி பாராமல் எல்லாரையும் ஒருங்கே ரக்ஷிக்கவல்லவனே! என்பதுதானே இதன் பொருள். வேதாந்தவாரியனும் *நிஷ்கிஞ்சநஜநஸ்வயம் ரக்ஷாதீக்ஷா ஸமதிகஸமிந்தாநயசஸே* என்கிறார். ஒரு கைம்முதலுமில்லாதவர்களைத் தானாகவே மேல்விழுந்து ரக்ஷிப்பதிலேயே தீக்ஷை கொண்டு அதனால் புகழ்மிக்கவன் எம்பெருமான்—என்பதன்றோ இதன் பொருள். இங்ஙனே நம் முன்னோர்கள் ஏககண்டமாக அருளிச்செய்யுமவற்றை உற்று நோக்குமிடத்து நம்மிடத்தில் ஒருவகையான கைம்முதலும் இருக்கலாகாதென்றும், ஏதாவது இருந்தால் அது எம்பெருமானுடைய திருவருளுக்கு இடையூறாகுமென்றும் தெரியவருகிறதல்லவா? இதுவே சாஸ்த்ரார்த்தமானால் *மந்மநா பவ மத்பக்தோ மத்யாஜீ மாம் நமஸ்குரு* இத்யாதிகளான பல்லாயிரம் விதிகள் பழுதாகியொழியுமன்றோ? குருவியின் கழுத்திலே பனங்காயைக் கட்டினாற்போலே எத்தனை கர்த்தவ்யங்களை யேறிட்டு சாஸ்த்ரங்கள் விதித்திருக்கின்றனவென்று பார்த்தால் அவை கங்குகரையில்லாமலன்றோ காண்கின்றன. அவையெல்லாம் அர்த்தமில்லாத வார்த்தைகளென்றா சொல்லிவிடுவது? நாம் அகிஞ்சநர்களாகவே யிருக்கவேண்டுமென்பது சாஸ்த்ரார்த்தமா? விதி சாஸ்த்ரங்களுக்குக் கட்டுப்பட்டு விஹிதங்களைக் குறையறச் செய்யவேணுமென்பது சாஸ்த்ரார்த்தமா? என்று வேதாந்திகளுக்குள் விசிகித்ஸை தோன்றக்கூடியதுண்டு. செய்துகொண்டுதானிருக்கிறோம்; செய்ததில் சேராது—என்பதே முடிவு. மேலே விரிவு காண்க. ... ... ... ❋

## 69. எம்பெருமானுக்கும் ஆழ்வார்க்கும் வாதப்ரதிவாதம் = எம்பெருமானுடைய வாதம்

பகவத் விஷயம் ஈடு முப்பத்தாறாயிரப்படியில் (5—7—3.) * கருளப்புட் கொடி சக்கரப்படை* என்கிற வானமாமலைப் பாசுரத்திற்கு அவதாரிகை இங்ஙனேயுள்ளது:—“ அருளாய் என்கிறீர்; அருளக்கடவோம்; அதிலொரு தட்டில்லை; ஆனாலும் *சாஸ்த்ரபலம் ப்ரயோக்தரி *கர்த்தா சாஸ்த்ரார்த்தவத்த்வாத்* அன்றோ. அருள் பெறுவார் பக்கலிலேயும் சிறிது உண்டாகவேணுங் காணுமேயென்ன; இது மேலுத்தைக்கு இட்ட மர்யாதையோ? கீழத்தைக்கு ஏதேனுமுண்டோ? ஆனபின்பு இத்தலையில் கிஞ்சித்காரத்தைவிட்டு உன்க்ருபையாலே செய்தருளா யென்கிறார். இவ்வளவும்வர இதுக்குமுன்பு நீ நிர்ஹேதுகமாக விஷயீகரித்தபின்பு மேலும் நீ செய்தருளவேணுமென்கிறார்”—என்று. ஸகல சாஸ்த்ர தத்வஜ்ஞர்களில் தலைவரான நம்பிள்ளையினுடைய இந்த ஸ்ரீஸூக்தியினால் என்னவிதமான சாஸ்த்ரார்த்தம் தேறுகிறதென்று பார்க்கவேணும். இதில் எம்பெருமானுடைய வொருவாதமும் ஆழ்வாருடைய வொரு ப்ரதிவாதமும் அமைக்கப்பட்டிருக்கின்றது. எம்பெருமானுடைய வாதம் எவ்விதமானது? ஆழ்வாருடைய ப்ரதிவாதம் எவ்விதமானது? என்று முன்னம் பார்க்கவேணும்; ஆழ்வாருடைய ப்ரதிவாதம் யுக்தமான முறையிலுள்ளதா? என்று பிறகு பார்க்க வேணும். எம்பெருமானுடைய வாதம் என்னவென்றால்; பேறு பெறவேண்டியவர்கள் ஒரு கைம்முதலுமில்லாமல் வாளா பெற்றுவிடமுடியாது; பேறு பெறுதற்குரிய வழிகளை [ஸாதனங்களை] நான் சாஸ்த்ரங்களில் பஹுமுகமாகத் தெரிவித்திருக்கிறேன்; அவற்றை யநுஷ்டிக்குமவர்களுக்குப் பேறுகிடைக்குமே யொழிய ‘என் பக்கல் ஒன்றுமில்லை’ என்பார்க்கு ஒரு பேறும் கிடைக்காது. ஒரு முதலுமில்லாதவர்களும் பேறு பெற்றுவிடுவதென்றால் ஸர்வமுக்தி ப்ரஸங்கம் வரும். சாஸ்த்ரார்த்தங்களும் கலங்கிப்போகும். அப்படியாகாமைக்காக நான் நூல் வரம்பு இட்டிருக்கிறேன்; அதைக் கடக்கலாகாது அதைப் பரிபாலனம் பண்ணினார்க்கொழிய மற்றையோர்க்குப் பேறு கிடைக்காது; ஆழ்வீர்! நீர் என் பக்கலில் ஒன்றுமில்லையென்று சொல்லிக்கொண்டு பேறுபெற விரும்புவது பயனற்றது—என்கிற விது எம்பெருமானுடைய வாதம். இதில் ஒருவிதமான குறையும் சொல்லமுடியாது. *மயர்வற மதிநல மருளப்பெற்ற ஆழ்வார் இதை உள்ளபடி தெரிந்து கொள்ளாதவருமல்லர். வணக்குடைத் தவநெறிவழிநின்று புறநெறிகளை கட்டு, உணக்குமின்பசையற அவனுடையுணர்வு கொண்டுணர்ந்தே* [திருவாய்மொழி 1-2-5] என்பது முதலான பாசுரங்களில் இதனை ஆழ்வார்தாமே வெளியிட்டுமிருக்கிறார். ஆனால் எம்பெருமானுடைய வாதத்திற்கு ஆழ்வார் செய்யும் ப்ரதிவாதம் கேண்மின்; ... ... ... ❋



## 70. ஆழ்வாருடைய ப்ரதிவாதம்

பிரானே! எமக்கு நீ கரணகளேபரப்ரதானம் பண்ணி எம்மை நீ யுண்டாக்கினது நாங்கள் ப்ரார்த்தித்தோ? அல்லவே; *அசிதவிசேஷிதாந் ப்ரலயஸீமநி ஸம்ஸரத: கரணகலேபரைர் கடயிதும் தயமாநமநா:* என்றும், *அசிதவிசிஷ்டாந் ப்ரலயே ஜந்தூந் அவலோக்ய ஜாதநிர்வேதா. கரணகலேபரயோகம் விதரஸி வ்ருஷசைலநாதகருணே! த்வம்* என்றும் சொல்லுகிறபடியே உன்னுடைய நிர்ஹேதுக க்ருபையினாலன்றோ கரணகளேபரப்ரதானம் பண்ணிற்று. இதனால் ஸம்ஸாரிகள் பக்கலிலே உனக்கொரு நிர்ஹேதுக கருணையுண்டென்று தெரிய வருகிறதே. அந்த கருணை நித்யஸ்ரீர் நித்யமங்கலமாக எப்போதும் விளங்கக்கடவதேயன்றி ஒருகாலிருந்து மற்றொருகால் மறையுமதன்றே. அந்த க்ருபையைக் கொண்டே பரம புருஷார்த்தத்தையும் தந்தருளத் தட்டென்ன? முதலில் ஒரு கைம்முதலையும் எதிர்பாராமல் காரியம் செய்த நீ இப்போது மாத்திரம் பேற்றுக்குக் கைம்முதல் வேணுமென்கை யுக்தமாகுமோ?—என்கிறவிது ஆழ்வார் செய்யும் ப்ரதிவாதம். ... ... ... ❋

## 71. ஆழ்வாருடைய ப்ரதிவாத விமர்சனம்

ஆழ்வாருடைய இந்தப்ரதிவாதம் யுக்தந்தானாவென்று விவேகிகள் விமர்சிக்க வேண்டும். ஆதியில் எம்பெருமான் நமக்கெல்லாம் கரணகளேபரப்ரதானம் பண்ணினது நிர்ஹேதுகமானவொரு அநுக்ரஹத்தின் கார்யமேயாயினும், கரணகளேபரங்களைக் கொடுத்து சாஸ்த்ரங்களையும் காட்டிக்கொடுத்து, அவற்றில் ஸ்வேஷ்டப்ராப்தி ஸாதனங்களையும் தெரிவித்து அவ்வழியாகத் தன்னைப்பற்றுவார்க்கே பேறு தருவதாக வெளியிட்டிருக்கிறானென்னுமிடம் அபலபிக்கவொண்ணாது. இதுதன்னை ஆழ்வார் அறியாதவரல்லர். அறிந்துவைத்து வழியல்லாவழியில் ப்ரதிவாதம் செய்வது எங்ஙனே யுக்தமாகும்? ஆகையாலே ஆழ்வாருடைய ப்ரதிவாதம் அயுக்தந்தானே? என்னவேண்டா. ஆழ்வாருடைய திருவுள்ளம் என்னவென்றால்—இதுதான் முக்கியமாகக் குறிக்கொள்ளத்தக்கது. இப்போது தெரிவிக்கப்போகிற விஷயம் ஆழ்வாருடைய திருவுள்ளம் மாத்திரமன்று; ஸகல ஆசாரியர்களுடையவும் ஸகல மஹர்ஷிகளுடையவும் ஸகலசாஸ்த்ரங்களினுடையவும் கருத்து இதுவே காணீர். எதுவென்னில்; அடுத்த விண்ணப்பம் காண்க. ... ❋

## 72. ஸகலசாஸ்த்ர ஸாரார்த்த விண்ணப்பம்

பேற்றின் கனத்தையும் நாம் செய்யும் ஸாதநாநுஷ்டானத்தின் புன்மையையும் உற்றுநோக்குமிடத்து அந்த கனத்த பேற்றுக்கு எதையும் ஸாதனமாக நினைக்கத்தகாது. அதற்கு ஏற்ற ஸாதனம் உலகில் கிடையவே கிடையாது. ஸர்வசக்தனான சரண்யன் இதையொரு வியாஜமாகக் கொண்டு காரியம் செய்கிறானென்று நாம் நினைக்கலாமே யொழிய இதை ஸாதனமாகக் கொண்டு செய்கிறானென்று நினைக்கவே தகாது. கீதையில் *ந ஹி கச்சித் க்ஷண மபி ஜாது திஷ்டதி அகர்மக்ருத்* என்று சொன்னபடியே நம்முடைய கரணக்ராமங்கள் குர்வத்ரூபங்களாகையாலே எப்போதும் ஏதேனுமொரு செய்கையைச் செய்துகொண்டேயிருப்பனவாதலால் நாம் வெறுமனேயிருக்கப் போகிறதில்லை. செய்கிற காரியங்களில், சூது சதுரங்கம்பொருவது முதலியனவாகச் சில செய்கைகளும், பகவத்பாகவத ஸேவை செய்தல் ஸத்க்ரந்த காலக்ஷேபங்கள் செய்தல் முதலியனவாகச் சில செய்கைகளும் தேறுகின்றன. நன்மைகளையே செய்து வருகிறோமென்றுமில்லை. தீமைகளையே செய்து வருகிறோமென்றுமில்லை. எல்லாவற்றையும் கலந்த கட்டியாகச் செய்துவருகிறோம். நன்மைகளைச் செய்யும்போது நமக்கே ஒரு ஆத்மத்ருப்தியுண்டாகிறது. நம்முடைய ஜன்மஸாபல்யம் பெற்றதாகவும் நினைக்கிறோம். புழு குறித்தது எழுத்தாமாபோலே நம்முடைய செயல்கள் அவன் திருவுள்ளத்திலே நல்லதாகப் பட்டுவிட்டால் இது அவனது கருணையின் திறமென்று கொள்ளவேணுமேயல்லது வேறொன்றும் கொள்ளத்தகாது. ஜ்ஞான சக்திகளில் குறையற்ற மஹான்களும் 'அகிஞ்சநோ ஹம்' என்றுதான் உள்ளபடியநுஸந்திக்கிறார்கள். *ந தர்மநிஷ்டோஸ்மி ந சாத்ம வேதீ ந பக்திமாந்— அகிஞ்சந:* என்கிறார் ஆளவந்தார்; *ந்யஸ்யாமி அகிஞ்சந: ஸ்ரீமந்!* என்கிறார் தேசிகர் ஆகிஞ்சந்யமாவது என்ன? தங்களிடம் ஒருவிதமான கைம்முதலுமில்லாமைதானே. இப்படி தங்களை அகிஞ்சநர்களாகச் சொல்லிக் கொள்ளும் பரிபூர்ணர்களுடைய கருத்து என்ன? கனத்த பேற்றுக்குத் தகுதியான கைம்முதல் உண்மையில் ஒன்றுமில்லை யென்பதுதானே. ஒரு சிறிதளவு இருந்தாலுங்கூட அதுதானும் "அந்யதா க்ருதம் அக்ருதம் பவதி" [அடைவுகேடாகச்செய்தது செய்யாததோடொக்கும்] என்கிற நியாயத்தின்படி அஸத்கல்பமேயாகும். அன்றியும், *ஜாயமாநம் ஹி புருஷம் யம் பச்யேத் மதுஸூதந:, ஸாத்விகஸ் ஸ து விஜ்ஞேயஸ் ஸ வை மோக்ஷார்த்த சிந்தக:* என்கிற ப்ரமாணத்தினால் ஜாயமாந கடாக்ஷம் பெறாதவர்களுக்கு மோக்ஷார்த்த சிந்தையே உண்டாகமாட்டாதென்று



தெளிவிக்கப்படுகிறது. ஜாயமாநகடாக்ஷமாவது-கருக்குழியில் கிடக்கும்போதோ, கருக்குழியினின்று வெளிவரும்போதோ நேருகிற பகவத் கடாக்ஷம். அஃது உள்ளவர்களுக்கே ஸத்ப்ரவ்ருத்தி ஏற்படும்; அஃதில்லாதவர்களுக்கு ஒருகாலும் ஸத்ப்ரவ்ருத்தி யுண்டாகாது என்பது நூற்கொள்கை. இதையடியொற்றியே *கருவிலே திருவிலாதீர்!* என்று திருமாலையிலருளிச் செய்தது. ரஹஸ்யத்ரய ஸாரத்தில் *நிதாநம் தத்ராபி ஸ்வயமகில நிர்மாண நிபுண:* என்று தேசிகர் பணித்ததும் இதை யடியொற்றியே. நிதாநம் என்பதற்கு ஆதிகாரணம் என்று பொருள். சேதநர்களுக்கு விளையும் ஸகல ஸுக்ருதங்களுக்கும் பகவானே மூலகாரணமென்று முடிந்தபின்பு, நம்மிடத்தில் ஏதோ ஸுக்ருதமிருப்பதாகவும், அது பேற்றுக்கு ஸாதனமான கைம்முதலாகவும் கொள்வதற்கு நியாயமேயில்லை— என்பதுதான் ஸகலசாஸ்த்ர ஸாரார்த்தம். ஆகவே ஆழ்வாருடைய ப்ரதிவாதம் மிகவும் ஸமஞ்ஜஸமானதேயென்று முடிந்தது. ... ... ✽

## 73. ஸ்ரீமதுபயவே. காரப்பங்காடு ஸ்வாமி— "உபய வேதாந்த வித்யாநிதி."

சென்னைமாநகரில் ப்ரஸித்த ப்ரவக்தாவாக விளங்கிவரும் ஸ்ரீ மதுபயவே. காரப்பங்காடு வேங்கடாசார்ய ஸ்வாமியை யறியாத ஸ்ரீ வைஷ்ணவர்களில்லை. ஏறக்குறைய இருபத்தைந்து ஸம்வத்ஸரமாக ஸ்வாமியின் ப்ரவசனங்கள் சென்னைமாநகரில் பல பேட்டைகளில் நடைபெற்றுவருகின்றன. சென்னையில் மட்டுமன்று; பாம்பே, கோவை, சேலம், சித்தூர் முதலான பல வெளிநகரங்களிலும் கோயில் ஸ்ரீ வில்லிபுத்தூர் மதுரை வானமாமலை திருநாராயணபுரம் முதலான அனேக திவ்ய தேசங்களிலும் ஸ்வாமியை யெழுந்தருள்வித்து ப்ரவசனங்கள் கேட்டு க்ருதார்த்தரானவர்கள் எண்ணிறந்தவர்கள். பரம ஸாத்விகமான முறையில் பிரவசனம் செய்யவல்லவர் ஸ்வாமியொருவரேயாவர். வீண் வம்புப்பேச்சுக்களையும் ஹாஸ்யக்கதைகளையும் புகவிடாமல் பூருவாசாரியர்களின் ஸ்ரீ ஸூக்தி ரேகையை அணுமாத்ரமும் கடவாமல் "நாமூலமுச்யதே கிஞ்சித் நாநபேக்ஷிதமுச்யதே" என்னும்படியாக உபந்யஸிக்கவல்ல ஸ்வாமியின் ப்ரவசனங்களுக்குத் தனிச்சிறப்புண்டு.

ஸ்வாமியின் மாதாமஹரும் பித்ருஸ்தாநீயருமான கீர்த்திமூர்த்தி சிங்கப்பெருமாள் ஸ்வாமியோடு அடியேனுக்கு நெருங்கின பழக்கமிருந்தது. அந்த ஸ்வாமியினுடைய ப்ரபாவம் அத்விதீயமானது. திலீப சக்ரவர்த்திக்குப் பிறகு

ரகுமஹாராஜன் அரசுபுரியும் படியைச் சொல்லுகின்ற காளிதாஸ மஹாகவி "நிசாந்தே நிஹிதம் தேஜஸ் ஸவித்ரேவ ஹுதாசந:" என்று வைதிகமான த்ருஷ்டாந்தத்தை யெடுத்துக்காட்டினார். ஸூர்யன் அஸ்தமித்த பிறகு அவனுடைய ஒளியைப் பெற்று அக்நிபகவான் ஜ்வலிக்குமாபோலே யென்றார். அதே ரீதியில் சிங்கப்பெருமாள் ஸ்வாமியின் தேஜஸ்ஸைத்தம்மில் கொண்டுள்ள ஸ்வாமி மிகமிக விளங்கிவருவது வியப்பன்று. இக்காலத்திற்குரிய உபந்யாஸாநுக்ரஹத்தோடு நில்லாமல் ப்ராசீந பத்ததியையும் விடாமல் உபய வேதாந்த க்ரந்தங்களைக் காலக்ஷேபமாகவும் நடத்திவரும் ஸ்வாமிக்கு உலகமெல்லாம் பல்லாண்டு பாடக் கடமைப் பட்டுள்ளது.

நிகழும் பங்குனித் திங்களின் புநர்வஸூ நக்ஷத்ரத்தில் ஸ்வாமிக்கு ஷஷ்டியப்த பூர்த்தி மஹோத்ஸவம் ப்ராப்தமாகின்றது. இதுபற்றி உலகமெல்லாம் உகக்க வேண்டுமேயாயினும் "வையம்மன்னிவீற்றிருந்து விண்ணுமாள்வர் மண்ணூடே" என்கிற நம்மாழ்வாருடைய ஆசாஸனத்திற்கு முக்கிய லக்ஷ்யமான எம்பெருமானாரைப் போலே யெழுந்தருளியிருக்கவேண்டிய ஸ்வாமிக்குப் பிராயத்தில் பாதி பாகம் கழிந்ததாகிறதே யென்கிற மனக்கேதம் அடியேன்போல் வார்க்குள்ளது. எம்பெருமானாரைப் போலவே ஸ்ரீ வைஷ்ணவ ஸ்ரீயோடு நெடுங்கால மெழுந்தருளியிருந்து ஆழ்வாரெம்பெருமானார் மணவாளமாமுனிகளின் திவ்ய ஸூக்தி திவ்யார்த்த ப்ரவசன துரந்தரராய் நீடூழி விளங்கவேணுமென்று பெருந்தேவி மணவாளனை பேரருளாளன் திருவடிகளிலே பிரார்த்திக்கிறேன். இந்த ஸமய விசேஷத்தில் உபய வேதாந்த வித்யாநிதி யென்னும் விருதை ஸ்வாமிக்குச் சூட்டுகின்றேன்.

இங்ஙனம்: **P. B. அண்ணங்கராசாரியர்.**
17-3-66.

## 74. முன்தொடர்ச்சி விண்ணப்பம்.

கீழே கண்ட விண்ணப்பத்தின் சார்பாகப் பூர்வாங்கமாகவும் உத்தராங்கமாகவும் சில விஷயங்கள் விஜ்ஞாபிக்க வேண்டியவையுண்டு. பூர்வோத்தராங்களிரண்டையும் சேர்த்து இந்த ஒரே விண்ண்ப்பமாக அமைக்கிறேன். சென்னையில் Free India என்னும் வாரப்பத்திரிகை (ஆங்கிலம்) நெடுநாளாக வெளிவந்து கொண்டிருப்பது உலகமறிந்ததே. அதன் ஆசிரியர் (Editor) ஸ்ரீமான். D. கிருஷ்ணமூர்த்தி யென்பவர் எனக்கு நெடுநாளைய நண்பர். இருவரும் ஸஹோதரபாவனை கொண்டேயிருந்து வருகிறோம். அவர் 16-3-66 தேதியில்



எனக்கு ஒருகடிதமெழுதினார் - ஸ்ரீஉ.வே. காரப்பங்காடு ஸ்வாமிக்கு ஷஷ்டியப்த பூர்த்தி ஸமீபித்திருப்பதால் அதைப்பற்றி நமது பத்ரிகையில் வெளியிட வேண்டியதாகச் சில ஆப்தர்கள் கேட்டுக்கொண்டபடியால் அதற்கு நான் ஸம்மதித்திருக்கிறேன்; அந்த ஸ்வாமியைப் பற்றி தேவரீருடைய வியாஸமொன்று கிடைத்தால் அதை நான் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துப் பிரசுரம் செய்து கொள்வேன். இதைப்பற்றி என்னிடம் பிரஸ்தாபிக்க வந்தவர்கள் "காரப்பங்காட்டு ஸ்வாமிக்கும் P. B. A. ஸ்வாமிக்கும் அவ்வளவு மனப்பொருத்தம் இல்லாமையால்... " என்று ஏதோ சொன்னார்கள். அது எனக்கொன்றும் புரியவில்லை. அடியேன் விரும்புவது அநுசிதமாக இருந்தால் திருவுள்ளம் போல் செய்வது-என்றெழுதியிருந்தார். அதைக்கண்டவுடனே நான் அவர் விரும்பியபடி என்னுடைய ஆத்மானந்தத்துடன் ஸ்ரீமத். காரப்பங்காடு ஸ்வாமியைப் பற்றி அக்ருத்ரிமமாக ஒரு வியாஸமெழுதியனுப்பி அத்துடன் அவருக்கு நீண்டதொரு கடிதமுமெழுதினேன். (அதன் ஸாரமாவது)—

வித்வான்களுக்குள் விஷய சர்ச்சைகள் நேருவதும் அபிப்ராய பேதங்கள் விளைவதும் அதனால் வாதப்ரதிவாதங்கள் தொடங்குவதும் அது காலபலத்தாலோ விதி பலத்தாலோ அபிவிருத்தியடைவதும் எங்குமுள்ளதென்பது உனக்குத் தெரியாததன்றே. இந்த ரீதியில் காரப்பங்காடு ஸ்வாமிக்கும் எனக்கும் பலபல வாதப்ரதிவாதங்கள் மலிந்திருந்ததுண்டு. சுமார் இரண்டாயிரம் ரூபாய் வரையில் செலவு செய்து அந்த ஸ்வாமியின் வாதங்கள் பலவற்றையும் நான் கண்டித்துப் பல புத்தகங்கள் வெளியிட்டிருப்பதுமுண்டு; இதெல்லாம் உலகப்பிரசித்தமே. அதனாலென்ன? ஸ்நேஹபங்கத்தை விளைத்துக்கொண்டு போராடுவதென்பது என்னியற்கையில் இதுகாறும் கிடையாது. அந்த ஸ்வாமியின் திருவுள்ளம் என்றைத்து எப்படியுள்ளதென்பதை நானறியேன். என் மனம் அந்தஸ்வாமி திறத்தில் நெடுநாளைய ஸஹஜப்ரீதிவிச்வாஸங்கள் சிறிதுங்குன்றாமல் பரமபவித்திரமாகவே யுள்ளதென்பதை எம்பெருமானறியச் சொல்லுகிறேன் —என்றெழுதியனுப்பினேன். அவர் மிக்க மகிழ்ச்சியுடன் என்னுடைய அபிநந்தன வியாஸத்தை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துத் தமது பத்ரிகையில் உடனே பிரசுரம் செய்துவிட்டார். உலகமெங்கும் அது பரவியேயுள்ளது. அந்த வியாஸத்தின் பிரதியொன்றை காரப்பங்காடு ஸ்வாமியின் அந்தரங்கர்களுக்கு அன்றேயனுப்பினேன். அந்த வியாஸம் ஒருவருடைய நிர்ப்பந்தத்திற்காக எழுதினதன்று, ஆரோபித பாவனையுடனும் எழுதினதன்று என்பதை உலகமுணரவே அதை இங்கும் (78 ஆம்விண்ணப்பமாக) வெளியிட்டிருக்கிறேன். அடியேன் நெடுநாளாக நடத்தி

வரும் தெலுங்கு பாஷை ஸ்ரீராமாநுஜ பத்ரிகையிலும் (நெ.164ல்) முகப்பு வியாஸமாக இது வெளியிடப்பட்டுள்ளது. அதுவும் உலகம் பரவியுள்ளது. ஆக இவ்வளவால் என்னுடைய மனத்தூய்மையை விவரித்தபடி. இது நிற்க. மேல் நிகழ்ச்சி கேண்மின்.

**"காரப்பங்காட்டுக் கருணைமுகில்"** என்றொரு சிறு புத்தகம் ஒருவரால் வெளியிடப்பட்டு என் பார்வைக்கு இன்று (26-3-66) வந்தது. இதில் ஸ்ரீஸ்வாமியிடத்தில் உண்மையான பக்தியும் நேசமுமுள்ள சிலபெரியார்கள் தம்தம் ப்ரேமபரீவாஹமாகச் சிலகட்டுரைகளையெழுதி வெளியிட்டுள்ளார்கள். அவைஉண்மையில் மிகக் கொண்டாடத்தக்கவை. சாதகும்பமயகும்பகத தீர்த்தஸலிலத்தில் மதிராபிந்து மிச்ரணம் நேர்வதுபோல இரண்டுமூன்று கட்டுரைகள் தூய்மையின்றிக்கே சேர்ந்திருக்கின்றன. அவற்றுள் (பக்கம் 36ல்) **அமைதியின் திருவுருவம்** என்கிறவொரு கட்டுரை மிகச் சிறு வயதினரொருவர் பெயரால் வெளியிடப்பட்டுள்ளது. அதிலுள்ள விஷமமான ஒருசிறு விஷயம்—

> சில வருஷங்களுக்குமுன்பு த்ரௌபதீ விஷயத்தில் அம்ருதஸாகரமனைய கருத்துக்களைத் தெரிவித்து உலகத்தை மகிழ்வித்தருளினகாலத்தில் வேங்கடார்ய சதகமென்றொரு தூஷணக்ரந்தத்தை ஒரு ஸ்ரீவைஷ்ணவஸ்வாமியே (இங்கு திருநாமத்தைக் குறிப்பிட விரும்பவில்லை) வெளியிடவும் அதை நம் ஸ்வாமி தம்முடைய அபரிமிதமான சாந்திக்ஷாந்தி கருணாதிகுணங்களாலே பொறுத்துத் திருவுள்ளமுகந்து......தம் கருத்தை ஸ்தாபனம் பண்ணினதை இவ்வளவு குறுகிய காலத்திற்குள்ளாக எந்த ஸ்ரீ வைஷ்ணவஸ்வாமியும் மறந்துவிட்டிருக்கமுடியாது.

என்பதாம். இதில் பிரஸ்தாவிக்கப்பட்டுள்ள வேங்கடார்ய சதகம் [ஸ்ரீவேங்கடார்யசதகம்] அடியேனுடையதே. 116 சுலோகங்கள் கொண்ட இந்நூல் தமிழுரையுடனும் விரிவான முன்னுரையுடனும் 27—8 –1959ல் அடியேனுடைய வைதிக மநோஹராவென்னும் ஸம்ஸ்க்ருத மாஸிக பத்ரிகையின் அநுபந்தமாக (7 வருடங்களுக்கு முன்பு) வெளியிடப்பட்டது. இதை ஒருவரும் மறந்திருக்க முடியாதென்றது ஸத்தியமே. ஸ்வாமியோடு நேர்ந்த பல விவாதங்களுக்கு முற்றுப்புள்ளியிட்டது இந்த நூல்தான். விவாதம் விளைந்த விஷயங்களில் த்ரௌபதீ விஷயம் ஒன்றேயன்று. (1) நப்பின்னைப் பிராட்டி. (3) கப்யாஸ ச்ருதி. (3) தயிரரவப்பாடம் (4) லக்ஷ்மணன் அஸத்யவாதி. (5) மந்தோதரிப் புலம்பல். (6) கட்டில் - கட்டிலில். (7) வாத்ஸல்யம். (8) யௌவனம்



வந்து தலைக்கட்டினபோது.........என்று இனைய பல விஷயங்களில் விவாதம் விளைந்து இவை யெல்லாவற்றுக்கும் அசைக்கவொண்ணாத நிரூபணங்களினால் நிகமனம் செய்திருப்பது இந்த சதகக்ரந்தம். ஸமீபத்தில் காலஞ்சென்ற மந்தாரம் மணவாள செட்டியாரென்பவர் இந்த சதகத்தைக் கண்டபாடம் செய்து பரீக்ஷை கொடுப்பவர்களுக்குப் பரிசளிப்பதாகப் பிரசுரம் செய்து காருமானி கலாசாலை வித்யார்த்திகள் சிலர்க்குப் பரிசளித்துமிருக்கிறார். இற்றைக்கும் வித்வான்களின் சிரோபூஷணமாக விளங்குவது இது. ஸ்வாமியோடு அடியேன் விஜ்ஞாபித்த விவாத விஷயங்களெல்லாம் இந்நூலிலுள்ள நூற்றுப்பதினாறு சுலோகங்களில் அலசியலசி ஸித்தாந்தார்த்தம் நிலைநாட்டப்பட்டுள்ளவாற்றை இன்றைக்கும் என்றைக்கும் தடஸ்த வித்வான்கள் காணலாம். இந்நூலின் பிரதிகள் இற்றைக்கும் நூறுக்கு மேலுள்ளன. அபேக்ஷகர்கள் அரைரூபாய் ஸ்டாம்பு அனுப்பிப் பெறலாம். திருமழிசை பாஷ்யம் என்பவர் எழுதியதாக வெளிவந்துள்ள கட்டுரையில் வேங்கடார்ய சதகமென்றொரு தூஷணக்ரந்தத்தை ஒரு ஸ்ரீ வைஷ்ணவஸ்வாமி வெளியிட்டாரென்றிருக்கும் வாக்கியம் பாஷ்யமென்கிற அவரால் எழுதப்பட்டிருக்க ப்ரஸக்தியே கிடையாதென்றறிந்த யான் அவரையே நேரில்கண்டு கேட்டு உண்மை தெரிந்து தெரிவிக்கும்படி என்னுடைய ஆப்தர்களுக்கெழுதியிருந்தேன். அந்த பாஷ்யநாமா எழுத்துமூலமாக எனக்கே தெரிவித்திருப்பதாவது, இந்த விஷயத்தில் தான் ஏமாற்றமடைந்துவிட்டதாக. (இதற்குமேல் விரிவுவேண்டா.)

இவ்வளவோடும் நிற்கவில்லை; இரண்டு பெரிய வியாஸங்களை யெழுதியனுப்பி இவற்றை ஸ்ரீ ராமாநுஜன் மூலமாகப் பிரசுரம் செய்தருளவேணுமென்று தெரிவித்திருப்பதையும் உலகமுணரவேணும். இரண்டில் ஒரு வியாஸத்தின் பிரமேயமாவது, மைலாப்பூரிலிருக்கும் ஒரு வைணவர் டவுனில் கோவிந்தப்ப நாய்க்கன் தெருவில் சமீபகாலத்தில் ஸ்ரீ ராமாயணோபந்யாஸம் நிகழ்த்தியதாக எழுதிக்கொண்டுபோய் **'ஸ்ரீ கா. வேயும் கம்பரும்'** என்று மகுடமிட்டு ஸ்வாமியின் பிரவசனங்களில் வெளிவந்த விஷயங்களில், அநுவதிக்கத்தகாத நிந்தைமொழிகளை நிரப்பியிருப்பதாம். (அதை நாம் வெளியிடுவோமென்று கனவிலும் கருத வேண்டா.)

இப்படியெழுதியுள்ள பாஷ்யர் எவ்விதமான சித்தவ்ருத்தியை யுடையவராயிருப்பர் என்பதை விவேகிகள் எளிதினுணரலாம். இந்த வ்யக்தி மிகச் சிறுபிள்ளையென்பதை சென்னைவாஸிகளில் அறியாதாரில்லை. ஸ்ரீ வேங்கடாசார்ய சதகம்

அவதரித்தகாலத்தில் இவர்க்கு அக்ஷராப்யாஸம் ஆகியிருக்குமோ இராதோ! இவர் எப்படியெழுதியிருந்தாலும் அதில் கவலையில்லை. ஆனால் ப்ரக்ருத அபிநந்தன மலரில் இந்த ஸ்ரீ வேங்கடாசார்ய சதகப்ரஸ்தாவம் எங்ஙனே புகுந்ததென்பதை நிஸ்ஸந்தேஹ விபர்யயமாகத் தெரிவிக்கிறேன். விஷமமாக இங்ஙனே யெழுதுவதிலோ எழுதச்செய்வதிலோ காரப்பங்காடு ஸ்வாமி ஒருகாலும் பிரவேசித்திரார்; அவரைச் சேர்ந்த அடியார்களும் அபிமானிகளுங்கூட இதில் பிரவேசித்திரார்கள். பின்னையோவென்னில், இந்த மலர்வெளியீட்டில் வீம்புக்காகவே வந்து தலையிட்ட சிலர் செய்த விஷமச்செயல் இது. என்றைக்கோ போனதை யெல்லாம் அநவஸரமாக நினைப்பூட்டி இதனால் ஸ்வாமிக்கொரு அவநதியை விளைக்க வேணுமென்கிற கெட்ட எண்ணமே யொழிய வேறில்லை. இன்னாரென்று தெரியாத இன்னொருவரிடத்தில் [சக்ரவர்த்தி ஸ்ரீநிவாஸனென்பவரிடத்தில்] கட்டுரையொன்று எழுதி வாங்கி அதில் "காரப்பங்காடு ஸ்வாமி சொன்ன விஷயத்தையே திரும்பத்திரும்பச் சொல்லிக் கொண்டிருப்பர்; இப்படி ஒன்றையே திரும்பத திரும்பச் சொன்னால் தான் விஷயம் அழுத்தமாக நெஞ்சிற் படும்" என்றெழுதச் செய்திருப்பதைப் பார்ப்பவர்கள் ஸ்வாமியிடத்தில் உண்மையன்புள்ளவர்கள் தலையிட்டுச் செய்த காரியமன்றிது என்றறுதியிடத் தட்டுண்டோ?

ஒரு ஆசாரியர் ஒரு சிஷ்யனை நோக்கி "நீ என்னை ஆங்காங்கு நிந்திப்பதாகச் சொல்லுகிறார்களே, என்ன ஸமாசாரம்?" என்று கேட்க, சிஷ்யர் விஜ்ஞாபிக்கிறார் "ஸ்வாமீ! அப்படி அடியேன் நிந்தித்திருப்பேனாகில் தேவரீர் திருவடியில் புழுவாகப்பிறப்பேன்" என்று. இதைக் கேட்ட ஆசாரியரும் மற்றவர்களும் "ஐயே! இப்படி சபதமிடுகிறானே, இவனா நிந்தித்திருப்பன்? இவன் தான் உண்மையான சிஷ்யன்" என்பர்களாம். புழுவாகப் பிறப்பவன் ஆசாரியன் திருவடியில்தான் பிறக்க வேணும் போலும்.

முடித்துக் கொள்ளுகிறேன். அடியேன் உலகுக்குச் செய்துவரும் உபகாரங்களில் நாநாபாஷைகளில் நாநாவித கிரந்தங்களை யியற்றி வெளியிட்டு வருவது தலையானது. அவற்றுள் பிறர் வெளியிடும் அபார்த்தங்களைக் கிழங்கிருந்து கிளராமே களைந்தொழிப்பது மிக முக்கியமானது. அப்படி களைந்தொழித்த அடியேனுடைய நூற்றுக்கணக்கான நூல்களில் ஒன்று கூட இதுவரை எள்ளளவும் பங்கமடைந்ததில்லை. சந்திர ஸூரியர்கள் உள்ளவரை விளங்குவனவேயாம் அவை. ... ... ... ... ❋





## 75. எழுபத்தைந்து பிராயப்பூர்த்தியின் நினைவு வெளியீடுகள்

முடிவில் அன்பர்களுக்கு அடியேன்செய்யும்விண்ணப்பம்:–அடியேனுக்கு எழுபத்துமூன்று பிராயந்தான் இவ்விபூதியநுபவபாக்கிய மென்று சுபக்ருத் ஸம்வத்ஸரத்தில் எண்ண வேண்டியிருந்தது. ஆயினும் பெருந்தேவி மணவாளனை பேரருளாளனுடைய கருணையினாலும் பகவத் பாகவதாசார்ய க்ருபையினாலும் இன்னுஞ் சில காலம் இங்கேயிருந்து அநுபவிக்க ப்ராப்தமாகிறது. 21–2–64 தேதி முதலாக எம்பெருமான் அதிகமான அசக்தியைக் கொடுத்திருக்கச் செய்தேயும், ஒருபுறம் அளவு கடந்த சக்தியையும் அநுக்ரஹித்தருளியிருப்பது அடியேனுக்கே ஆச்சரியம் தருகின்றது. அசக்தியை யுண்டாக்கி வெளியூர்ப் பயணம் முதலிய சில காரியங்களை நிறுத்திக் கொள்ளும்படி செய்தனன். இருந்தவிடத்திலிருந்து கொண்டே உலகுக்கு அரிய பெரிய ஸேவைகள் செய்யும்படி நியமித்தருளி அதற்குப் போதுமான சக்தியையுமளித்தனன் பேரருளாளன். சென்ற க்ரோதி பங்குனி விசாகத்திலிருந்து நிகழும் விசுவாவஸு பங்குனி விசாகம் வரையில் அடியேன் செய்திருக்கும் ஸேவையானது உடல் பரிபூர்ண சக்தியுடனிருக்கும்போது ஐந்தாறு வருஷங்களில்கூட செய்ய முடியாதது. அப்போது செய்தாலும் சிரமப்பட்டுத்தான் செய்யக் கூடியதாயிருக்கும். இப்போதுள்ள அசக்தியை அடியேன் மனமே யறியும்.

இவ்வாண்டில் அடியேன் செய்த ஸேவையை ஆனந்தம் பொங்கி விஜ்ஞாபிக்கிறேன். திருவாய்மொழிக்கு விபுலமாக எழுதி வரும் ஸம்ஸ்க்ருத வியாக்கியானத்தில் ஐந்தாம்பத்தும் ஆரும்பத்தும் முடித்தேன். [இது பெரும்பாலும் அச்சாகிவிட்டது.] நூற்றெட்டுத் திருப்பதிகளுக்கு ஸங்க்ரஹமான ஸ்துதியொன்றும் விபுலமான தொன்றும் ச்லோகமாலிகை. [அச்சாகி வெளிவந்துவிட்டது.] பகவத் கீதார்த்த ஸர்வஸ்வம். இதுவும் ஸம்ஸ்க்ருதம். நாநாவ்ருத்தகதம்பமான 75 சுலோகங்களை வியாக்கியானத்தோடுங்கூட இயற்றி பகவத் கீதைக்கு எம்பெருமானார் திருவுள்ள முகக்கச் செய்த ஸேவையிது. தமிழில் (1) உபந்யாஸசதத்வயம், (2) அஷ்டாதசாஷ்டாதசமஹார்த்தநிதி. (3) ஸ்ரீவைஷ்ணவ ஹஸ்தபூஷணம். (4) எழுபத்தைந்து வினாவிடைகள். இவை யெல்லாம் அச்சேறிவெளிவந்துவிட்டன.

— ஸ்ரீவைஷ்ணவ ஹஸ்தபூஷணம் முற்றிற்று. —

Rgd. No. 2975



## இந்த ஹஸ்தபூஷணத்திலுள்ள திருவுருவப் படங்கள்



(லக்கம்-பக்கலக்கம்)



256. Sri K.P. Chandrakasau,
8, Azad Street,
ERODE.



Edited and Published by P. B. Annangaracharya Swami
for Madras Satgrantha Prakasana Sabha.
Printed by T. A. P. Srinivasavaradan at Sri Venkateswara Press,
Sannidhi Street, L. Kancheepuram.